# ரகுநாதன்

# கதைகள்

மீனாட்சி புத்தக நிலையம்

# ரகுநாதன் கதைகள்

ரகுநாதன்



மீனாட்சி புத்தக நிலையம்

60, மேலக் கோபுரத் தெரு, மதுரை-1

கிளை: 228, திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை, சென்னை-5

# பதிப்புரை

ஆசிரியர் ரகுநாதனைத் தமிழகம் நன்கு அறியும். அவரது நாவல்களும், கதைகளும், கட்டுரைகளும், கவிதைகளும் தமிழ் வாசகர்களின் மனத்தைப் பெரிதும் கவர்ந்தவை. புதுமையும் முற்போக்கும் நிறைந்த கதைகளை எழுதும் இந்த எழுத்தாளர் நம் நாட்டின் தலை சிறந்த கதாசிரியர்களில் ஒருவராகத் திகழ்கிறார். நீண்ட இடைவேளைக்குப் பிறகு இவரது கருத்துச் செறிவுமிக்க, படிக்கப்படிக்க இன்பம் தரும், படைப்புக்களைத் தமிழ் இலக்கிய நண்பர்களுக்கு வழங்கும் நற்பேறு எங்களுக்குக் கிட்டியதில் பெரு மகிழ்ச்சி கொள்ளுகிறோம். இவரது சிறந்த கதைகள் பன்னிரண்டு இத்தொகுதியில் இடம் பெற்றுள்ளன. ஒவ்வொரு கதையும் ஒவ்வொரு தனி அழகுடன் விளங்குகிறது. ஒவ்வொன்றும் ஒவ்வொரு உண்மையை அழுத்தமாகக் கூறுகிறது.

இத் தொகுதியினை முதலில் சக்தி காரியாலயத்தார் வெளியிட்டனர். நல்ல தமிழ் நூல்களை அறிமுகப்படுத்திய சக்தி காரியாலயத்தாருக்கும், ஆசிரியருக்கும் இதய பூர்வமான நன்றி கூறி, இதனை உங்கள் முன் பெருமையுடன் சமர்ப்பிக்கின்றோம்.

மதுரை
18-6-'80

செ. செல்லப்பன்

## ஆசிரியரின் பிற நூல்கள்

**சிறுகதை:** சேற்றில் மலர்ந்த செந்தாமரை
க்ஷணப்பித்தம்
சுதர்மம்

**கவிதை :** ரகுநாதன் கவிதைகள்
கவியரங்கக் கவிதைகள்
காவியப் பரிசு

**நாவல்:** கன்னிகா
புயல்
பஞ்சும் பசியும்

**நாடகம்:** சிலை பேசிற்று
மருது பாண்டியன்

**விமர்சனம்:** இலக்கிய விமர்சனம்
சமுதாய இலக்கியம்
கங்கையும் காவிரியும்
பாரதியும் ஷெல்லியும்
பாரதி : காலமும் கருத்தும்

**வரலாறு:** புதுமைப்பித்தன் வரலாறு

# சமர்ப்பணம்

உலகத்துச் சிறுகதை இலக்கியத்தின் மூல பிதாக்களான செகாவ், மாப்பஸான் முதலிய மேதாவிகளின் கதைகளுக்குச் சமதையாகத் தமிழில் ஒப்புயர்வற்ற சிறுகதைகளை எழுதிய ஒரே எழுத்தாளரும், தமிழ் நாட்டுச் சிறுகதை இலக்கியத்தின் தந்தையும், வறட்டுச் சம்பிரதாயங்களைத் தலைமேல் சுமந்து திரியும் இலக்கியப் பூசாரிகளின் சாபங்களுக்கும் சமர்களுக்கும் அஞ்சாது, தமது இலக்கியம் தலைசிறந்த இலக்கியம் என்பதை நிலைநாட்டியவருமான

## புதுமைப்பித்தனுக்கு

சென்னை
பிப். '51

ரகுநாதன்

## உள்ளே............

# நன்றியுரை

இந்தத் தொகுதியில் இடம் பெற்றுள்ள கதைகள், அவற்றுக்கு அடியில் குறிப்பிட்டுள்ள ஆண்டுகளில் எழுதப்பட்டவை. இவை முல்லை, சந்திரோதயம், காண்டிபம், கவிக்குயில், சிரஞ்சீவி, சக்தி, தேனீ முதலிய பத்திரிகைகளில் வெளி வந்தவை. இவற்றில் பல ஜெர்மன், செக். ரஷ்யன், ஹிந்தி ஆகிய மொழிகளில் மொழி பெயர்க்கப் பட்டுள்ளன. என் கதைகளை வெளியிட்ட பத்திரிகை ஆசிரியர்களுக்கும், பிற மொழிகளில் மொழி பெயர்த்து வெளியிட்ட திருமதி ஹெல்கா ஆன்டன், டாக்டர் கமில் ஸ்வெலெபில், ஏ. இப்ராகிமோவ், திருமதி சரஸ்வதி ராம்நாத் ஆகியவர்களுக்கும் என் நன்றி.

ரகுநாதன்

# வென்றிலன் என்றபோதும் —

'வென்றிலன் என்றபோதும் வேதமுள்ளளவும் யானும்
நின்றுளன் அன்றோ ...

—கம்பரா. யுத்தகாண்டம்.

## 1

பாடி வீட்டின் திட்டி வாசல் நிலை தட்டி வளைந்து நிமிர்ந்த வில்லின் நாண் வீறுப்புடன் நாத ஐங்காரம் செய்தது.

நாணொலி கேட்ட தருமன் திடுக்கிட்டுப் போனான். பயத்தின் பீதி கம்பீரத்தில் பதுங்க எண்ணித் தவித்தது. "யாரது? கர்ணனா?" என்று வாய்விட்டுக் கேட்டுவிட்டான். எனினும் கேள்வியில் நாடி விழுந்து போயிருந்தது. கர்ணனிடம் தோற்றோடி வந்ததால் ஏற்பட்ட பயமும் பேதலிப்பும் நாக்கைக் கட்டிப்போட்டிருந்தன.

"கர்ணன் இல்லை; அவன் காலன்" என்று கூறிக் கொண்டே, தோளிலிருந்து நழுவிய காண்டீபத்தை இழுத்துப் போட்டுக்கொண்டான் அர்ஜுனன்.

"நீயா, அவசரத்தில்—" என்று இழுத்த தருமன் பட்டென்று நாக்கைக் கடித்துக்கொண்டான். எனினும், முகத்தில் பேயறைந்தாற்போல் சவக்களை படர்ந்திருந்தது. நெஞ்சில் திமிறிய பீதியைப் புதைத்துவிட நினைத்த தருமன், "அர்ஜுனா, கர்ணன் தொலைந்தானா?" என்று ஆத்திரத்துடன் கேட்டான்.

அண்ணனுடைய படபடப்பைக் கண்டு அர்ஜுனனின் உதடுகளில் புன்னகை வளைந்தது. "தொலையப் போகி

றுன். அதுவும் என் கையால்!'' என்று கம்பீரமாகக் கூறி விட்டு, பக்கத்தில் கிடந்த ஆசனத்தில் அமர்ந்தான்.

எதிர்பார்த்த பதிலுக்கு எதிர்ப் பதில் கிடைத்ததும் தருமனுக்கு நிதானம் தவறியது. ''கர்ணனைக் கொல்லு முன் பாசறையில் உனக்கு என்ன வேலை?'' என்று எரிந்து விழுந்தான். குரலில் கரகரப்பும் உக்கிரமான ஆங்காரமும் கலந்திருந்தன.

''வந்து—தங்களைப் பார்த்துவிட்டுப் போகலாமென்று தான்'' என்று இழுத்தான் அர்ஜுனன்.

''என்னை எதற்காகப் பார்க்கவேண்டும்? வில்லேந்தத் தெம்பில்லை என்று சொல்லேன். பேடி! பேடிக்கு யுத்த வளப்பம் எப்படித் தெரியும்?'' என்று சீறினன். அன்றைய தோல்வி தருமனின் நிதானத்தையும் மனத்தெளிவையும் மழுங்க அடித்திருந்தது.

அர்ஜுனனுக்குத் தமையனின் சுடுசொல் அஸ்திரம் போல் தைத்தது. போருக்குச் செல்லுமுன் தமையனின் ஆசீர்வாதம் பெற்றுச்செல்ல வந்தவனுக்கு அண்ணனின் அலட்சியத்தைத் தாங்க முடியவில்லை.

''நானு பேடி? தங்களைப்போல் களத்தைவிட்டு ஓடி வந்து, பாசறையில் பதுங்கிக் கிடக்கவில்லையே'' என்று நிதானங்குலையாத குரலில் சொன்னன்.

அர்ஜுனனின் பதில் தருமனின் மனநிலையைக் காலை வாரிவிட்டது: ''கர்ணனும் உன்னைப்போல் வில்லைத்தானே ஏந்துகிறுன். பெண் வேட்டைக்காரனுக்குப் போர்முறை என்ன தெரியும்?''

''அண்ணு! கரும்புக்கு அர்ஜுனன் பணிந்து விடுவான். ஆனல், கர்ணனின் கைவில்லுக்கு அர்ஜுனனும் பணிய மாட்டான். காண்டீபமும் பணியாது!'' என்று கத்தினன் அர்ஜுனன்.

''போடா, உன் காண்டீபமும், நீயும். அன்று துரியோதனன் சபையில் 'தனுவுண்டு காண்டீபம் அதன்

பேர்!' என்று சொல்லமட்டும் தெரிந்ததா? ஆண்மையற்றவனே!'' என்று எதிர்த்தான் அண்ணன்.

''ஆம். அன்று பாஞ்சாலியைத் துகிலுரியும்போது கைகட்டிப் பார்த்துக் கொண்டிருந்தீர்களே. இன்று கர்ணனுடைய அம்புக்கு அஞ்சி, பாசறையில் வந்து பதுங்கிக் கிடக்கிறீர்களே. உங்களுடைய தருமந்தான் இன்று எங்களைத் தட்டழிய விட்டிருக்கிறதே. இவை போதாதா?''

''திரௌபதியைப் பற்றிக் கிளறுதே. அவள் என் மனைவி – நம் மனைவி!''

''கட்டிய மனைவியைக் காப்பாற்ற முடியாதவருக்கு மனைவி வேறு?''

''அர்ஜுனு!'' என்று முகத்தை நெரித்தான் தருமன்.

அர்ஜுனன் ஏறிட்டுப் பார்த்தான். அர்ஜுனனின் கை தன்னையுமறியாமல் காண்டீபத்தை இறுகப் பற்றியது. பழைய நினைப்பில் நெஞ்சம் தயங்கியது; பதில் வரவில்லை.

தருமனும் அயர்ந்து விட்டான். என்றைக்கோ செய்து விட்ட பாபத்தின் குறுகுறுப்பு நெஞ்சைக் குடைந்தது. ''பாண்டு வம்சமே நிர்மூலமாகட்டும். திரௌபதியை எத்தனை தடவை யாயினும் பங்கப்படுத்தட்டும். கௌரவர் கூட்டமே ஆட்சி செலுத்தட்டும். பாண்டு மரபில் ஒரு பேடியும் வாழ்ந்தால்—'' என்று சலித்துப்போய் முனகினுன் தருமன்.

அர்ஜுனன் நிதானத்தை இழுத்துப் பிடித்துக்கொண்டு, ''அண்ணு, இன்றைய தோல்வி தங்கள் நிதானத்தை நிலைகுலைத்திருக்கிறது. கர்ணன் மடிவது நிச்சயம். காண்டீபத்தின் சேவைக்கு கர்ணனின் ரத்தந்தான் கடைசி ஆகுதி'' என்றுன்.

''போதும் உன் பேச்சு'' என்று சினந்துகொண்டு எழுந்தான் தருமன்.

அர்ஜுனனுக்கு நிதானத்தின் பிடி தளர்ந்து விடும் போலிருந்தது. 'அண்ணா' என்று அழைக்க வாயெடுத்தான்.

''என்னை அண்ணன் என்று அழைக்காதே. இங்கிருந்து போகிறாயா, இல்லையா?'' என்று சினந்து குமுறினான் தருமன்.

அர்ஜுனன் எழுந்தான். அவனையுமறியாமல் அவன் கண்களில் நீர் நிரம்பியது. ''போதும். காண்டீபமே தொலைந்து போகட்டும். தங்களுடைய உதாசீனக் கொதிப்பைவிட, கர்ணனின் பாணம் குளிர்ந்துதானிருக்கும்'' என்று கூறிவிட்டு, காண்டீபத்தை எடுத்து முழங்காலில் கொடுத்து முறிக்கப் போனான்.

தருமன் அதைத் தடுக்கவில்லை. விறைப்புடன் நின்றான். மனசில் அத்தனை வெறி.

''அர்ஜுனா!''

அந்தக் குரல் காதில் விழுந்ததும் அர்ஜுனன் திடுக்கிட்டுப் போனான். நிமிர்ந்து பார்த்தான். வாசல் நடை கடந்து உள்ளே நுழைந்த கண்ணன் அர்ஜுனன் கையை எட்டிப் பிடித்தான்.

''உனக்கென்ன, பைத்தியம் பிடித்துவிட்டதா?'' என்றான் கண்ணன்.

''எனக்கு மட்டுமில்லை, பாண்டவர்களுக்கே பைத்தியம் பிடித்துவிட்டது!'' என்று கத்தினான் அர்ஜுனன்.

தருமனின் விறைப்பையும் அர்ஜுனனின் விரக்தியையும் கணத்தில் உணர்ந்துகொண்டான் கண்ணன்.

''தருமா, என்ன நடந்தது?'' என்று தருமன் தோளைத் தடவிக்கொண்டே கேட்டான். தருமன் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை.

அர்ஜுனனே பதில் சொன்னான். ''கண்ணா, போதும் இந்த யுத்தம். பீமனுடைய சபதமும் திரௌபதியின்

கூந்தலும் முடிக்கப்பெருமலே போகட்டும். இத்தனை நிந் தனைக்குப் பிறகும் காண்டீபத்தைக் கைதொடவே கூசு கிறது'' என்று கூறிவிட்டு, காண்டீபத்தை விட்டெறிந் தான்.

தரையில் விழுந்த காண்டீபம் அடிபட்ட பாம்பைப் போலத் துள்ளியெழுந்து படுத்தது.

''அர்ஜுனு, என்ன இது?'' என்று கூறிக்கொண்டே துவண்டு கிடந்த காண்டீபத்தைக் குனிந்து எடுத்தான் கண்ணன். பிறகு, ''தருமபுத்திரா, யுத்தத்துக்குச் செல்லு முன் உன்னிடம் ஆசிபெற்று வரும்படி அர்ஜுனனை நான் தான் அனுப்பினேன். ஆசிபெற வந்தவனிடம் இப்படியா நடந்துகொள்வது?'' என்று நயமாய்ச் சொன்னுன்.

''கண்ணு, உன் வியாக்கியானமே தேவையில்லை என்று பேச்சைச் சுருக்கினுன் தருமன். எனினும் குரலில் விறைப்பு குறைந்து தருமனுக்கு தலையும் தொங்கிப் போய் விட்டது.

''அர்ஜுனு, தருமனுக்குத் தோல்வி வெறி குலைய வில்லை. சரி, நாம் போகலாம். இதோ பிடி வில்லை'' என்று கூறினுன்.

அர்ஜுனன் கை நீட்டவே மறுத்தான்.

''பிடி வில்லை!'' என்று கடுமையாகச் சொன்னுன் கண்ணன்.

''முடியாது. என் கை கூசுகிறது'' என்ருன் அர்ஜுனன்.

கண்ணனுக்கு அர்ஜுனனின் அலட்சியம் கோபத்தைக் கிளறியது.

''அர்ஜுனு, அன்று நான் போதித்ததையெல்லாம் மறந்து விட்டாயா? இதோ, பிடி வில்லை. உன் குருவின் ஆக்ஞை. காண்டீபத்தைப் பிடி!'' என்று ஆணையிட்டான்.

''வில்லை ஏந்தக் கற்றுக் கொடுத்தவர்தான் விரோதி யாய் விட்டாரே. இன்னும் என்ன இருக்கிறது?''

''துரோணருக்கும் மகத்தானவன் நான். நான் உன் ஆத்ம குரு. நீ என் அடிமை.''

''கண்ணா, பகைவன் யாராயிருந்தாலும் பார்க்கக் கூடாது என்றாயே. இன்று உடன் பிறந்த தமையனே என்னை விரோதிக்கும்போது?''

''கர்ணன்...'' என்று எடுத்த வார்த்தையைக் கண்ணன் விழுங்கிவிட்டான். பிறகு, ''அர்ஜுனா, உனக்கு இன்னும் தெளிவேயில்லை. எல்லாவற்றிற்கும் காரண காரியம் நான். கடமையைச் செய்வதே உன் தொழில். அதன் பலனை அறிய உனக்கு அதிகாரம் கிடையாது.''

அர்ஜுனன் தயங்கினான்.

''என் கடமைதான் என்ன?'' என்று சலித்துக் கேட்டான்.

''கர்ணனைக் கொல்வது'' என்றான் கண்ணன். பிறகு அர்ஜுனனைத் தட்டிக்கொடுத்து ''வா, புறப்படு'' என்று அழைத்தான்.

அவனையுமறியாமல் அவன் கை காண்டீபத்தை மீண்டும் பற்றிக்கொண்டது.

''தருமா!'' என்றான் கண்ணன். தருமனோ திரும்பக் கூடவில்லை.

''அர்ஜுனா, உனக்கு நான்தான் சர்வமும். தருமனுக்கு இன்னும் வெறி தணியவில்லை. வா, போகலாம்'' என்று இழுத்தான்.

காண்டீபத்தின் கழன்றுபோன நாணை ஏற்றினான் அர்ஜுனன். நாணேற்றிய விசைப்பில் நரம்பு முறைத்துத் தொனித்தது.

கண்ணன் அர்ஜுனனை கைப்பிடியாக இழுத்துக் கொண்டே நடந்தான். வாசல் நடை கழிந்து வெளியில் செல்லவும் 'அர்ஜுனா!' என்ற தருமனின் குரல் காதுகளில் விழுந்தது.

கண்ணன் சிரித்தான். அர்ஜுனன் கழுத்தைக்கூடத் திருப்பவில்லை.

அரண்மனை மேன்மாட முன்றிலில் நின்று அர்த்த மற்று வானைப் பார்த்துக்கொண்டிருந்தேன். மனசில் கவலைகள் மோதி மோதி நெஞ்சம் மரத்துப் போயிருந்தது. இறுகிப்போன இதயத்துக்குள்ளிருந்து குறுகுறுக்கும் நப்பாசையும், ஒதுக்கமுடியாத துயரத்தின் உறுத்தலும் என்னை நிலை கொள்ள விடாமல் அலட்டின. எனினும், கண்ணீர் சிந்தவோ, வாய் விட்டு அழுது நெஞ்சின் பளுவைக் குறைக்கவோ மனசில் தெம்பும் திறனும் இல்லை.

காரணம் அன்றைய போர். ஒரு புறம் கர்ணன், என் காதலன்; மறுபுறம் அர்ஜுனன், என் கணவன். இருவரும் போர் புரிகிறார்கள். இருவரில் யார் விழுவார்கள்? அவர்கள் வீழ்ச்சியைப் பொறுத்துத்தான் என் வாழ்க்கையும் இருக்கிறது—இப்படியெல்லாம் நெஞ்சக் குகையில் எண்ணங்கள் வெந்து கொண்டிருந்தன.

தூரத்தில் சங்கும் தாரையும் பயங்கரமாக ஒலித்தன. கிழிபட்டு வழிவிடும் காற்றில் வேகங் குறையாது ஹுங்காரிக்கும் அஸ்திரங்களின் ஓசையும் கேட்டது. எனினும் காது மரத்துவிடவில்லை.

திடீரென்று 'அப்பா, மகனே!' என்று அலறும் சப்தம் காதில் விழுந்தது—அதுவும் எங்கள் அரண்மனையிலிருந்து!

மாடத்திலிருந்து கீழே குனிந்து பார்த்தேன். குந்தி தேவி தலைவிரிகோலமாய் 'அப்பா, மகனே!' என்று கதறிக் கொண்டு ஓடினார். அந்தப் பரிதாபக் குரல் என் நெஞ்சில் பாய்ந்து அழுந்தியது. மகன்!—அர்ஜுனமகாராஜாதான் இறந்துபட்டார் என்று மனசில் பட்டது. உடனேயே மனைவி என்ற பாந்தம் மனசைக் கொந்திற்று. குபீலென அழ நினைத்தேன். ஆனால் திறனில்லை. ஒன்றும் புரியாமல் நின்றேன். கணத்துக்குள் மாடமே நிலைபெயர்ந்து தாழ்வதாக உணர்ந்தேன். அவ்வளவு மயக்கம். மாடத்தைவிட்டு இறங்கி, களத்தை நேரில் காண எண்ணினேன். இறங்கி

னேன். ஓடினேன். ஆனால் வழியில் எதிர்ப்பட்ட தாதி என்னைத் தடுத்து நிறுத்தினாள்: ''அம்மா, எங்கு ஓடுகிறீர்கள்?''

''களத்திற்கு'' என்றேன் நிர்விசாரமாய்.

''ஏனம்மா, அர்ஜுன ராஜா ஜெயித்துவிட்டார். கர்ணன் இறந்துவிட்டார்!'' என்று கூறினாள் அவள்.

மனசில் விழுந்திருந்த முடிவிற்கு மாற்ற முரைக்கக் கேட்டதும் என்னால் தாங்கவே முடியவில்லை. கர்ணன் இறந்துபோனார். அர்ஜுனன் இறக்கவில்லை. எனினும் குந்திதேவி 'மகனே!' என்று ஓடியதன் அர்த்தம்? ஒருவேளை இருவருமே......

'இருவருமே' என்ற உணர்ச்சி மனசில் பட்டதும் தலை தெறித்துச் சிதறுவது போலிருந்தது.

களத்துக்கு வைத்த கால்கள் குளிர்ந்துவிட்டன. மயக்கம் போட்டு விழுந்துவிடுவேனோ என்ற பயம் நெஞ்சை வளைத்தது. அப்படியே அரண்மனைக்குள் ஓடிவந்து படுக்கையில் விழுந்தேன். விழுந்த வேகத்தில் நெஞ்சு திறந்து கொண்டதுபோல் இருந்தது. அழுவதைத் தடுக்க முடியவில்லை. அழுதேன். யாருக்காக, எதற்காக என்பதையெல்லாம் உணர மனசில் தெளிவு இல்லை.

கர்ணனின் மரணச் செய்தி மனசை ஊமையடியாய் அடித்துக் கிடத்திவிட்டது. அடி விழுந்த மனசில் நினைத்து நினைத்து எழும் வேதனை யுணர்வில் பழைய கனவு நினைவுகள் வடிவாகித் தேய்ந்து கரைந்து உருமாறிக் கொண்டிருந்தன. பூர்வ நினைவுகளை மறந்துவிடும் பாக்கியம் பெற்றுவிட்டால், இன்று நான் சிந்தனை முடுக்கில் சுற்றிச் சுழலும் சூத்திரப் பாவையாயிருக்க வேண்டியிராதே!

இளமையில் அப்பா என்னிடம் வரும்போதெல்லாம் அர்ஜுனனைப்பற்றியே வருணித்துக் கொண்டிருப்பார். எனக்கு வயசு வரும் முன்னமே, என்னிடம், ''கிருஷ்ணை, நீ யாரைக் கலியாணம் செய்துகொள்ளப் போகிறாய் தெரி

யுமா? அர்ஜுனனைத்தான். அவனுக்கென்றே உன்னை வளர்த்து வருகிறேன்'' என்பார். ஆனால் அர்ஜுனனின் அழகைப்பற்றி நான் கற்பனை செய்துகொள்ளும் போதெல்லாம் உள்ளுக்குள்ளே குறுகுறுப்பும் இன்பக் கிளுகிளுப்பும் ஏற்பட்டாலுங்கூட, அப்பாவை முறியடித்து வெற்றி கண்டவர் என்னும்போது என்னையறியாமல் அவர்மீது குரோத உணர்ச்சிதான் ஏற்படும்.

அண்ணன் திருஷ்டதும்யுனனுக்கோ அர்ஜுனன் என்றால் பிடிக்கவே பிடிக்காது. அவனோ எப்போது பார்த்தாலும் துரியோதனனின் பராக்கிரமத்தைப் பற்றியே சொல்லிக் கொண்டிருப்பான். நான் அத்தினபுரி ராணியாகிவிட வேண்டுமென்று அவனுக்கு ஒரே ஆசை.

எனினும், அப்பா சிறு வயசிலிருந்தே விதைத்து வந்த அர்ஜுனனைப்பற்றிய எண்ணம் மனசில் உறுத்திக்கொண்டேதானிருந்தது. பாண்டவர்கள் அனைவரும் அரக்கு மாளிகையில் வெந்து மடிந்தார்கள் என்ற செய்தி எட்டியதும், அப்பாவுக்கு இடி விழுந்தாற் போலாய்விட்டது. எனக்கோ அர்ஜுனனும் எரிந்து சாம்பலாய்ப்போனார் என்பதைக் கேட்கவே சகிக்க முடியவில்லை. அரக்கு மாளிகை தகனச் செய்தியோடு அர்ஜுனன்மீது எனக்கிருந்த குரோத உணர்ச்சியும் வெந்து மடிந்தது. அர்ஜுனனின் மரணம் எனக்கு ஒரு பேய்க்கனவாகப்பட்டது. ஆனால் அந்தச் செய்தி, அர்ஜுனர் மறைந்தார் என்ற அழியாத உணர்ச்சி, மனசில் 'தனிமை'யைச் சிருஷ்டித்துவிட்டது. சுயம்வரம் என்று கேட்டபோது மனசில் மீண்டும் தெம்பு எழுந்தது. 'பிடிப்பற்று, தாவுவதற்குக் கொம்பற்றுத் தவிக்கும் எனக்கு, சுயம்வரம் என்ற காரணத்தால் ஒரு பற்றுக்கோடு கிடைக்காதா?' என்றுதான் நினைத்தேன்.

சுயம்வர மண்டபத்தில் வந்து நின்றபோது, அதுவும் எனக்கும் மணமகனுக்கும் இடையே வில்லையிட்ட அப்பாவின் கிருத்திருமத்தை நினைக்கும்போது, நான் கடைசிவரைக் கன்னியாகவே இருந்துவிட நேருமோ என்ற பயம் அலட்டியது. வில்லையும், லட்சியத்தையும் ஒதுக்கிவிட்டு

என்னைக்கொண்டே சுயம்வரம் தேடச் சொல்லியிருந்தால், எனக்கிருந்த மனநிலையில் கர்ணனுக்குத்தான் மாலையிட்டிருப்பேன்.

மேலும், அர்ஜுனனுக்குப்பின் கர்ணன் ஒருவரால்தான் அந்த லட்சியத்தை அடிக்க முடியும் என்று பலரும் கூறிவந்த சொல், மண்டபத்துக்கு வருமுன்னமே கர்ணனைப் பற்றி மானசீகமாகக் கற்பனை செய்யத் தூண்டியிருந்தது. என்னை அடைவதற்குரிய பந்தயத்தில் ஒருவரும் வெற்றியடைய மாட்டார்கள் என்றுதான் நினைத்தேன். வில்லை நாணேற்றவே திறனற்றவர்கள் மத்தியிலிருந்து கர்ணன் எழுந்து வந்து வில்லை அநாயாசமாகத் தூக்கி நிறுத்தி நாணேற்றிய சாமர்த்தியம் இன்றும் என் கண்முன் நிற்கிறது. கர்ணன் ஒருவர்தான் வில்லை நாணேற்றினார். அப்போதே என் கைமாலையும் நானும் ஏனோ துடியாய்த் துடித்தோம்.

கர்ணன் வில்லையும் வளைத்தார். இன்னும் அரைக்கணத்தில் எனக்கு அவர் கணவராகி விடுவார் என்று எண்ணினேன். எல்லோரும் அப்படித்தான் நினைத்திருக்கவேண்டும். ஆனால், அந்தப் பாழும் வில்லோ துள்ளித் திமிறி கர்ணனைத் தட்டி வாரிவிட்டது. கர்ணன் ஏற்றிய வில்லின் நாணும் சுழன்று விழுந்து சுருண்டது. கர்ணனும் தோற்றார்.

அர்ஜுனனுக்குப் பின் கர்ணன்—அவருக்கும் இந்தக் கதி! என் கதியும் அந்த வில்லோடு இணைந்து விட்டதா என்று உள்ளம் தடுமாறிற்று.

இந்த வேளையில்தான் பார்ப்பன வேஷம் பூண்டிருந்த அர்ஜுனன் எழுந்து அண்ணனிடம் அனுமதி கேட்டார். அர்ஜுனன் எழுந்ததும் சபையே வாய்விட்டு நகைக்க ஆரம்பித்து விட்டது. வரிந்து கட்டிய பட்டத்தாரும், அரையில் இறக்கி முடிந்த துண்டுமாய் எழுந்து நின்ற அவர் வேஷத்தைக் கண்டு எனக்கும் சிரிப்பு வந்தது. கர்ணன் வளைக்காத வில்லை இந்தப் பிராமணனா வளைக்கப் போகிறான் என்று எண்ணியபோது மனம் குதித்தாலும், கர்ணனின் தோல்வியின் உறுத்தல் நிற்கவில்லை.

ஆனால் அர்ஜுனனோ எவ்விதச் சிரமுமின்றி வில்லை நாணேற்றினார்; வளைத்தார். நிபந்தனைப்படி குறித்த லட்சியத்தையும் அடித்து விட்டார்!

வாய்விட்டுச் சிரித்துக்கொண்ட மண்டபம் முழுவதும் மௌனத்தில் சமாதி யடைந்தது. எனக்கு என்னை உணரச் சக்தியில்லை. பக்கத்தில் நின்ற திருஷ்டதும்யுனனை நிமிர்ந்து பார்த்தேன். அவன் தலை தொங்கிப் போயிருந்தது.

நான் அர்ஜுனனைப் பார்த்தேன். அவருடைய பார்ப்பன வேஷம் என் கண்களை மழுக்கியது.

அர்ஜுனன் சபையை ஒருமுறை சுற்றிப் பார்த்துவிட்டு அண்ணனைப் பார்த்து, ''துருபத குமாரா'' என்று அருமையாக அழைத்தார்.

குனிந்த தலை நிமிர்ந்து அண்ணன் என்னைப் பார்த்தான். பிறகு வாய் திறந்து சொன்னான்: ''கிருஷ்ணை, அவருக்கு மாலையிடு.''

கையிலுள்ள மாலை நடுங்கி பூக்கள் உதிர்ந்தன. எனினும் அவருக்கு மாலையிட்டேன். மாலையிட்டுவிட்டு கர்ணன் இருந்த பக்கம் திரும்பினேன். அங்கு அவரைக் காணவில்லை.

சபை கலைந்தது. நானும் அர்ஜுனனுடன் நடந்தேன். சகோதரர் நால்வரும் பின்னே வந்தனர். குயவர் சேரி சென்றதும், புத்திரர் சொன்ன சொல்லுக்கு, 'ஐவரும் பகிர்ந்து கொள்ளுங்கள்' என்று குந்தி தேவி கூறியதும், நான் மீண்டும் மனமுடைந்தேன். குந்தி தேவியின் அறியா வார்த்தை இது என்று நானும் அப்போது நம்பினேன். ஆனால், இன்று கர்ணனின் ஜென்ம ரகசியம் வெளியான இன்றுதான் குந்திதேவியின் அந்தச் சொல் மிகவும் நிறுத்துச் சொன்ன சொல்லாகத் தோன்றுகிறது.

'ஐவருக்கும்' என்றவுடன் என் நெஞ்சம் நடுங்கியது. அரண்மனைக்கு வந்தபின் அப்பா குந்தியின் முடிவைப் பலமாக எதிர்த்தார். தருமரோ தம் தாயின் நாவில் அதரு

மமே உதிக்காது என்று வாதித்தார். அப்பாவின் ஆட்சேபம் நிலைக்கவில்லை.

ஐவருக்கும் நான் பத்தினியானேன்.

எனக்கு வாய்த்த ஐந்து கணவர்களும் என்னிடம் நடந்துகொண்ட விதம்தான் என்னைக் கர்ணனைப் பற்றிய சிந்தனைக்கு மீண்டும் இழுத்துச் சென்றது. இந்த ஐவருக்கும் மேலாக கர்ணனிடம்தான் எனக்கு மனசு ஒட்டக் கூடிய பாசம் இருந்தது.

தருமபுத்திரன் ஒரு ரிஷிப் பிறவி. அவருக்கு மனைவி என்றால் சதி என்ற தெய்வீகப் பொருள். அவர் பள்ளியறையில் வைத்துக்கொண்டுகூட, திடீரென்று நீதி சாஸ்திரம் போதிக்க ஆரம்பித்து விடுவார். பீமரோ காதலுக்கோ சல்லாபத்துக்கோ ஏற்றவரில்லை. இடிம்பைதான் அவருக்குச் சரியான மனைவி. வில்லை முறித்து என்னை மணந்த அர்ஜுனனுக்கு நான் பலரில் ஒருத்தி. அவருக்குச் சமயத்தில் ஒருத்தி வேண்டும். அது திரௌபதியானாலும், சுபத்திரையானாலும் ஒன்றுதான். நகுல சகதேவர்கள் என் கண்ணுக்கு கணவர்களாகவே தோன்றவில்லை. மதினியின் அன்பு அரவணைப்பில் ஒதுங்க எண்ணும் மைத்துனக் குஞ்சுகளாகத்தான் தோன்றினர்.

இதனால்தான் இந்த ஐவரில் எவர்மேலும் அன்புசெலுத்த முடியவில்லை. உலகமும், அவர்களும் என் பரிவையும் பச்சாத்தாபத்தையும் எப்படி வேண்டுமானாலும் அர்த்தப்படுத்திக் கொள்ளட்டும். எனினும், எனக்கு கர்ணன்மேல்தான் நேர்மையான அன்பு படர்ந்திருந்தது. கர்ணன் நினைவுதான் என் இளமையைக்கூடக் கட்டுக் குலைக்காமல் காத்து வந்தது. இன்று கர்ணன் மடிந்தார். அப்படியானால் ஒட்டிக்கொண்டிருந்த என் வாழ்க்கைக் கனவும் இன்றோடு உதிர்ந்தது என்றுதான் கொள்ளவேண்டுமா?...

படுக்கையில் படுத்து விம்மி விம்மி அழுதுகொண்டிருந்தேன். சுற்றுப்புறச் சூழ்நிலையைப்பற்றிய நினைவுகூட இல்

லாமல் அழுதேன். திறந்து வைத்த நெஞ்சின் வழியாய் கட்டிக்கிடந்த சோகமெல்லாம் பீறியடித்தது. அழுவதில் சுகமிருந்தது; அழுதேன்.

''அம்மா, அம்மா!'' என்று தாதி அழைத்த குரல் கேட்டது.

கண்ணைத் துடைத்தவாறே எழுந்தேன். பக்கத்தில் தாதி நின்று கொண்டிருந்தாள். அவளிடம் என்னவென்று கேட்கக்கூடத் தெம்பில்லை; கழுத்தை மட்டும் நிமிர்த்தினேன். அவள் சொன்னாள்:

''அர்ஜுன மகாராஜா வந்திருக்கிறார்.''

''அர்ஜுனரா?'' என்றேன்.

அதற்குள் அர்ஜுனனே வாசலில் வந்து நின்றார். வெற்றி விஜயனாக வந்த வெறியில் என்னை வந்து அணைந்து கொள்வார் என்றுதான் நினைத்தேன். நானும் அவரை உற்சாகத்தோடு வரவேற்பேன் என்றுதான் அவரும் எதிர் பார்த்திருப்பார்.

இரண்டும் நடக்கவில்லை. அர்ஜுனன் வாசலிலேயே நின்றார். முகத்தில் களை இல்லை; ஆளை மயக்கும் புன்சிரிப்பு இல்லை. கர்ணனைக் கொன்ற களிப்பு இல்லை. நின்றார். நெடுமரம்போல் நின்றார். நான் அவர் பக்கம் சென்றேன்.

''திரௌபதி, நீயும் அழுதாயா?...நான்தான் பாபி!'' என்றார் அவர்.

''பகையை முடிப்பது பாபமா?'' என்றேன்.

''கண்ணன் களத்தில் உபதேசித்தது ஏன் என்று இப் போதுதான் புரிகிறது. கர்ணனைக் கொன்று விட்டேன். ஆனால் கர்ணன் என் அண்ணன்!''

''அண்ணனா?'' என்று அலறிவிட்டேன் நான்.

''ஆம், குந்திதேவியின் தலைப்புத்திரன். பிருதைக்கு துர்வாச முனிவர் உபதேசித்த மந்திரத்தை விஷப்பரீட்சை செய்ததன் விளைவு கர்ணன். அவன் தேர்ப்பாகன் மகனல்ல;

சூரிய புத்திரன். நான் கிடந்த கருப்பையில்தான் அவனும் கிடந்திருக்கிருன். அவன் என் அண்ணன்! உடன் பிறந்த அண்ணன்!'' என்று சொல்லிக்கொண்டே போனுர் அர்ஜுனன்.

எனக்குத் தலை கிறங்கியது. ''உங்களுக்கு எப்படித் தெரியும்?'' என்றேன்.

''எப்படியா? குந்திமாதா களத்தில் கர்ணனை மடிமேல் போட்டுக்கொண்டு ஊரறியக் கதறுகிருளே. உனக்குத் தெரியுமா?'' என்ருர்.

''கர்ணன் குந்தி புத்திரன்'' என்று முணுமுணுத்தது என் வாய்.

''கண்ணனுக்கும் இந்த இரகசியம் முன்னமேயே தெரியுமா?'' என்று கேட்டேன். எனக்குத் துகிலளித்த கண்ணனுக்கு, கர்ணனை நான் விரும்புகிறேன் என்ற ரகசியமும் ஆதியிலிருந்தே தெரியும். குந்தியின் ரகசியமும் தெரிந்திருந்தால் — என்று என் உள்ளம் எண்ணிற்று.

''கண்ணனுக்கும் தெரியும். அதனுல்தானே எனக்கு உபதேசம் பண்ணியிருக்கிருன்'' என்ருர் அர்ஜுனன்.

''பாவி!'' என்று வாய்விட்டுக் கத்திவிட்டேன் நான்.

''கண்ணன் மட்டுமல்ல. குந்தி, நான் எல்லோருமே பாவிகள்'' என்ருர் அர்ஜுனன்.

''பாவி!'' — என் வாய் மீண்டும் புலம்பியது.

''திரௌபதி. நான் வருகிறேன்'' என்று கிளம்பினுர் அர்ஜுனன். நான் தடுக்கவில்லை.

என் உள்ளத்தில் இத்தனை நாளும் மூடி மூடி வைத்த 'பாபத்தின்' உருவம் பிரம்மாண்டமாயிற்று; பயமுறுத்திற்று. ஐவருக்கும் மூத்தவர் கர்ணன்; பாண்டவர்களின் சகோதரர்; குந்தி புத்திரர். அப்படியானுல், என் அதிர்ஷ்டம் ஒரு விரற்கடை தூரத்தில்தான் தவறிப் போயிருக்கிறது. கர்ணனை நானும் மணந்திருக்கக் கூடும். சிந்தனையின் அலைமோதலை என்னுல் தாங்க முடியவில்லை. அழு

வதை என்னால் தடுக்க முடியவில்லை. மனசில் நினைத்து நினைத்து தலைதூக்கும் ஒரே எண்ணம்:

'கர்ணன் மட்டும் இப்போது உயிர் பெற்றெழுந்து வந்துவிட்டால்? அப்போதுதான் எனக்குச் சாந்தி பிறக்கும்!'

3

## தருமன்

"கர்ணனுடைய பராக்கிரமத்துக்கும், நேர்மைக்கும், வள்ளண்மைக்கும் அவன் எங்களில் ஒருவனாக இருந்தால்—" என்ற எண்ணம் எனக்கு அடிக்கடி ஏற்படுவது உண்டு.

எனினும் அவன் என் விரோதி; இன்று எங்களை போர் முகத்தில் எதிர்த்து நிற்பவன்.

அர்ஜுனனை உதாசீனம் செய்தது தவறுதான். 'பேடி!' — கொஞ்சமும் யோசிக்காமல்தான் கூறிவிட்டேன். கண்ணன் மட்டும் வந்திராவிட்டால் குருக்ஷேத்திரமே வேறு விதமாய் மாறியிருக்கும். அன்று கர்ணனிடம் தோற்று வந்ததால் ஏற்பட்ட பீதியின் மூட்டத்தில் என் அறிவு மயக்கம் போட்டுவிட்டது. இல்லாவிடில் அப்படி நடந்திருக்கவே மாட்டேன்.

கர்ணனும் மானுடன்தான். அவனை வெல்ல முடியவில்லையென்றால்? அன்று திரௌபதியின் சுயம்வரத்திலும் கர்ணன் விழுந்து விட்டான். ஆனால் இன்றும் அர்ஜுனனுடைய காண்டீபத்தின் முன் விழுந்துவிடுவான் என்பது என்ன நிச்சயம்? ஆனால், கண்ணன் கைகொடுத்து உதவும் போது அர்ஜுனன் ஜெயித்தே தீருவான். ஜெயித்து விடுவான்.

தூரத்தில் ஏங்கிக்கொண்டிருந்த சங்கின் ஒலி பயங்கரமாக விரிந்து ஹுங்காரமாகச் சிலிர்த்தது. சங்கநாதத்

தின் முழக்கத்தோடு தாரைகளின் ஓசையும் முழங்கிச் சங்க மித்து உள்ளத்தை உலுப்பிற்று.

''பாஞ்சசன்யமா முழங்குகிறது? வெற்றி முழக்கமா?...... அர்ஜுனன் ஜெயித்துவிட்டானு?......கர்ணன் விழுந்தானு? பாண்டவர்களின் கலி விழுந்ததா?''

நான் திகைத்தேன்.

பயத்தின் அலைகள் தேய்ந்து இற்று ஆச்சர்யத்தில் வடிவாகிக் கரைந்தன. தூரத்திலே தெரியும் அந்திவானத்தின் மேகக் கூட்டத்தின் ரத்தக் கொழுப்பு உள்ளத்தில் ஆத்திரத்தையும் வெறியையும் ஊட்டிற்று. எழுந்தேன்.

''அரசே!''

''யாரது?'' என்று கேட்டுக்கொண்டே திரும்பினேன்.

வாயிலில் நின்றுகொண்டிருந்த வீரன் சொன்னுன். ''கர்ணன் விழுந்துபட்டார்!''—வார்த்தைகள் முக்கித் திணறிப் பிறந்தன. ''கர்ணன் இறந்தானு?'' என்று கேட்டேன். ரதத்திலேறிக் களத்துக்கு விரைந்தேன்.

களம் அமைதியாயிருந்தது. கர்ணன் விழுந்துபட்டான் என்று நிச்சயப்படுத்திக் கொண்டேன். கர்ணனைக் கண்டேன்.

கர்ணன் இன்னும் சாகவில்லை. தேர்க்காலின் அடியில் வர்மத்தில் பாய்ந்த வாளியைப் பிடித்தவாறு கிடந்தான். கர்ணனின் குனித்த வில் தேர்ப் பாதங்களில் சிக்கிக் கிடந்தது. மார்பில் புரண்ட மாலைகளை நனைத்து ரத்தம் பரவிப் பாய்ந்தது. முகம் வெளிறி, கண்களில் பூப்படர ஆரம்பித்திருந்தது. போர் வேகத்தில் சுவாச கோசங்கள் பெயர்ந்து மூக்கு வழியாக ரத்தம் வழிந்தோடிக்கொண்டிருந்தது. உலர்ந்த உதடுகளில் சாம்பல் படர்ந்தது. நெளியும் மலைப்பாம்பைப்போல் திரளும் புஜக் கோளங்களும், சுவாசமும் தளர்ந்து கொண்டிருந்தன.

கண்கள் ஒளி மங்கி பூக்க ஆரம்பித்தபோதிலும், ஆழங்காணுத ஏக்கமும் வேதனையும் கண் கறுப்பில் பிரதிபலித்தன.

அவனால் பேச முடியவில்லை. திடீரென்று கூட்டத்தைப் பிளந்துகொண்டு ஓடி வந்தது ஓர் உயிர். வந்த வேகத்தில் விழுந்து கிடந்த கர்ணன்மேல் விழுந்தது, அந்த ஜீவன்.

''அம்மா, வந்துவிட்டாயா?'' என்று வாய் திறந்து கூவினான், கர்ணன். வேதனை நெரிந்த உதடுகளில் புன்னகை குனித்தது.

''அப்பா மகனே'' என்று அலறினாள் அவள்.

''யாரது? கர்ணனின் தாயா? தேர்ப்பாகன்—'' என்று சிந்திப்பதற்குள் அவளே நிமிர்ந்தாள். ''கர்ணா, அன்று உனக்குத் தந்த வரத்தை மறந்துவிடவில்லை. இதோ, என் நெஞ்சின் பாரமும் உன் ஆவலும் தணியட்டும்'' என்று கூறிக்கொண்டே கர்ணனுக்கு ஸ்தன்ய பானம் செய்தாள் அவள்.

நிமிர்ந்தவளைப் பார்த்தேன். அவள் என் தாய் குந்தி! என் தாய் குந்திதேவிதானா, கர்ணனின் தாய்?......

அர்ஜுனன், பீமன், தம்பியர் எல்லோருமே திகைத்தனர். நான் நடுங்கிவிட்டேன். கண்ணனும் நின்றான். சிலையாய் நின்றான்.

குந்திமாதா மனப்பாரம் குறையும் வரையிலும் பிரலாபித்தாள், அழுதாள், அலறினாள், விழுந்தாள், புரண்டாள்!

'கர்ணன் குந்தி புத்திரன்; சூரிய புத்திரன், என் அண்ணன்!'—இவ்வளவும் புரிந்துவிட்டது.

''அண்ணா!'' என்று கர்ணனின் காலடியில் விழுந்தேன். அதற்குள் கர்ணன் இறந்துவிட்டான். என் தலைக் கிரீடம் நழுவி உருண்டு அந்தச் சடலத்தின் காலடியில் புரண்டது.

கர்ணன் என் சகோதரன், குந்தியின் புதல்வன்—இந்த உண்மை என் மனசைப் பிய்த்துக் குடைந்தது.

கர்ணன் என் விரோதி; எனினும் என் அண்ணன்!

''கடைசியில் சகோதர ஹத்திதானா பாண்டவர்களைச் சூழ வேண்டும்? கர்ணன் மட்டும் உயிரோடிருந்தால், இந்த ராஜ்யத்தையே அவன் காலடியில் அர்ப்பணிப்பேனே!'' என்று எண்ணினேன். பக்கத்தில் கண்ணன் நின்றான். நான் அவனைப் பார்த்தேன். அவன் சொன்னான்:

''தருமா, வருந்தாதே. கர்ணன் கதை முடிந்தது!''

## 4

## கண்ணன்

யார் கதை முடிந்தது?

என் கதைதான்.

மகாபாரதம் என் கதை.

கௌரவ பாண்டவ மரப்பாச்சிகளுக்கு நான் தான் சூத்திரதாரன். அவர்களை நான்தான் ஆட்டம் கண்டேன்; நானும் ஆடினேன். இந்திரன், விதுரன், குந்தி, தருமன், திரௌபதி, துரியோதனன் எல்லோருமே என் கைப் பொம்மைகள்.

என் மன விகாசத்தின் பரந்த வெளிதான் குருக்ஷேத்திரம். அதில் இரு சக்திகள் மோதின. அதற்கு பாரத வம்சம் எல்லாம் கருவிகள்—கர்ணன் மத்திய பாத்திரம்.

குந்தி இளமையில் செய்துவிட்ட பாபத்தைப் புதைத்துவிட எண்ணினாள். கர்மாவின் கழுத்தை நெரித்துவிட நினைத்தாள். ஆனால், இன்று அது மீண்டும் தலை நீட்டி, அவள் உள்ளத்தையே பலி கொண்டது. ஜென்ம ஜென்மாந்திரத்துக்கும் கர்மா தன்னைத் தொடரும் என்பதை, அன்று—பிருதையாக இருந்த அன்று—குந்தியால் உணர்ந்து கொள்ள முடியவில்லை.

அர்ஜுனனின் மமதை கர்ணனின் மறைவோடு மடிந்தே தீரும். திரௌபதி—பாவம்! அவளும் கர்ணனை உள்ளத்தினுள்ளேயே, கொன்று விடவேண்டியதுதான்.

குந்தியின் பாவம், திரௌபதியின் காதல், அர்ஜுனனின் கர்வம், தருமனின் மடமை, துரியனின் கயமை —எல்லாம் கர்ணனின் மரணத்தோடு மாயவேண்டியவை தாம்.

கீதை உபதேசத்தைப் பெற்றவன் அர்ஜுனன்தான். ஆனால் கீதா போதனையின் கண்கண்ட சாதனைச் சாட்சி இந்தக் குருக்ஷேத்திரம்!

குருக்ஷேத்திரத்தில் விளையாடியவர்கள் எல்லோரும் என்னுள் அடங்கியவர்கள். நானே ஆட்டுவித்தேன். நானே ஆடினேன்.

கொன்றவனும் நான், கொல்லப்பட்டவனும் நான். இதுதான் என் அலகிலா விளையாட்டு!

## 5

## அர்ஜுனன்

கர்ணன் என் அண்ணன்; என் எதிரி.

இந்த உணர்ச்சியை என்னால் லகுவில் ஒதுக்கிவிட முடியவில்லை. காரண காரியங்களுக்கு மூலமான கண்ணனின் விளையாட்டு என்று மானசீக பக்குவத்தோடு கர்ணனின் மரணத்தை விலக்கிவிடவும் முடியவில்லை.

கர்ணன் என் எதிரி. இளமை முதல் அவனைப் பகைத்தே வந்திருக்கிறேன். இருவர் கையிலும் வில்லேறிய நாளிலிருந்து ஒருவருக்கொருவர் விரோதிதான்.

இன்று நான் கர்ணனைக் கொன்றுவிட்டேன். எனினும் அவனை நான் வென்றதாகவே எண்ண முடியவில்லை.

கர்ணனின் மரணத்துக்காக இந்திரனும் கண்ணனும் அவனிடம் பிச்சை ஏற்கவேண்டி யிருந்தது. தான் பெற்ற பிள்ளையிடம் தாய்மையுணர்ச்சியைக் காட்டி ஏமாற்றி, நாகாஸ்திரப் பிரயோகத்துக்கு, குந்தி தடை விதிக்க வேண்டியிருந்தது. கடோத்கஜனை இந்தச் சூதில் பணயம் வைத்து வெட்டுக் கொடுக்க வேண்டி வந்தது.

கர்ணனைக் கொன்றுவிட்டேன். எனினும் வெற்றி எனக்கல்ல. ஆவைப் பறிகொடுத்த அந்தணன் சாபமும், குந்தியின் வரமும், இந்திரனின் பிச்சையும், கடோத்கஜப் பணயமும் கர்ணனை நிராயுதனாக்கி விட்டன.

நான் வெற்றி யடைந்தேனாம்!

பாரதம் முடிந்துவிட்டதாம்!

வளைந்து நிமிர்ந்து உயிர்களை வதைத்த காண்டீபம் கர்ணனின் ரத்தத்துக்காகத் தவம் கிடந்தது. எனினும் காண்டீபத்துக்குப் புகழ் கர்ணன் புகழேதான்.

கர்ணன் இல்லாவிட்டால் காண்டீபம் ஏது? அர்ஜுனன் எங்கே? எனக்கு வில்லுக்கு விஜயன் என்ற பெயரும் ஏது? கர்ணன் புகழை இன்று நான் என் புகழாக்கிக்கொண்டேன். ஆனால் இதற்கு இத்தனை பேரின் உதவியா?

இன்று காண்டீபம் அயர்ந்து கிடக்கிறது. கர்ணனின் வாழ்வுதான் காண்டீபத்தின் வாழ்வு. கர்ணன் இறந்தால், காண்டீபமும் தானாகவே இறந்துபடும். கர்ணன் போன்ற எதிர்க்குறி இல்லாவிட்டால், காண்டீபத்தை வைத்துக் கொண்டு வேட்டையா ஆடுவது? கர்ணனின் மரணத்தோடு காண்டீபத்தின் நாணும் அறுந்தது; அதன் வாழ்வும் அறுந்தது.

காண்டீபம் வாழ வேண்டுமென்றால் கர்ணன் வாழ வேண்டும். கர்ணன் வாழ்ந்தால்தான் நான் வாழ முடியும். இல்லையெனில், நான் வில்லும் சுமக்கப் பிறந்தவன்தான்!

# 6

குருக்ஷேத்திரக் களத்தின் ரத்தச் சேறு காய்ந்து கருகி, மண்ணோடு மண்ணாய்ப் போய்விட்டது. நரிகளும் கழுகுகளும் குகைகளிலும் வனங்களிலும் அடங்கிவிட்டன. கீறிப் பிளவுபட்ட பூமியில் அக்கினிக் கொதிப்பு அடங்கி, ஊற்றுக்கள் சுரந்தன. கலங்கிய ஆகாசத்தின் மூட்டம் தெளிந்து, வானம் நிர்மலமாயிற்று.

இன்று இந்திரப் பிரஸ்தத்தில் தருமன் ராஜ்ய மேற்றுக் கொள்கிறான்.

பிதுர்க்களுக்குக் கடன் செய்து கண்ணீர் சிந்திய தருமனுடைய அதே கைகளில் இன்று மகுடாபிஷேக தீர்த்தம் வழிந்தோடியது. அன்று கர்ணனின் காலடியில் உருண்டோடி மண்ணில் புரண்ட கிரீடம் இன்று தருமனின் சிரசில் ஏறியிருந்தது.

தருமன் இன்று பாரதத்தின் அரசன். ஏகசக்கராதிபதி.

முடிசூடி அமர்ந்திருந்த தருமபுத்திரன் சந்நிதியில் குறுநில மன்னர்களும், சிற்றரசர்களும் தங்கள் காணிக் கைகளைச் செலுத்தினார்கள். வைரங்கள், ரத்தினங்கள், முத்துக்கள், பட்டு, தந்தம்—என்னவெல்லாமோ குவிந்து கொண்டே இருந்தன.

குந்தி புத்திரனை ஆசீர்வதித்தாள். கண்ணன் பாராட்டினான். தம்பியர் ஒவ்வொருவரும் அண்ணன் திருவடியில் வந்தனம் செலுத்தினர். கடைசியில் அர்ஜுனன் வந்தான். கையில் நாணவிழ்த்த காண்டீபமும் இருந்தது. வந்தவன் வணங்கவில்லை; நின்றான்.

''அர்ஜுனா, ஏன் வாடியிருக்கிறாய்?'' என்று தருமராஜா கேட்டான்.

''அன்று பாசறையில் தாங்கள் பேசியது ஞாபக மிருக்கிறதா?''

''கர்ணன் கொலையை நினைக்கிறாயா?''

''ஆம். காண்டீபத்தின் சேவைக்கு கடைசி ஆகுதி கர்ணன் என்றேனே. காண்டீபம் குனிந்து நிமிர்ந்தது. கர்ணனும் மாண்டான்!'' என்றான் அர்ஜுனன்.

''பழம் வினையை ஏன் நினைவுக்கிழுக்கிறாய்?''

''அண்ணா, உங்களுக்குத் தமையன் இறந்தானே என்ற வருத்தம். எனினும் தம்பியர் நாங்கள் இருக்கிறோம். குந்தி மாதாவுக்கு தலைப் புத்திரன் மடிந்தானே என்ற துயரம். எனினும் ஐவர் இருக்கிறோம். ஆனால் எனக்கோ ஒரே எதிரி. அவன் போய் விட்டான். காண்டீபத்தின் வலிமைக்குப் பதில் சொல்லக் கூடியவன் கர்ணன் ஒரே ஒருவன்தான். அவன் போய்விட்டான். இன்று நான் தனியன்! தனியன்'' என்று கதறினான் அர்ஜுனன்.

தருமன் திகைத்தான்.

தன்னைத் தேற்றிக்கொண்ட அர்ஜுனன் ''யுதிஷ்டிரா, தங்கள் முன்னிலையில் இதோ என் கைக் காண்டீபத்தை அர்ப்பணித்து விடுகிறேன்'' என்றான்.

தருமன் சிந்தித்தான். அர்ஜுனன் இன்னும் தன் பகைமை உணர்ச்சியைக் கொல்லவில்லை என்று ஆத்திரப் பட்டான். அர்ஜுனனுடைய உண்மையான வீர உணர்ச்சியை அவனால் உணர முடியவில்லை.

தருமன் தன்முன் வைத்த காண்டீபத்தை கோபத்தோடு எடுத்து விட்டெறிந்து விட்டுச் சொன்னான்:

''தரும சாம்ராஜ்யத்தில், வில்லுக்கு வேலையேது?''

பக்கத்து மண்டபக்காலில் மோதிக் கீழே விழுந்தது, காண்டீபம். அதில் நாணின் நாத ஜங்காரம் இல்லை, விறைப்பு இல்லை; வீரியம் இல்லை; உயிர்ப்பும் இல்லை.

பக்கத்தில் நின்ற கண்ணன் சிரித்தது மாத்திரமே கேட்டது.

1946

# ஐந்தாம் படை

## 1

கடைக்காரப் பையன் ஒருவனை அழைத்து, ''ஏலே ஐயா, கீழ வாய்க்காக் கசாப்புக் கடைக்குப் போயி, அரைக்காச் சேரு கொத்துக் கறி வாங்கிக்கிட்டு, குளத்தங்கரைக்கு வந்து சேரு. சேருதியா?'' என்று ஆணையும் கேள்வியும் போட்டுவிட்டு, பெட்டகத்திலிருந்து நாலணுக் காசை எடுத்து விட்டெறிந்தார் சைவத் திருவாளர் நாறும்பூநாத பிள்ளையவர்கள்.

கடைக்காரப் பையன் நடையை விட்டு இறங்கியதும் பிள்ளையவர்கள் சில்லறைகளை வரவு வைக்கத் தொடங்கினுர். மாலைக் கருக்கல் நெருங்கிவிடவும், பக்கத்து 'ஒரு சொல் பிள்ளை'யவர்கள் கடையிலிருந்து ஆறரை மணி யுத்தச் செய்திகள் கர்ஜிக்கவும், தாம் போகவேண்டிய இடத்தை எண்ணி பட்டறையிலிருந்து வெளியிறங்கினுர் பிள்ளை. பின் தம்முடைய மகனை அழைத்து, பட்டறையைப் பார்த்துக் கொள்ளச் சொன்னுர். பிறகு நயினுர் குளக்கரையை நோக்கி நடையைத் தட்டினுர்.

இம்மாதிரி சமயங்களில் தனக்குக் கிடைக்கும் 'டெம்பரவரி' பதவியைக் காயமாக்குவதற்கு, தன் அப்பா என்றைக்கு மண்டையைப் போடுவாரோ என்பதை எதிர்பார்த்து ஏங்கும் அந்தச் செல்வச் சிரஞ்சீவி பட்டறையில் வந்து அமர்ந்து கொண்டான்.

நயினுர் குளக்கரைக்குச் சென்று சனிக்கிழமை கருட தரிசனம் காணுவிட்டால், அன்று இரவு வீட்டில் சுசிருசியான வெந்நீர்ப் பழையதும் வெந்தயக் குழம்பும் இருந்தாலும் கூட, பிள்ளையவர்களுக்குத் தொண்டை நனையாது. ஆதலால்

இரணிய நேரம் கழிந்து கருடாழ்வார்கள் பள்ளி கொள்ளும் முன்னமே தரிசனம் பெற்றுவிட வேண்டும் என்ற தவிப்பால் நடையைக் கொஞ்சம் எட்டிப் போட்டார்.

குளத்தங்கரையில் பிள்ளையவர்கள் சொற்படி கொத்துக் கறியுடன் காத்திருந்தான் கடைக்காரப் பையன். கருட தரிசனத்துக்கென்று ஆட்டுக் கறி வாங்குவதில் நாறும்பூநாத பிள்ளைக்கு மனசில் அருவருப்பு இருந்தாலும், பிள்ளையவர்களுக்குத் தரிசன பலனைத் தேடித் தரும் கருடாழ்வார் சுத்த சைவ நாயன்மாரல்லவே! ஆதலால், ஆட்டுக்கறித் துண்டை ஆகாயத்தில் விட்டெறியும் சாக்கிலேதான் பிள்ளையவர்களுக்கும் தரிசனம் கிட்டிற்று.

தரிசனம் முடிந்த பின் பிள்ளையவர்கள் கீழ்கரைப் புற மடைப் பக்கம் சென்று நித்ய அனுஷ்டானங்களை முடிக்கச் சென்றார். கடன் முடித்துத் திரும்பிய பிள்ளை குளத்தங் கரைப் படியிலிறங்கி, முகங் கால் கழுவி, திருநீற்றைக் குழைத்துச் சம்பிரமமாக அணிந்துகொண்டு கரையேறினார்.

"யாரது? கிளப்புக் கடைப் பிள்ளைவாளா?" என்று பழகிய குரல் காதில் விழவும் நாறும்பூநாத பிள்ளை திரும்பினார். அதற்குள் குரல் கொடுத்த திசையில் இரண்டு உருவங்கள் தாமரைக் குளச் சரிவிலிருந்து ஏறி வந்தன.

"என்ன, தரிசனத்துக்கு வந்தியளாக்கும்!" என்று விசாரித்தது ஒரு குரல்.

"யாரு, சுத்தமல்லிப் பண்ணையா? எங்கே இவ்வளவு தேரத்துக்கு? சேவைக்குக் கூட, வரலே போலிருக்கே" என்று பதிலுக்குச் சம்பிரதாய வரையறை பிசகாமல் விசாரித்தார் பிள்ளை.

"நல்லாச் சொன்னிய. பண்ணையாவது, சேவைக்கு வராமெ இருக்கதாவது? சேவை தவறிச்சின்னாத்தான் அவுஹளுக்குத் தொண்டையிலே தண்ணி எறங்காதே" என்று இடக்காகச் சொன்னார், சுத்த மல்லிப் பண்ணையின் கூட நின்ற ஐ. பி. பிள்ளை. (ஐ. பி. பிள்ளையின் இயற்

பெயர் என்ன வென்பதே பலருக்குத் தெரியாது. ஐ. பி. பிள்ளை என்ற இந்தப் பட்டம் அவருடைய பிதுர்க்களில் யாரோ ஒருவர் 'மஞ்சள் கடுதாசி' நீட்டியதன் விளைவாய் அவருக்குக் கிடைத்த ஒரே பிதிரார்ஜிதம்.)

ஐ. பி. பிள்ளை இப்படிக் குட்டை உடைக்கத் துணியவும், அவருடைய பேச்சு வேலியைத் தாண்டிவிடக் கூடாதே என்று முந்திக்கொண்டு, ''சேவைக்கு வராமப் போறதாவது? அப்பவே சேவை முடிஞ்சிட்டுது. அதனுலே, சும்மா இப்பிடி கிழக்கே போயி காத்தாடிட்டு வாரோம்'' என்றுர் சுத்தமல்லிப் பண்ணை.

சுத்தமல்லிப் பண்ணை இவ்வளவு பேசுவதற்குள்ளாகவே அவருடைய வாயிலிருந்து அடித்த நாட்டுச் சரக்கின் நாற்றம் பிள்ளையவர்களின் சுவாசத்தை உலுப்பிற்று.

சுத்தமல்லிப் பண்ணை போன்ற பெரிய மனிதர்கள் பலர் கருட தரிசனத்தைச் சாக்காகக் கொண்டு, இறைச்சி வாங்கி அதை அப்படியே மிச்சம் பிடித்து, தாமரைக் குளச் சாராயக் கடையில் வறுத்த கறியாக மாற்றிக் கொள்வதும் பிள்ளையவர்களுக்குத் தெரிந்ததுதான். எனினும் ஜாதி அபிமானம், ஊரான் பொல்லாப்பு முதலியன குறித்து அதை வாய்விட்டுக் கூறி வம்புச் சனியனை பிள்ளையவர்கள் விலைக்கு வாங்க விரும்பவில்லை.

''என்ன பிள்ளைவாள். பேசமாட்டிங்கியளே'' என்று பண்ணை விசாரித்ததும், நாறும்பூநாத பிள்ளையவர்கள் கழுத்தில் கிடந்த உத்திராக்ஷத்தைத் தொட்டுப் பார்த்து விட்டு, 'நமசிவாய' என்று தமக்குள் முனகிக் கொண்டார்: ''பேசாமெ என்ன? விசயம் இருந்தால்லெ...''

''அதென்ன அப்பிடிச் சொல்லுதிய? ரெண்டுபட்டுக் கிடந்த ஊரே ஒண்ணுப் போயிரும் போல இருக்கு. பேசற துக்கா விசயமில்லெ'' என்று தாம் பிரேரேபிக்க இருந்த விஷயத்திற்கு அங்குரார்ப்பணம் செய்தார் பண்ணை.

''பிள்ளைவாளுக்கு சமாச்சாரம் தெரியாது போலுக்கு'' என்று மிகவும் பரிதாபத்தோடு விளம்பினூர் ஐ. பி. பிள்ளை.

''விசயத்தை விட்டுச் சொன்னல்'லெ தேவலே. இப்பிடி அளிப்பாங்கதை போட்டியன்ஞ—'' என்று தம் நிலைமையைச் சாதுரியமாய் விளக்கி நின்ருர் நாறும்பூ நாதர்.

ஆவியாக மாறி வரும் சாராய ஏப்பத்தை விழுங்க முயன்றுகொண்டே சுத்தமல்லிப் பண்ணையவர்கள், ''எல்லாம் சொல்லுதேன் வாருங்க. அப்பிடி அந்த அரசடியிலெ உட்காருவம்'' என்று அழைத்துக்கொண்டே, குளத்தை யடுத்து வேம்பும் அரசும் லதாவேட்டிதாலிங்கனம் செய்வதைக் காத்து நிற்கும் விக்னேச்வரரின் திருவடிக்குச் சென்ருர்.

ஐ. பி. பிள்ளையோ தம்மையுமறியாது இளம்போதையில் கால் தடுமாறுவதை வெளிக் காட்டக் கூடாது என்ற உயர்ந்த எண்ணத்தோடு, மிகவும் உரிமை பாராட்டி நாறும்பூநாத பிள்ளையின் தோளில் கை போட்டுக்கொண்டு, ''என்ன பிள்ளைவாள், பண்ணை கூப்பிடுதாகள்'லெ, வாருங்க'' என்று அழைத்துச் சென்ருர்.

பிள்ளையவர்களுக்கு இந்தத் 'தண்ணி வண்டி'களுக்கு மத்தியில் அகப்பட்டுக் கொண்டோமே என்ற பயமிருந்தாலும் 'கடிச்சா முழுங்கிருவானுவ?' என்று உள்மனசு ஊட்டிய தைரியத்தின் துணைகொண்டு, அரச மரத்தடிக்குச் சென்ருர்.

ஆசாமிகளுக்கு போதை ஏறி 'கிறிச்சி' கிளம்புவதற்குள் விஷயத்தைத் தெரிந்து கொண்டு கம்பி நீட்டி விட வேண்டும் என்று நினைத்த பிள்ளையவர்கள் ''என்ன பண்ணையார்வாள், விசயத்தைச் சொல்லுங்க'' என்று நேரடியாகக் கேட்டார்.

''எல்லாம் நம்மவங்க விசயந்தான். நம்ம பெரிய கோயிலு இருக்குதில்லே. அதிலே கும்பாபிசேகம் நடத்தப்

போறுனுவளாம். அதுக்கு நம்ம அண்ணுச்சிகளெல்லாம் இந்தப் பாப்பாரப் பயல்களோடே சேர்ந்துகிட்டு, பணம் பிரிக்கப் போறுனுவளாம். பாத்தியளா?'' என்றூர் பண்ணேயவர்கள்.

''ஊரிலே பஞ்சம் வந்து ஊரே ஆட்டம் கண்டுட்டு தில்லே. உடனே சாமிக்கும் ஆட்டம் கண்டுட்டுது போலுக்கு'' என்று தம் வாழ்க்கையில் அடிமேல் அடியாக அனுபவித்த கஷ்டங்களினுல் மனசில் கனத்துவரும் நாஸ்திக மனப்பான்மையுடன் கிண்டல் செய்தார் ஐ. பி. பிள்ளே.

''ஐ. பி. பிள்ளேவாள், அந்தப் பயலுகளேப்பத்தி ஆயிரம் சொல்லுங்க. சாமியைப்பத்தி சொல்லறதுன்ஞ...... அது நல்லால்லே'' என்று கூறித் தமது தெய்வ பக்தியை நிலைநிறுத்திஞர் பிள்ளே.

உடனே ஐ. பி. பிள்ளேயும் தம்முடைய பேச்சை விட்டுக் கொடுக்காமல் ''சாமியைப் பத்தியா சொல்லு தேன். ஊரிலே பட்டினி வந்ததும், இந்தப் பயலுகளுக்கும் வக்கு அத்துப் போச்சி. சும்மாயிருப்பானுவளா? நல்லா யிருந்த சாமியை நாலு ஆட்டு ஆட்டியிருப்பானுவ'' என்று தமது பேச்சின் உட்கருத்தைக் கம்பீரமாக விரித்துரைத் தார்.

''அப்பிடியுஞ் சொல்லாதிங்க. எல்லாம் சாமி முன்னே திருவுளச் சீட்டு போட்டுப் பார்த்துத் தானே நடத்து தாங்க. சாமியுமா கெட்டதைச் செய்யும்?'' என்று வாதித் தார் நாறும்பூநாத பிள்ளே.

''ஆமா, சாமிதான் கையை நீட்டி முன்னே கிடந்த சீட்டை, 'இந்தா'ன்னு எடுத்து நீட்டிச்சாக்கும். உங்க ளுக்கு உலகமே தெரியலே'' என்று அடித்துப் பேசிஞர் ஐ. பி. பிள்ளே.

''சவத்தை விட்டுத் தள்ளுங்க. சாமியே அவங்க சாமி யாப் போயிட்டுது. நாமெ என்னத்தைச் செய்ய?'' என்று சலித்தார் பண்ணே. அதோடு விடாமல் ''நம்மவங்களே

வெறும் வெக்கங்கெட்ட மூதிய. காலமெல்லாம் அவனு களைப் பகைச்சிட்டு, இப்போ அவனுகளைக் கட்டிக் கிடந்து அளுதானுக, பாருங்க'' என்று தமது சாதியின் தனித் தன்மை மாசுபடுவதைக் குறித்துச் சலித்துக்கொண்டார்.

''சாதி என்னங்க சாதி? இப்பதான் தகப்பன் பேரு தெரியாத பயலுகள்ளாம் பிள்ளைன்னு பட்டம் வச்சிக்கிடு தான். அதுக்குப் பிறகு வெள்ளாளன் என்ன, விவசாரி என்ன?'' என்று தம் குலக் கற்பு அழிந்ததைக் குறித்து விசனப்பட்டுக் கொண்டார் ஐ. பி. பிள்ளை.

''நிசந்தான். நம்மவங்கள்ளயே ஒரு ஒளுங்கு முறை உண்டா? பணக்காரப் பயலுக எல்லாம் மத்தவங்களைச் சேர்க்கக் கூசுதானுவ. கேட்டா, 'நான் காரைக் கட்டான். அவன் ஹி......ஹி......' அப்படிங்கான்'' என்று கொஞ்சம் தைரியத்துடன் தம் மனசிலுள்ளதைக் கூறிவிட்டார் நாறும்பூநாத பிள்ளை. அதன் பிறகுதான் தம்மோடு கூடவே இருக்கும் 'பணக்காரப் பயலுக'ளில் ஒருவரான பண்ணை இருப்பதை உணர்ந்தார் பிள்ளை.

''சரி சரி, சாதியை எதுக்கு சந்திக்கு இழுக்கிய. ஊரு தான் நாத்தமடிச்சிட்டுதே'' என்று சுத்தமல்லிப் பண்ணை தம் வெறியில் நாறும்பூநாத பிள்ளை கூறியதைச் சரிவரக் காதில் வாங்காமல் கூறினார். பிள்ளையவர்களுக்கு இதைக் கேட்ட பின்தான் பயம் தெளிந்தது.

''பிள்ளைவாள், நாங்க இதை எதுக்காகச் சொல்ல வந்தோம்னு, இந்தக் கூட்டத்தோடெ நாமும் ஒத்துத் தாளம் போடுறதே தப்புங்கறேன். பயலுக பணம் பிரிக்க வந்தா நாமெ ஒத்தைச் சல்லி கொடுக்கக்கூடாது. ஆமா'' என்று தம் மனசில் கிடந்த விஷயத்தை ஒருமட்டும் வெட்ட வெளிச்சமாக்கினார் ஐ. பி. பிள்ளை.

இந்த 'வரி கொடா இயக்கத்தில்' கலந்துகொள்ளத் தமக்குத் தைரியம் உண்டா என்பதை அறிய முடியாத பிள்ளை ''நாம குடுக்கலென்னு, கும்பாபிசேகம் நின்னிறப் போவுதா?'' என்று ஐ. பி. பிள்ளை பிரேரேபிக்கும் 'தனிப்

பட்ட சத்தியாக்கிரஹத்தின்' பலவீனத்தை எடுத்துக் காட்டினார்.

"நிக்குது, நிக்கலெ. இந்தப் பயலுக மடியிலே நம்ம காசு ஏறப்பிடாது" என்று அடித்துப் பேசினார் ஐ. பி.

"இருந்தாலும், சாமி காரியம் பாருங்க. இதிலே தடங்கல் செய்றதுன்னு........." என்று இழுத்துப் போட்டார் பிள்ளை.

"நீங்க என்ன இப்பிடிச் சொல்லுதிய? உங்களுக்கு உலகமே தெரியலெ. சாமிக்கா இவ்வளவும் செய்யப் போறானுக? எல்லாம் வயித்துச் சாமிக்குத்தான்" என்று போதை படியிறங்கி நின்ற வேளையில் தம்மிருக்கையையும் அறிமுகப்படுத்திக்கொண்டார் பண்ணை.

"ஆமா, ஊரிலாம்பட்ட பார்ப்பானுங்களுக் கெல்லாம் படியளப்பாங்க. நம்மவனும் கையிலே ஆப்பிட்டதெச் சுருட்டிக் கிடுவானுவ. எல்லாம் காரியமில்லாமலா கட்டியளுவாங்க" என்றார் ஐ. பி. பிள்ளை.

பிள்ளையவர்களோ விட்டுக் கொடுக்கவில்லை. சாமி காரியத்தை அவ்வளவு லகுவில் உதறிவிடக் கூடிய மனப் பக்குவம் அவருக்கு இல்லை. அதனால் பிராமண போஜனத்தை எதிர்க்கும் அந்த இரட்டையரிடம் "அன்னதானம் செய்தா புண்ணியந்தானே" என்று மிகவும் அடக்கத்துடன் கூறினார்.

"அன்னதானமா? வேலையத்த கழுதைகளுக்கா விருதாச் சோறு?" என்று சீறினார் ஐ. பி.

"என்ன பிள்ளைவாள், ஏன் தயங்குதிய? பயப்படாமெ அவனுக வந்து கேட்கிறப்போ கையை விரிச்சிருங்க" என்று தைரியமூட்டினார் பண்ணை.

"சரி" என்று அந்த உடனடிப் பிரச்னையைத் தீர்க்கும்படி ஒரு வார்த்தையைப் போட்டு, நழுவ உத்தேசித்

தார் நாறும்பூநாதர். வேறு வழி அவருக்குத் தோன்ற வில்லை.

பிள்ளை ஆமோதித்து ஓர் நிமிஷ நேரத்தில் குளக் கரைப் படியிலிருந்து ஓர் உருவம் கரையேறி வந்தது. ''யாரது? முருகவிலாஸ் பிள்ளைவாளா உட்காந்திருக்கது?'' என்று விசாரித்துக்கொண்டு பக்கத்தில் நெருங்கியது அந்த உருவம்.

குரலைக் கேட்டதுமே, நாறும்பூநாத பிள்ளைக்கு குலை நடுங்கிற்று. ''பட்டர் சாமியா?'' என்று குசலம் விசாரிக் கும்போதே அவர் குரல் தடுமாறிற்று.

வந்த பட்டர் சாமியோ விடாது, ''என்ன பேசிக்கிட் டிருந்தேள்? கூட இருக்கது பண்ணைவாளா?'' என்று கேட்டது.

''ஒண்ணுமில்லெ'' என்று கூறினர் பிள்ளை. 'பொய்!' என்று அவர் குரலிலேயே நன்ருகத் தெரிந்தது. தாங்கள் பேசிக் கொண்டிருந்ததை இந்தப் பார்ப்பான் கேட்டிருப் பானே என மூவர் மனசிலும் ஐயம் எழுந்தது. எனினும் ஐ.பி. பிள்ளை விட்டுக் கொடுக்காமல், ''பிள்ளைவாள், நான் சொன்னது ஞாபகமிருக்கட்டும். மறந்திராதிங்க'' என்று எதையோ ஞாபகப் படுத்துவதுபோல் பேச்சை உருமாற்றிக் கழித்துவிட்டு எழுந்தார்.

பிள்ளையவர்கள் பதில் சொல்லவில்லை. இதை யெல் லாம் கவனித்த பட்டர் சாமி மூவரும் ஏதோ 'மூவர் மகா நாடு' கூட்டுகிருர்கள் என்பதை உணர்ந்து, ''சரி பிள்ளை வாள், அப்ப நான் வர்ரேன். தேவஸ்தானத்திலே ஜோலி யிருக்கு'' என்று கிளம்பியது. 'தேவஸ்தானம்' என்ற அடனேயே பிள்ளையவர்களுக்கு உடல் நடுங்கிற்று.

பட்டர் சென்றவுடன், ஐ. பி. பிள்ளை ''கழுதை, கேட்டா கேட்டுட்டுப் போவுது'' என்று திரஸ்கரித்து விட்டு, பண்ணையவர்களைத் தட்டியெழுப்பி ''பண்ணையார் வாள், வாருங்க போவோம்'' என்று அழைத்தார். பண்ணை

யவர்களும் எழுந்து நின்றவுடன், ஐ. பி. பிள்ளை நாறும்பூ நாத பிள்ளையைப் பார்த்து ''வாருங்களேன், போவோம்'' என்று அழைத்தார்.

''எங்கே?'' என்று சுருக்கமாகக் கேட்டார் பிள்ளை.

''பக்கத்துக் கடைக்குத்தான்'' என்று பதில் வந்தது. பிள்ளையவர்கள் கேட்டதே தப்பு என்று உணர்ந்து, ''நான் வருகிறேன்'' என்று கிளம்பி விட்டார்.

ஐ. பி. பிள்ளையும், பண்ணையவர்களும் 'வெறும் தொடை நடுங்கி' என்று பிள்ளையவர்களுக்குப் பட்டம் சூட்டிவிட்டுத் தாமரைக் குளச் சரிவிலிறங்கினர்.

## 2

சில வருஷங்களுக்கு முன்னெல்லாம் திருவாளர் நாறும்பூநாத பிள்ளையவர்களின் தினசரி வாழ்க்கை இன்றைக்குள்ள ஒரு சில சிறு மாறுதல்கள் கூடவின்றி எப்படி நடந்து வந்தது என்பது பலரும் அறிந்த விஷயந்தான். பத்து வருஷங்களுக்கு முன்னால் என்றைக்காவது விடியற் கருக்கலில், மேலப் பாளையம் பனைமர உச்சிகள் உருக்காட்டும் வேளையில், திருநெல்வேலி, குறுக்குத் துறை ஆற்றுக் குள்ளிருக்கும் திருவுருமாமலைச் சுப்பிரமணிய சுவாமி கோயில் பக்கம் சென்றவர்களுக்கு நாறும்பூநாத பிள்ளையின் தினசரி வாழ்க்கை எங்கே ஆரம்பமாகிறது என்பது தெரிய வரும்.

மோஹினிப் பிசாசோ, மொட்டைப் பிராம்மணத் தியோ என்ற பயமும் ஐயமும் இன்றி, படிக்கட்டில் ஏறி வரும் அந்த வெள்ளை உருவத்தை நெருங்கிப் பார்ப்பவர் களுக்கு நாறும்பூநாத பிள்ளைதான் அப்படி ஈர வேட்டியைப் போர்த்திக்கொண்டு வருகிறார் என்பது புலப்படும். மாதாங் கோயில் தெருவிலுள்ள தம் வீட்டிற்கும் குறுக்குத்

துறைக்கும் உள்ள தூரத்தைப் பொருட் படுத்ாது. எந்தக் காலத்திலும் ஆற்றுக்குச் சென்று குளித்து வருவது அவருக்கு வழக்கமா யிருந்தது. தாமிரபருணி கலங்க லின்றித் தெளிந்துவரும் அந்தக் கருக்கலிலேயே குளிப்பது தான் அவருக்குப் பிடிக்கும். குளித்துவிட்டுக் கரையேறி ரோட்டுக்கு வருவார். வருகிற வழியில், பெரிய கோயிலை நடை திறக்கு முன்பே, மூன்று முறை வலம் வந்து வெளிப் பக்கச் சுவரை யொட்டி யிருக்கும் உண்டியலில் காலணா போட்டுவிட்டு வீட்டுக்கு நடப்பார்.

வீடு வந்து சேர்ந்ததும் முற்றத்தில் கட்டப்பட்ட கம்பிக் கொடியில் வேட்டியை உதறி உலரப் போட்டுவிட்டு, நடந்துவந்த களைப்புத் தீர நடையில் உட்கார்ந்து, தொள தொளத்துப் போன கால் குதிரையை வருடுவார். பிள்ளையவர்கள் வந்ததுமே, அவருடைய சம்சாரம் ஸ்ரீமதி நெல்லை வடிவு ஆச்சி கணவருக்குக் கால் கழுவத் தண்ணீர் கொடுத்து, அடுக்களையுட் சென்று நீத்துப்பாகம் கொண்டு வந்து கொடுப்பாள். பிள்ளையவர்களின் காலைச் சாப்பாடு சமயங்களில் அந்த ஒரு குவளைப் பழந் தண்ணீருடனேயே நின்று விடும்.

அதன்பின் நெல்லை வடிவு ஆச்சி வீட்டில் மிஞ்சிய கழுநீர்க் குடத்தைக் தூக்கிக்கொண்டு, பக்கத்து வீட்டு எருதுப் பிரைக்குச் சென்று, தொட்டியில் ஊற்றிவிட்டு, அதற்குப் பிரதியாக வாங்கி வரும் சாணத்தைக் கரைத்து வாசல் தெளிப்பாள். வாசல் தெளித்து முடிந்ததும் பிள்ளையவர்கள் "பய எந்திரிச்சான்னா, பள்ளிக்கூடம் போவச் சொல்லு. மூதி ஏச்சங் காட்டிக்கிட்டுத் திரியாமெ" என்று மனைவியிடம் கூறிவிட்டு, தொண்டர் சந்நிதியிலுள்ள தம் கடைக்குச் செல்வார்.

நாறும்பூநாத பிள்ளையவர்களின் பலகாரக் கடை காலை ஆறு ஆறரைக் கெல்லாம் திறக்கப்பட்டுவிடும். கடையைத் திறப்பதும் மூடுவதும் பிள்ளையவர்களேதான். ஏன், கடைக்கே சர்வாதிகாரி அவர்தான். அதாவது பட்டறை யிலிருந்து சில்லரை வரவு வைப்பதிலிருந்து தோசை

வார்ப்பது, பரிமாறுவது எல்லாம் அவரே கவனித்துக் கொள்வார். இலை எடுத்துப்போடும் வேலை திருநெல்வேலி யில் சாப்பிடுவோரையே சாருமாதலால், பிள்ளையவர்களின் சுயமரியாதையும் எந்த விதத்திலும் பாதிக்கப் படுவதில்லை. பிள்ளையவர்களின் பலகாரக் கடை அந்த வட்டாரத் திலேயே நல்ல பெயர் பெற்றது. காலையில் கருப்புக்கட்டிக் கடுங்காப்பி மிளகாய்ப் பொடி தோசை, அதன்பின் ஒன்பது மணிக்கெல்லாம் பள்ளிச் சிறுவர்களுக்கு உப யோககரமான சுசியம், எள்ளுருண்டை என்ற ஸ்வீட்டுகள், வாழைக்காய் பஜ்ஜி, பக்கடா என்ற ஸேவரிகள், அதன் பின், உச்சிவேளை நெருங்கி விட்டதனுல், கடை தேடிவரும் ரொக்கப் புள்ளிகளுக்கும், ஒன்றிரண்டு வாடிக்கைக்காரர் களுக்கும் ஒரு புளிக்குழம்பு, மிதுக்குவத்தல், ஒரு துவரம், நெல்லிக்காய் ஊறுகாய் அல்லது கொத்துமல்லித் தொக்கு என்ற சம்பிரமங்களுடன் சாப்பாடு. காலையில் மிஞ்சிப் போன இனிப்பு, காரவகைகளைத் தீர்த்துக் கட்டும் ‘கிளியரன்ஸ் ஸேல்ஸ்’ சாயந்திரம் நடைபெறும். இரவு எட்டு மணியிலிருந்து, பத்து மணிவரை தோசை மிளகாய்ப் பொடி, சுக்குத் தண்ணீர், பக்கடா முதலியன கிடைக்கும்.

பிள்ளையவர்களின் கடை பெரிய ஹோட்டல்களைப் போல் ரத வீதியில் அமையாவிட்டாலும் நல்ல ஜன நடமாட்டமுள்ள முச்சந்தியில் அமைந்திருந்ததால், வியா பாரத்தில் என்றும் காய்ச்சல் வந்தது கிடையாது. என் றைக்கும் நல்ல கிராக்கிதான். ஆலங்குளத்து ‘நாடாக்க மார்கள்’ மொட்டை வண்டிகளில் ஊத்து மலை விறகு, பனை யோலை, பனங்கருப்பட்டி, ஆலங்குளத்து மிளகு வற்றல் முதலியன ஏற்றி வந்தால், பிள்ளையவர்கள் கடைக்கு அருகி லுள்ள வண்டிப் பேட்டையில்தான் தங்கவேண்டும். இப்படி ஆலங்குளத்திலிருந்து வரும் நாடார்களுக்கும், வடக்கே மானூர்ப் பக்கமிருந்துவரும் தேவமார்களுக்கும் நாறும்பூநாத பிள்ளையின் கடைதான் வயிற்றுக்கும் செல வுக்கும் கட்டிவரும். பிள்ளையின் கடையில் அளவுச் சாப்

பாடு என்றால் அணு ஒன்றரைதான். எனினும் பட்டணக் கரையில், 'நாங்களும் சாப்பிடுகிறோம்' என்று பெரிய ஹோட்டல்களில் பருக்கை கொறிக்கும் நாகரிக வர்க்கத் தாருக்கு அந்த அளவுச் சாப்பாடே அதிகமென்றுதான் சொல்லவேண்டும். ஆனாலும், பிள்ளையவர்கள் தம் கடைக் குப் பசியோடுவரும் தொழிலாளிகளுக்கு அவர்கள் வயிறாரச் சாப்பாடு போட்டு அனுப்புவார். ஏதாவது விசேட நாட் களில் பிள்ளையவர்களின் கடையில் அரிசிப் பாயசமும், அப்பளமுங்கூடக் கிடைக்கும். இந்நேரத்திற்குள் சாப் பாட்டை முடித்துவிட வேண்டும் என்று கோடு கிழிக்கும் வர்க்கத்தாரல்ல ஏழை மக்கள். ஆதலால் மாலை நாலு மணி வரையிலும் பிள்ளையவர்கள் கடையில் சாப்பாட்டுப் பந்தி நடைபெற்றுக் கொண்டிருக்கும்.

'சாப்பாட்டுக் கடை முடிந்து சாமான்கள் அரங்கேறிய பின் பிள்ளையவர்கள் மறுநாள் காலைத் தோசைக்கு மாவரைப்பார்; இரவு பக்கடாவுக்கு மாவு பிசைந்து வைப் பார். பிறகு கடைக்கு முன்னால் அலங்காரமாக விருக்கும் மரப்படிகளில் மிஞ்சிய மிச்சம் மிஞ்சாடிகளை ஒழுங்கு படுத்தி வைத்துவிட்டு பள்ளிக்கூடம் விட்டு வரும் தன் புத்திரச் செல்வத்துக்காக வழிமேல் விழிவைத்து நிற்பார். பிள்ளையவர்களின் புத்திரச் செல்வமான முருகையா என்ற பத்து வயதுப் பையன் பள்ளிக்கூடம் விட்டதும், வயற் காட்டு மாந்தோப்பில் கல்லெறியச் செல்லும் திருக்கோஷ்டி யுடன் சேராமல், ஒழுங்காகக் கடைக்கு வந்து சேர்ந்து விடுவான். காரணம், பிள்ளையவர்களின் கடை பலகாரக் கடையாயிருப்பதுதான். முருகையா வந்ததும் அவனைப் பட்டறையில் அமர்த்திவிட்டு, பிள்ளை நயினார் குளக்கரைக் குச் செல்வார். பிள்ளையவர்களின் புத்திரனான முருகையா தகப்பன் சென்றதும் தன்னாலியன்றவரை தட்டுகளிலிருக்கும் சரக்குகளை வயிற்றுக்குள் தள்ளி, 'கிளியரன்ஸ் ஸேல்ஸை' வெகுவாகத் துரிதப்படுத்துவதும் உண்டு. நாறும்பூநாத பிள்ளை குளக்கரைக்குச் சென்று அனுஷ்டானாதிகளை முடித்து விட்டு, அன்று கருட தரிசனம் பார்க்கவேண்டிய தினமா

யிருந்தால் அதையும் முடித்துவிட்டு, கீழரதவீதி வழியே போய் சுவாமி நெல்லையப்பர் கோவிலுட் சென்று ஆறுமுக நயினரைத் தரிசித்துவிட்டு, ஒத்தைமாடத் தெரு வழியே சென்றுசந்திப் பிள்ளையார் கோயில் தீப தரிசனம் செய்து விட்டுக் கடைக்குத் திரும்பி வருவதற்குள் இரவு மணி எட்டு ஆகிவிடும்.

எட்டு மணிக்கு மேல்தான் அவர் கடையில் இரவு வியாபாரம் ஆரம்பமாகும். பட்டணத்தில் ஊத்தப்பம் என்று அருமையாய் அழைக்கப்படும் பொருளின் விஸ்வ ரூபந்தான் பிள்ளையவர்கள் கடையில் தோசையாக விளங்கும். மேலும், தோசைக்குத் துணை நிற்கும் மிளகாய்ப் பொடி எண்ணெயின் கூட்டுறவால், எத்தனை தோசை களானாலும் சாப்பிடலாம் என்று தைரியம் உண்டாகும். எனினும் பிள்ளையவர்கள் கடையில் இரவு தோசையை விட, பக்கடா, சுக்கு வெந்நீர் இவைகளுக்குத்தான் சரி யான கிராக்கி. இரவு வெந்நீர்ப் பழையது சாப்பிடும் பேர்வழிகளுக்கு நாறும்பூநாத பிள்ளைக் கடை பக்கடாவைப் போன்ற வேறொரு தொடுகறி கிடைப்பது அரிது. ருசி யாகவும், கணிசமாகவும் இருப்பதால், எத்தனை தட்டுக் களானாலும் விற்பனையாகிவிடும். பிள்ளையவர்கள் கடைச் சுக்கு வெந்நீருக்கு வாடிக்கைக்காரர்கள் 'ராமபாண(ன)ம்' என்று அழகாகப் பெயரிட்டிருந்தார்கள். காரணம் விஷக் குடிநீர்போல் காரசாரமாய் இருப்பதுடன், சாரணைவேர் கருடக்கொடி போன்ற மூலிகைகளும் சேர்ந்து தயாரிக்கப் படுவதால் உடம்புக்கு நல்லது என்று எல்லோரும் பிரிய மாய்ச் சாப்பிடுவார்கள். சுக்கு வெந்நீர் தீர்ந்து மண்டி யான பின்னுங்கூட வியாபாரம் குறையாது.

சுக்கு வெந்நீர்த் தவலையைப் பிள்ளையவர்கள் கழுவிக் கவிழ்த்து விட்டாரென்றால் அன்றைய வியாபாரமும் அத்துடன் முடிந்தது என்று அர்த்தம். பிறகு கடைக்கு நிழல் தரும் வண்ணம் தூக்கி நிறுத்திய மூங்கில் தட்டியை இறக்கி, கடையை மூடிவிட்டு, பக்கத்துக் கடையில் மருதை

நாயுடு சுருட்டு ஒன்று வாங்கிப் பற்றவைத்துக்கொண்டு நிலாக் காலமாயிருந்தால், குளக்கரைப் பக்கம் செல்வார்; இல்லையெனில் வீட்டுக்குச் செல்வார். வீட்டுக்கு வந்து மனைவி பக்குவமாய்ப் பிசைந்து வைக்கும் பழையதைச் சாப்பிட்டுவிட்டு, வெளித்திண்ணையில் படுக்கையைப்போடு வார். போட்டபின் இரப்பில் சொருகியிருக்கும் கந்தரனு பூதி, விநாயகரகவல், கந்தரலங்காரம் என்ற நூல்களை எடுத்து முனிஸிபாலிட்டியார் புண்ணியத்தில் விழும் மின் சார ஒளியில் சில பகுதிகளைப் படிப்பார். நிலாக் காலமா யிருந்தால், மின்சார ஒளி கிடையாத காரணத்தால், மனப் பாடமான பகுதிகளை வாய்விட்டுப் பாடிவிட்டு, ''என் அப்பனே, முருகா!'' என்று கூறி, பிளந்த வாயில் சொடக்கு விட்டு, சோம்பல் முறித்துவிட்டு, தலையைச் சாய்ப்பார்.

இதெல்லாம் சென்ற பத்து வருஷங்களுக்கு முந்திய விவரம்.

அவருடைய வாழ்க்கைப் பாதையில் வண்டியைக் குடைசாய்த்து விடும் நொடியோ பள்ளமோ குறுக்கிட்டு விடவில்லை; வாழ்க்கை என்னவோ அவருக்கு சுவாமி நெல்லையப்பர் ஹைரோட்டில் காலாற நடந்து போவது போலத்தான் தோன்றியது. இடையில் திருநெல்வேலியில் வந்த வெள்ளம், காலரா, காங்கிரஸ் தேர்தல்கள் முதலி யன எவையுமே பிள்ளையவர்களின் தெய்வ பக்தியையும் வாழ்க்கை நிலையையும் பாதித்ததில்லை.

ஆனாலும் யுத்தம் ஆரம்பித்த பின்பு, பிள்ளையவர் களுக்கு தாமரையிலைத் தண்ணீர் போலிருந்த வாழ்வில் ஏனோ சிறிது பிடிதளர்ந்து, லௌகிகப்பற்று ஜாஸ்தியாய் விழுந்தது. இதற்குக் காரணம் எதுவென்று திட்டமாய்ச் சொல்லமுடியாது. தம்முடைய பேர் சொல்ல நிற்கும் முருகையாவுக்கு ஏதாவது பண்டமாய் மீத்து வைக்க வேண்டும் என்ற கருணையோ, உழைத்து உழைத்து ஓடாய்ப்போன அருமை மனைவிக்கு ஏதேனும் வழி தேடி

வைக்கவேண்டும் என்ற புருஷார்த்தமோ — எதுவென்று கூறமுடியா விட்டாலும், பிள்ளையவர்களுக்குத் திடீரென்று பணம் சேர்க்கவேண்டும் என்ற ஆசை விழுந்தது மிகவும் அதிசயமானதுதான். ஆனாலும் சமயங்களில், பிள்ளையவர்கள், ''நேத்துத் தவணை நோட்டைத் தூக்கிக்கிட்டு நிலுவை பிரிச்சவனெல்லாம் இன்னிக்கு பட்டறையிலே முதலாளியா யிருக்கான்'' என்று சொல்லுவதிலிருந்து அவருக்கும் சமூகத்தில் ஒரு உயர்ந்த ஸ்தானம் பெறவேண்டும் என்ற ஆசை உண்டானதென்று ஊகிக்கலாம். அதை நிறைவேற்றுவதற்காகத்தான் அதற்கு மூலாதாரமான பணம் சேர்க்கும் முன்னணியில் அவரும் கலந்து கொண்டார் என்றுதான் எல்லோரும் கருதினார்கள்.

நாட்டில் அகவிலை ஏறி, சரக்குகளுக்குக் கிராக்கி ஆரம்பமாகும் வேளைக்கும், மக்கள் கையில் புரளும் வரும்படிப் பணம் ஏற்றம் காணுமலிருந்த காலத்துக்கும் இடையிலுள்ள இடைக்காலத்தில், நாறும்பூநாத பிள்ளைக் கடையில் திடீரென்று வியாபாரத்தில் ஒரு நல்ல விறுவிறுப்பு ஏற்பட்டது. பெரிய ஹோட்டல்களிலெல்லாம் பண்டங்களின் விலையை உயர்த்தும்போது, நாறும்பூநாத பிள்ளை மட்டும் தெரிந்தோ தெரியாமலோ, சாமான்களின் கனபரிமாணத்தைக் குறைத்தும், விலைவாசி நிர்ணயத்தைச் சிதைக்காமலும் இருந்த செய்கை ஒரு விதத்தில் சரியான வியாபார தந்திரமாகவே அமைந்தது. ஆனால், தம்மையறியாமலேயே காலக்கிரமத்தில் கையாடிவிட்ட இந்த வியாபார நுணுக்கத்தை ஒரு வருஷத்திற்குப் பிறகுதான் நாறும்பூநாதரே உணர்ந்தார்.

இம் முறையில் நாளா வட்டத்தில் நாறும்பூநாத பிள்ளைக்கு வியாபாரத்தில் சரியான பிடிப்பும், விளம்பர மோகமும் ஏற்பட்டதன் விளைவாக, எடுத்துக் கட்டிய கடையும், ஒரு கையாளும், வாசலில், 'முருக விலாஸ் சைவாள் சாப்பாட்டுக் கிளப்—மண்பானைச் சமையல்—புழுங்கலரிசிச் சாதம்—வடை பாயசத்துடன் அணு நாலு.

அளவு சாப்பாடு அணா இரண்டு' என்று எழுதப்பட்ட விளம்பரப் பலகையும் ஏற்படலாயிற்று: காலக் கிரமத்தில் நாறும்பூநாத பிள்ளையவர்கள் கடையும் திருநெல்வேலியிலுள்ள மத்தியதர வகுப்பாருக்குப் பயன்படும் கிளப்புகளில் ஒன்முக விளங்கவே, நாறும்பூநாத பிள்ளையும் மற்றவர்களைப் போல், தாமும் நடந்துகொள்ள வேண்டியதாயிற்று. இரவு கடைக் கணக்கெல்லாம் முடித்துவிட்டு, வீடு வந்து சேர்வதற்குள் மணி பன்னிரண்டு ஒன்முகிவிடும்.

வீட்டிலோ நெல்லை வடிவு ஆச்சி கொட்டு கொட்டென்று விழித்துக் கொண்டிருப்பாள். முன்னெல்லாம் நெல்லை வடிவு ஆச்சி அக்கம் பக்கத்து வீடுகளில் முறுக்கு சுற்றப் போய்விட்டு வந்த அலுப்பினுல், முன்தானையை விரித்துக் கூடத்தில் படுத்து விடுவாள். இப்போது அதற்கெல்லாம் வழியின்றி, 'முதலாளி'யின் வரவு நோக்கிக் காத்திருப்பாள். பின் பிள்ளையவர்கள் சாப்பிட்டுவிட்டு வருவதற்கும் கந்தரனுபூதி ஏதேனும் சொல்வதற்கு மனசில் தெம்பும், திறனும் இருந்தால் சொல்லிவிட்டுப் படுப்பதற்கும் நேரம் சரியாயிருக்கும். ஆதலால் முன் போல அதிகாலையில் எழுந்து ஆற்றுக்குச் செல்லும் வழக்கமும் படிப்படியாய் நின்றுவிட்டது. இப்போதெல்லாம் காலையில் எழுந்தவுடன் வெந்நீர் ஸ்நானம், காப்பி பலகாரந்தான். கடைப் பையன் வந்து ஆறு மணிக்கே சாவியை வாங்கிப் போய்விடுவான். பிள்ளையவர்கள் சாவதானமாய் ஒன்பது மணிக்கு ஈரச்சடையை உலர்த்திச் சிக்கலெடுத்தவாறே, கடைக்குச் செல்வார்.

வியாபாரத்தில் தலையெடுத்து பெரிய கைகளுடன் போட்டியிட முடியாத நிலைமையிலிருந்தாலும், தாமும் ஒரு முதலாளி என்ற மனப்பான்மை அவருக்கு வழக்கத்தில் ஊறிவிட்டது. கடைப் பையன்களை அதட்டுவது, பட்டறையிலிருந்து கொண்டு சில்லரைகளை வரவு வைப்பது, இரவு கடைப் பையன்கள் புடை சூழ்ந்து வழியனுப்ப வீடு சேர்வது, புத்திரச் செல்வம் இங்கிலீசு படிப்பது, நெல்லைவடிவு

ஆச்சி சமயம் கிடைத்த போதெல்லாம் 'முருகையாவுக்கும் தான் வயசாகலியா? நம்ப கண்ணு முன்னாலேயே ஒரு முடி போட்டு வைக்கக் கூடாதா? வீட்டிலேயும் என்னென்னு கேக்கதுக்கு ஒரு மவராசி வேண்டாமா?' என்று கூறுவது—எல்லாம் சேர்ந்துதான் அவர் மனசில் முதலாளித்துவ மனப்பான்மையைச் சிருஷ்டித்திருக்க வேண்டும். ஆனாலும், இந்த முதலாளித்துவமும், பணப் பெருக்கமும் தம்முடைய வாழ்க்கை முறையையும், தெய்வ பக்தியையும் ஓரளவு பாதித்திருக்கின்றன என்பதை அவர் உணரவில்லை, மேலும் திருநெல்வேலியில் தலையெடுக்கும் எந்த வெள்ளாளனுக்கும் பிராமணத் துவேஷம் ஏற்படுவதும் நாறும்பூநாத பிள்ளைக்கு மற்றொரு காரணம். இந்த முறையில் திருவாளர் நாறும்பூநாத பிள்ளையவர்கள் தற்போது வீட்டில் வெந்நீர் ஸ்நானம் செய்வதன் காரணமாகக் குறுக்குத்துறை சுப்பிரமணிய சுவாமி கோயில் வலம் வருவதும், சந்திப் பிள்ளையார் கோயில் அந்தி தரிசனம் காண்பதும் அரிதாய் விட்டன. அதற்குப் பதில் குறுக்குத்துறையில் இவர் பேருக்கு செவ்வாய்க்கிழமைதோறும் அர்ச்சனை நடந்து விபூதிக் குங்குமப் பிரஸாதம் வீடு தேடி வரும்; கடைப்பையன் வாரந் தவறாமல் சந்திப் பிள்ளையாருக்கு உடைத்து வரும் விடலைத் தேங்காயால், பிள்ளையவர்களுக்குப் பிள்ளையார் புண்ணியத்திலும் பங்கம் நேர்ந்து விடவில்லை; கருட தரிசனக் கட்டம் மட்டும் வேறொருவர் செய்ய முடியாத காரணத்தால் தாமே நேரில் செய்து வந்தார். மேலும், நயினார் குளக்கரை தம் கடைக்குப் பக்கத்திலேயே இருப்பதாலும், பட்டறையில் உட்கார்ந்திருந்த கடுப்புத் தீர உலாவ வழி கிடைப்பதாலும் பிள்ளையவர்களுக்கு கருட தரிசனம் மட்டும் தீரா வினையாக லபித்துவிட்டது.

இப்படி இருந்துவருங் காலத்தில்தான் திருநெல்வேலி பெரிய கோயிலில் செய்ய முனைந்த கும்பாபிஷேக முயற்சிகள் பிள்ளையவர்களின் தெய்வ பக்தியையும், ஜாதியபிமானத்தையும் சீர்தூக்கும் சோதனைத் துலையாக வந்து சேர்ந்தது. திருநெல்வேலியுறை செல்வர்களான சுத்த

மல்லிப் பண்ணை போன்ற பிள்ளைமார்களுக்குத் தாங்கள் தான் ஆளவும் வாழவும் பிறந்தவர்கள் என்ற எண்ணம் உண்டு. இந்த ஆசையின் காரணமாக எழுந்த பிராமணத் துவேஷமும், தற்பெருமையும் அவர்களுக்கு உண்டு.

எனினும், பெருந்தொகை புரளும் சுபகாரியங்களில் பிராமணரும் சைவப் பிள்ளைமாரும் ஒன்று கலந்து கொள்வார்கள். இந்தக் கலப்பு ருஷ்யாவும் அமெரிக்காவும் தங்கள் பொது எதிரியைத் தொலைப்பதற்காகச் சமயத்தில் கை கோத்துக்கொண்ட மாதிரி தான் என்று அறிந்தவர்கள் சொல்லுவார்கள். இருந்தாலும் இருவருடைய பொது நலனையும் உத்தேசித்து, பரஸ்பரம் மனக் கசப்பை விட்டுக் கொடுப்பதாகக் காட்டிக்கொண்டு, பொதுக் காரியங்களில் ஈடுபடுவார்கள்; பின் காலக் கிரமத்தில் ஒருவரையொருவர் விழுங்கப் பார்ப்பார்கள். இந்தக் கும்பாபிஷேக விசேடத்தின் போதும் அப்படி ஒரு கலப்பு ஏற்பட்டது. அந்தக் கலப்பு தங்கள் ஜாதியபிமானத்தைக் குலைப்பதாகக் கருதியவர்கள் ஒரு சிலர்.

அந்தச் சிலரில் இருவர்தான் சுத்தமல்லிப்பண்ணையும், ஐ. பி. பிள்ளையும். இருவருக்கும் அந்தக் கலப்பு பிடிக்காதிருப்பதற்கு ஜாதியபிமானம் மட்டுமே காரணம் என்று கூறிவிட முடியாது. பண்ணையவர்களுக்கு கும்பாபிஷேக வைபவக் கமிட்டியிலே இடங் கிடையாமற் போனதும், சுய ஜாதிக்காரனே தம்மை மதிக்காததும், கிடைப்பதற்கிருந்த வரும்படி கைகடந்து போனதும் காரணங்களாக இருக்கலாம் என்று கருதுபவரும் உண்டு. ஐ. பி. பிள்ளைக்கு இம்மாதிரி சுயநல புத்தி ஏற்படாமைக்குக் காரணம், அவ்வளவுக்குத் தாம் தகுதியற்றவர் என்பதோடு கூட, பிராம்மண அன்னதானம் என்றதுமே அவருக்கு மனசில் கசப்பு ஏற்பட்டது. இந்த இருவரும் சேர்ந்து நாறும்பூநாத பிள்ளையைத் திருத்த முயன்றதில் தான் பிள்ளையவர்களுக்குத் தம் தரும சிந்தையில் கலக்கம் ஏற்பட்டது.

நயினார் குளக்கரையில் பண்ணையும் ஐ. பி. பிள்ளையும் விதைத்த விதை பிள்ளையவர்களின் மனத்தில் முளை விடா

விடினும், உறுத்திக் கொண்டே யிருந்தது. ''பயலுக பணம் பிரிக்க வரும்போது பாத்துக்கிடலாம்'' என்று மெத்தனத்தில் இருந்து விட்டார் பிள்ளை.

## 3

பட்டறையில் அமர்ந்திருந்த நாறும்பூநாத பிள்ளை எழுந்திருந்து, ''வாருங்க—'' என்ற இழுப்புக் குரலில், நடையேறிவரும் திருக்கூட்டத்தை வரவேற்றார்.

பெரிய கோயில் பட்டர்சாமி, தர்மகர்த்தாபிள்ளை இருக்கும் போது, அவர் ''ஏன்?'' என்று கேட்டால், 'என்ன?' என்று குரல் கொடுப்பவரும், அவரில்லாதபோது தர்மகர்த்தா பிள்ளையின் 'அந்தரங்கக் காரியதரிசி' என்று தம்மை அறிமுகப்படுத்திக் கொள்பவருமான சங்கரலிங்கம் பிள்ளை, தர்மகர்த்தா பிள்ளை, உள்ளூர் மணியம், இன்னும் இவர்களுக்குப் பின்னால் மேல் துண்டை இறக்கி அரையில் கட்டி புடை சூழ்ந்து வரும் காக்காய்கள், அந்தக் காக்காய்களுக்கு முன்னே பெருமிதமாய் நிமிர்ந்து வரும் பெரிய கோயில் வில்லைச் சேவகன்—இத்தியாதி வர்க்கம் வாசல் நடையேறிக் கடைக்குள் நுழைந்தது.

பிள்ளையவர்கள் எழுந்திருந்து அந்தச் சிவநேசச் செல்வர்களை வரவேற்று பிறகு உள்ளே திரும்பி ''ஏலே, ஐயா, காப்பி கொண்டுவாடா'' என்று குரல் கொடுத்து விட்டு உட்கார்ந்தார்.

அதற்குள் பெரிய கோயில் பட்டர்சாமிகள் மனசிலே 'இருந்திருந்து இந்தப் பய கடையிலா காப்பி சாப்பிடுவது?' என்ற எண்ணம் உறுத்த, ''காப்பி ஏதுக்கிங்கிறேன்? இப்பதான் பெரிய போத்தி கடையிலே தாக சாந்தியாச்சு!'' என்று விளம்பரப்படுத்தி காப்பியை நிறுத்த முயன்றார்.

எனினும் கடைக்காரப் பையன்களோ, முதலாளியின் வாக்கை உடனே நிறைவேற்றி வைத்தார்கள். மேஜை மேல் கொண்டுவந்து வைத்த காப்பியை சங்கரலிங்கம் பிள்ளை எடுத்து தர்மகர்த்தா பிள்ளையவர்களிடம் வழங்க, அவர் அதை வாங்கிச் சாப்பிட ஆரம்பித்தார். சங்கர லிங்கம்பிள்ளை மற்ருெரு காப்பியை பட்டர்சாமி முன் நீட்டினுர். பட்டர்சாமி கொடுத்த காப்பியை மறுக்க முடியாதவராய் வாங்கி அதை மேஜைமேல் வைத்துவிட்டு, நாறும்பூநாத பிள்ளையவர்களை நோக்கி, "என்ன பிள்ளை வாள், அன்னைக்கி உங்களைக் குளத்தங்கரையிலே கண்டது. அதுக்கப்புறம் சௌகர்யமே வாய்க்கலெ" என்று ஆரம்பித்தார்.

குளத்தங்கரை என்றதுமே பிள்ளையவர்களுக்கு 'கெதக்' என்றது: "ஆமா, இங்கே என்ன ஒய்வா? ஒளிவா? எதுக் கெடுத்தாலும் பிச்சித்தான் பிடுங்குதாங்க—',

"ஆமா, வியாபார மும்முரத்திலே ஒய்ச்சல் ஒளிவைப் பார்த்தா முடியுமா?" என்று கூறிக்கொண்டே, தாம் கொண்டுவந்திருந்த டிக்கட்டுக் கட்டுக்களை உலைத்தார் தர்மகர்த்தா பிள்ளை.

"வியாபார மும்முரம் என்ன வாளுது? சாமானுக்குத் தான் கிராக்கி அதிகமாச்சே ஒளிய ஒரு பலனைக் காணும்" என்று தாளத்தில் ஆரம்பித்தார் பிள்ளை.

"அதென்னமோ பிள்ளைவாள். எல்லாம் ஆண்டவன் கிருபை. நீங்க இன்னைக்கி இருக்கிற செல்வாக்குக்கும் சிறப்புக்கும் அவன்தானே காரணம்?" என்று பேச்சைத் தம் தடத்துக்குத் திருப்பினுர் தர்மகர்த்தா.

"ஆண்டவன் என்ன செய்யக் கிடக்கு? நம்ம முயற்சி யும் மக்கியா போச்சி? உளைச்சதுக்குத் தக்க பலன் கிடைச்சுது" என்று தர்மகர்த்தாவை முறியடிக்க உத் தேசித்தார் பிள்ளை.

அதற்குள், பட்டர்சாமி, "என்ன பிள்ளைவாள், அதென்ன அப்படிச் சொல்றேள்? உங்க தெய்வபக்தியும், ஆண்டவன் கிருபையுந்தான் உங்களை இவ்வளவு நல்ல நிலையிலே வச்சிருக்குன்னு!" என்று விடாது முடுக்கினார்.

"நல்ல நிலை யென்னு? ஏதோ கடன் காட்சி இல்லேன்னு தான் பெருமைப் படணும். வியாபாரம் தான் அவ்வளவு ஒட்டமில்லையே!" என்று சொன்னார் பிள்ளை.

"நீங்க சொல்றதும் ஒரு வகைக்கி சரிதான். ஆனாலும் இந்த மாதிரி இக்கட்டான வேளையிலே சாமி கடாக்ஷம்தான் வேண்டியிருக்கு" என்று விஷயத்தை நழுவவிடாமல், மூளையைவிட்டுத் தூர விலகிப் போகாமல் சுற்றி வந்தார் தர்மகர்த்தா. காரியம் ஆக வேண்டும் என்ற ஒரே காரணத்தால் ஏற்பட்ட தர்மகர்த்தாவின் கடவுள் நம்பிக்கையைக் கண்டு பிள்ளையவர்கள் ஆச்சரியப்பட்டார். விடாக் கண்டர்களான பட்டர் சாமியும், தர்மகர்த்தா பிள்ளையும் நாறும்பூநாத பிள்ளையை மடக்குவதற்கு எமப் பிரயத்தனம் செய்தார்கள்.

"பிள்ளைவாள், உங்க தெய்வ பக்தி ஊரறிஞ்சது. எனக்குத் தெரியாதா?" என்றார் தர்மகர்த்தா.

"என்ன பிள்ளைவாள், எல்லாம் ஒங்க முகத்துக்கு நேரே சொல்லப்பிடாது. பாருங்க, உங்களுக்கு இருக்கிற முருக பக்தியிலே கால்வாசி கூட எனக்கு இருக்குமா அது சந்தேகந்தான்" என்று தர்மகர்த்தா பிள்ளையை ஆதரித்துப் பிள்ளையவர்களை மடக்கினார் பட்டர்.

பிள்ளையவர்களுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. பதில் சொல்ல வகை தெரியாமல் திகைத்தார். தர்மகர்த்தா பிள்ளையையும், பட்டர்சாமியையும் எதிர்ப்பது என்பது காற்றிலே கை வீசிய கதையாய்ப் போய்விட்டது. இது தான் சமயமென்று தர்மகர்த்தா பிள்ளை ஐம்பது ரூபாய் டிக்கட்டுப் புஸ்தகம் ஒன்றை எடுத்து, பிள்ளையவர்கள் முன்னால் வைத்தார்.

''பாருங்க. உங்க தகுதிக்கு அம்பதா? எவ்வளவோ குடுக்கலாம். ஆனா, இப்போ எதுக்குன்னுதான் குடுக்கது? அதுனுலெத்தான் –'' என்று ஆரம்பித்தார் தர்மகர்த்தா பிள்ளை.

நாறும்பூநாத பிள்ளை, ''அம்பது ரூபாயா? அவ்வளவுக்கு நிலையிருந்தாத்தான், நான் இப்படி ஏன் இருக்கேன். ஹி ஹி...'' என்று இழுத்தார். மனசிலோ ஐ. பி. பிள்ளையும், பண்ணையும் இட்ட விதையின் உறுத்தல் நின்றபாடில்லை.

''பாத்தியளா, உங்கள்'ட்டெல்லாம் டிக்கெட்டெக் கிளிச்சிக் குடுத்துட்டு ரூபாயை வாங்கணும்'' என்று செல்லக் கோபத்தோடு கூறினர் தர்மகர்த்தா. பிள்ளையவர்கள் புத்தி ஏனோ தடுமாறியது.

''இந்தாங்க. தர்மகர்த்தா பிள்ளைவாள். சக்தி எடங்கொடுக்கணும் பாருங்க. வேணுமின்னு ஒரு பதினேரு ரூபாய் டிக்கெட்டு வாங்கிக் கிடுதேன். இத்தோட முடிஞ்சி போச்சா? இன்னும் எத்தனையோ?'' என்றார் தீர்மானமாக.

''இதுக்குக் குடுக்கலேன்னு, வேறு எதுக்குத் தரப் போறேன்?'' என்று கேட்டார் பட்டர்.

''பட்டர்சாமி, இன்னும் எவ்வளவோ பெரிய தலைகள் எல்லாம் இருக்காகளே'' என்றார் பிள்ளை.

''பெரிய தலைகளை நாங்க கவனிச்சிக்கிடுதோம். நீங்க இந்த அம்பதைக் கட்டாயம் எடுத்துத்தான் தீரணும்' என்றார் தர்மகர்த்தா.

''நம்ப தகுதிக்கு இவ்வளவுதான் தாங்கும். முருகையா, பெட்டியைத் திறந்து ஒரு பதினேரு ரூபா எடுத்துக் குடு'' என்று தம் மகனுக்கு உத்திரவிட்டார் பிள்ளை.

''வந்து—'' இழுத்தார் பட்டர்.

''வீணு நேரத்தைக் கடத்தாதிய. நமக்கு இவ்வளவு தான் தாங்கும்'' என்முர் பிள்ளே.

தர்மகர்த்தா பிள்ளே வேறு வழியில்லாமல் பிள்ளே யவர்கள் கொடுத்த பதிஞெரு ரூபாயை வாங்கிக் கொண்டார். காரியம் முடிந்த பின், வந்த திருக்கூட்டம் பேச்சை வளர்த்தாமல், 'நாங்க வர்ரோம்' என்று கிளம் பிற்று.

பட்டர்சாமிக்குக் கொடுத்த காப்பி மேஜைமேல் அப்படியே இருந்தது. ஈக்கள் அதை மொய்த்துக் கொண்டிருந்தன, பிள்ளேயவர்கள், ''பயலுக குரங்குப் பிடியாத்தான் புடிக்கானுவ'' என்று முனகி விட்டு, ''ஏலே ஐயா. அந்தக்காப்பியைத் தூர ஊத்து. பாப் பார மூதிக்கு என்ன திமிருங்கே?'' என்று கூறிஞர்.

பின் பிள்ளேயவர்கள் ஏதோ குற்றம் செய்து விட்டது போல், திருதிருவென்று விழித்தார்.

அதற்குள் பக்கத்துக் கடையிலிருந்து வந்த ஆறரை மணி யுத்தச் செய்திகள் கர்ஜிக்க ஆரம்பித்தன. உடனே பிள்ளேயவர்கள் தம் புத்திரச் செல்வம் முருகையாவை அழைத்து, பட்டறையைப் பார்த்துக்கொள்ளச் சொல்லி விட்டு, நடையை விட்டுக் கீழிறங்கிஞர். கடையை விட்டு பிள்ளேயவர்கள் வீதியில் காலடி வைப்பதற்கும் ஐ. பி. பிள்ளேயும், பண்ணேயும் வந்து சேருவதற்கும் சரியா யிருந்தது.

''என்ன பிள்ளேவாள், இந்தப் பயலுக உங்க கடைக்கு வந்துட்டுப் போருனுக போலுக்கே'' என்று ஆரம்பித்தார் பண்ணே.

''ஆமா. உயிரை வாங்கிட்டானுக'' என்முர் பிள்ளே.

''நாங்க சொன்னபடி கையை விரிச்சிட்டியள்லெ'' என்முர் ஐ. பி. பிள்ளே.

''குரங்குப் பிடியா நிக்கயிலே, நாம என்ன பண்றது? பதிஞேரு ரூபா அழுது தொலைச்சாச்சி'' என்று சலிப்போடு கூறினார் நாறும்பூநாதர்.

''ஆமா நல்லவங்களுக்கு இது ஏதுங்க காலம்? கடைசியிலே நாமதான் ஏமாந்த பயலுகளாப் போறோம்'' என்றார் ஐ. பி. பிள்ளை.

பிள்ளையவர்கள் பதிலே கூறவில்லை.

''சரி, வாங்கோ போவாம். நம்ம சொல்லுக்கு எங்கே மதிப்பு இருக்கு?'' என்று சினந்து கொண்டார் பண்ணை.

''எங்கே போறது?'' என்று கேட்டார் ஐ. பி.

''கடைக்குத்தான்'' என்று கூறிக்கொண்டே, நயினார் குளக்கரைக்குத் திரும்பினார் பண்ணை.

**1945**

# சுருதி பேதம்

1

வருஷம் மாதம் தேதி—எதுவும் எனக்கு ஞாபகமில்லை. எனினும். அந்த நாள் என் நினைவை விட்டுப் போகவில்லை. அநேகமாக, கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த காலமாய்த் தானிருக்கும்.

வைகாசி விசாகமென்று நினைப்பு. நண்பர் சிலரோடு திருச்செந்தூர் சென்றிருந்தேன்.

மாலை மணி எட்டு இருக்கும், வசந்த காலம் தலை காட்டி விட்டாலும், புழுக்கம் குறையவில்லை. எனவே கல மண்டபத்தின் கதகதப்பில் வேகாமல் கடற்கரை மணல் மேட்டில் 'காத்துக் குடித்து'க் கொண்டிருந்தோம். கடலுக்கு மேலே வான விளிம்புக்கு ஒரு பனை உயரப் பிரமை தந்து, கிருஷ்ணபக்ஷத்துப் பிரதிமைக் கலைமேலேறியது; பூர்ணிமையின் மவுசை இழந்தபோதிலும் பிரகாசம் குறையவில்லை. உடம்புக்கு ஒத்தடம் கொடுத்தது கடற்கரை உப்புக் காற்று. சரசரக்க பட்டுப் புடவை கட்டி அடிபெயரும் குமரியைப் போல கடலலைகள், உருண்டு வந்தன.

அப்போதுதான் அந்த தேவநாதம் காற்றில் மிதந்து வந்தது. நாதஸ்வரக் கச்சேரியை தூரத்தில் இருளிலிருந்து கேட்பதில்தான் சுகமிருக்கிறது என்பதுதான்என் அபிப்பிராயம்.

கல்யாண மண்டபத்தில் கச்சேரி. ஆம், நாதஸ்வர வித்துவான் நாகமுத்துதான் வாசித்துக் கொண்டிருந்தார்...

—பரவாயில்லை. இப்படி ஒரு பொய்யான செய்தியோடு இந்தப் பேட்டியை ஆரம்பித்தால் என்ன? சம்பவம் பொய்யல்ல; நான் திருச்செந்தூர் செல்லவில்லை. அதிலும் நாஸ்திகனான நான் வைகாசி விசாகத்துக் சென்று கட்டுச் சோறு கட்டிக் கொண்டு புண்ணியம் சம்பாதிக்க எந்தக் காலத்திலும் போனதில்லை. என்ருலும், ஏதோ ஒரு வைகாசி விசாகத்தில் அவர் திருச்செந்தூரில் வாசித்ததாக ஞாபகம். அவ்வளவு போதாதா? அதை வைத்துக் கொண்டு கயிறு திரிப்பதற்கு?

டெலிபோன் மணி கணகணத்தது. ரிசீவரை எடுத்தேன்.

''ஹலோ''

ஆசிரியர்தான் வீட்டிலிருந்து பேசினுர். அவர் ஆபீசுக்கு வருவதற்குள் ஏதாவது கதையளந்து கம்போசுக்கு இரை போட எண்ணியிருந்தேன். அதற்குள் அவர் முந்தி விட்டார்.

''என்ன சார்? நாகமுத்துவின் பேட்டி என்னவாயிற்று? இந்த 'இஷ்யூ' வில் எப்படியும் வந்தாக வேண்டும். 'சீரியலை' விடக்கூடாது பாருங்கோ''—ரிசீவர் இரைந்தது.

''அதற்கென்ன சார். எழுதினுல் போச்சு! எட்டு பக்கம்தானே. வேணுமின்னு மத்தியானமே—''

''அவசரமில்லை. 'டி—பாரத்தில்' தான் அதற்கு இடம். நாளை மாலை கொடுத்தால் கூட போதும். வேண்டுமென்ருல் உடனே ஒரு டாக்ஸியிலே போய் அவரைக் கண்டு வாருங்களேன், படமும் வேண்டும்''

''சரி, சார்''

ரிசீவர் யதா ஸ்தானத்தை அடைந்தது. மீண்டும் விட்ட இடத்தில் தொட்டுப் பிடிக்க எண்ணினேன்.

நாகமுத்து என்றாலே எனக்குத் தோடி ராகம்தான் ஞாபகம் வருகிறது. தோடி ராகம் பாடுவதில் அவருக்கு இணை அவர்தான் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். கேட்டுமிருக்கிறேன். எனக்கு இந்த ஈடு இணை என்ற பாகுபாடெல்லாம் தெரியாது. என்றாலும், அதில் ஒரு தனி இன்பம் இருந்தது. காரணம் அவர் சங்கீதம் வெறும் சுரக்கோவை வாய்ப்பாட்டின் கரண வித்தையாயிராது; அனாவசியமான பிர்காக்கள் இராது; சுருதி சுத்தமாகப் பேசும். சுருங்கச் சொன்னால், அது சிற்றின்பம் மாதிரி அனுபவிக்கலாம் விண்டு சொல்ல முடியாது. அவரது சங்கீதத்தைக் கேட்கும்போது ராகஞானம் மங்கி, நமது இதயத்தில் ஒரு இனிய கீதம் கதைகள் பேசும்; நொந்துபோன உள்ளத்துக்கு பன்னீர்க் கவரி வீசும்; நோயில் படுத்திருக்கும் போது மனைவியின் கரஸ்பரிசம் தரும் சுகத்தை, அந்த சங்கீதம் இதயத்துக்குக் கொடுக்கும்.

அன்றும் அவர் தோடிதான் வாசித்தார். தோடி ராகத்தின் சஞ்சார கதியின் நுட்பங்களெல்லாம் எனக்கு அவ்வளவாகத் தெரியாது. கம்பன் வருணிக்கும் ராவணனின் கொலுவிருக்கையைப் போல் என்னை அடி பணியச் செய்து என் உள்ளத்தில் குடி கொண்டது காம்பீர்யமான இந்தத் தோடிதான். அன்று நாகமுத்துவின் வாசிப்பே அலாதி. அன்று தைவதத்தில் அழுத்தம் கொடுத்து, கூசிக்கூசி நீரைத்தொடும் நாணலைப்போல், பஞ்சமத்தை ஏகதேச வர்ஜியமாய்த் தொட்டு நிமிர்ந்து, லாகு கொண்டு வாசித்தது இன்றும் என் நெஞ்சில் பேசிக் கொண்டிருக்கிறது. நாதஸ்வர உலகில்...

—அதற்குள் எனக்குச் சந்தேகம் வந்து விட்டது. நாதஸ்வரமா? நாகஸ்வரமா? நாகஸ்வரம்தான் சரியென்று

ஞாபகம்; ஆனால் வழக்கில் நாதஸ்வரம்தான் பிரயோகம் அவசரத்துக்கு லெக்ஸிகனை திருப்பித் தெளிவு பெற லாமென்றால், அந்த அவசரத்தில் அந்த 'நாவன்னா' வால்யூம் அகப்படுகிறதா? எரிச்சலாய் வந்தது. "சரி. "கானா' வுக்கும் 'தானா' வுக்கும் அவ்வளவாக வித்தியாசமில்லை. கம்பாசிட்டர் தலைமீது அட்சதையைப் போட்டு விட்டு எழுதுவோம்; வந்தது வரட்டும்" என்று ஒரு தைரியம்.

மேற்கொண்டு என்ன எழுத? ஒன்றும் ஓடவில்லை. நாகமுத்துவைப் பற்றி ஏதாவது ஞாபகம் வந்தாலல்லவா எழுதுவதற்கு? மாதாமாதம் யாரையாவது பேட்டி கண்டு தாரகை மண்டலத்தை 'ரொப்ப' முனைந்தால், இந்தக் கதிதான். இந்த அழகில் 'அடுத்த இதழில்!' என்று வேறு விளம்பரப் படுத்தி விட்டேன். இந்தப் பேட்டி நிருபன் பாடே இப்படித்தான். சமயத்தில் பூர்வாசிரமம் தெரியாத, கலைக் குதவாத 'எக்ஸ்ட்ரா'க் களைக் கூடப் பேட்டி கண்டு இல்லாததும் பொல்லாததும் எழுத வேண்டும். அவள் தொட்டிலில் கிடந்து காலுதைத்த காலத்தில், அவள் பாலுக்காக அபிநயம் பிடிப்பது போலிருந்தது என்றும் கதை விட வேண்டும். அல்லது சிறு வயதிலேயே 'மாமா வாருங்கள் வாருங்கள் கை தாருங்கள்' என்ற டாக்கிப் பாட்டை அப்படியே ஒரு தடவை கேட்டுவிட்டு மறு தடவை பாடினாள் என்று கயிறு திரித்து, 'குலவிச்சை கல்லாமல் பாகம் படும்' தத்துவத்தை எழுத வேண்டும். நல்ல பிழைப்பு! அப்படி யென்றால், நாதஸ்வர நாகமுத்துவும் சிறுவயதில் பூவரசு இலையில் பீப்பி வாசிக்கும் பொழுதே சுர ஞானம் பெற்று விட்டார் என்று சரடு விடலாமா?...

சேச்சே! இதைவிட அவரையே நேரில் ஒருமுறை கண்டு விட்டு உண்மையை எழுதினால் என்ன?

பேனாவை மூடி வைத்தேன்.

## 2

ஸ்ரீமான் நாகமுத்துவின் வீட்டுக்குள் நான் நுழையும்போது மணி ஆறு இருக்கும்.

மார்கழி மாசமானதால், பனிப்படலம் அதற்குள் இறங்கித் தேங்க ஆரம்பித்து விட்டது. அந்தி மயக்கத்தின் சோபையைப் பூசி மெழுகி, புது அழகு தந்த அந்தப்பனிப் புகை, சல்லாத்துணிபிட்டு முகத்தைச் சம்பிரதாயத்துக்காக மூடும் புதுமணப் பெண்போல் குளுமை அளித்தது...

எனக்கு இந்த சௌந்தர்ய விசாரத்துக்கெல்லாம் சமயம் ஏது? நாளை மதியம் நாகமுத்து பேட்டியை அச்சேற்றியாக வேண்டுமே!

வீட்டு முன் கூடத்தில் அமர்ந்திருந்தார் நாகமுத்து. பக்கத்திலே வெற்றிலைச் செல்லம்; வெள்ளிக் கூஜா. வாயில் லட்சுமிகரமாக நிறைந்துநிற்கும் புகையிலை மதுசாரம்; அதன் காரணமாக முகத்தில் பனித்துளிபோல வியர்வை.

நான் நமஸ்கரித்தேன்.

''வாங்கோ, வாங்கோ. வராமல் இருந்துட்டியளோன்னு நினைச்சேன். இப்படி உட்காருங்கள்'' என்று வரவேற்றார் அவர். நான் உட்கார்ந்தேன்.

''ஏ, வடிவேலு. ரெண்டு காப்பி கொண்டா.''

''காப்பியா? இப்பத்தான் சாப்பிட்டேன்.''

''பத்திரிகைக்காரர்களுக்கு காப்பி சாப்பிட நேரம் காலம் வேறயா வச்சிருக்கீங்க. சும்மா சாப்பிடுங்க.''

காப்பி வந்தது.

''காப்பி ரொம்ப நன்றாயிருக்கு.''

''இந்தப் பயல் கைராசியே தனி, சார். பயல் மனசு வச்சி போட்டான்னா காப்பி பிரமாதமாயிருக்கும். கிண்ணென்று இரண்டு கட்டை சுருதி தாராளமாய்ப் பிடிக்கும்'' என்று சங்கீத பாஷையிலேயே பேசினார் அவர்.

இது தான் சமயமென்று நான்வந்த காரியத்தை நினை வூட்டினேன். ''ஆமாமா, காப்பியைப் பத்திப் பேசினுக் கூட, உங்களுக்கு சங்கீத ஞாபகம்தான் வருகிறது. உங்களைப் போன்ற மேதைகளால்தான் நமது கர்நாடக சங்கீதம் உயிர் பெற வேண்டும்'' என்று ஆரம்பித்தேன்.

''கர்நாடக சங்கீதமா? அதை எங்கே சார் உருப் படியாய் பாடருன்? சங்கீத வித்வானெல்லாம் தில்லானு பாட்டும் தெம்மாங்கு பாட்டும் பாடிஞவா உருப்படும்? அருமையா தோடி வாசிச்சாக்கூட இந்த ரசிகர்களுக்குப் பிடிக்காது. அதைவிட, ஒரு ஹிந்துஸ்தான் ட்யூன் போட்டுட்டா, அவனுக்குத்தான் சார் பேரு! இப்படி யிருந்தா எங்கே உருப்படுறது?'' என்று அவர் விமர்சனம் செய்ய ஆரம்பித்தார்.

சங்கீத விமர்சனத்திலிருந்து பேச்சை அவரது வாழ்க் கைக் குறிப்புகளுக்கு மாற்றும் வித்தையை, நான் பேட்டி திருபனுக்குரிய செக்குமாட்டுத்தனக் குயுத்தியால் திருப்பி விட்டேன், அவரது பிறந்த ஊர், பிறந்தநாள், குழந்தைப் பருவம், சங்கீத சிட்சை முதலிய பல விவரங்களையும் கேட்டுத் தெரிந்து கொண்டேன்.

''எனக்கு ஏதாவது ஞானம் இருக்கிறதென்ருல், அது எங்க தகப்பஞர் வேல்சாமி நாதசுரக்காரருடைய பிச்சை தான் சார். அவர்கள் வாசிப்பை தாங்கள் கேட்டிருக் கிறீர்களோ, என்னவோ?'' என்று ஆரம்பித்தார்.

''கேட்டதில்லை. கேள்விப்பட்டிருக்கிறேன்'' என்று சொல்லிவிட்டு, மேற்கொண்டு கேள்விகளை ஆரம்பித்தேன்.

''உங்களுக்கு கல்யாணமாயிருக்கிறதல்லவா?''

''கல்யாணமா? ஒன்றுக்கு மூன்று மனைவிகள்; ஒருத்தி மாஜி மனைவி!'' என்றுநிர்விசாரமாய்ச் சொன்ஞர், நாக முத்து.

நான் ஒரு கணம் யோசித்தேன்: ''மாஜி மனைவியா?''

''ஆமாம். இருவர்தான் என்னேடு வாழ்கிருர்கள். முதல் மனைவி இப்போது இல்லை.''

"'தவறி விட்டார்களா?''

''மீண்டும் யோசித்தேன்.

''இல்லையில்லை. வந்து...'' என்று இழுத்துப் பேசினார் நாகமுத்து.

எனக்கு அதை அழுத்திக் கேட்க மனமில்லை. அடுத்தவனுடைய அந்தரங்கத்தைத் தெரிந்து கொள்வதில் மனிதனுக்குள்ள ஆர்வம் அதிகம்தான். ஆனால், அந்த ஆர்வத்தின் விளைவாக ரசாபாசமான எதையாவது கேட்க நேர்ந்தால்—? எனவே நான் அடுத்த கேள்விக்குத் தாவினேன்.

''சரி. குழந்தைகள் எத்தனை?''

''முப்பத்திரண்டு!''

முப்பத்தி இரண்டா? நான் திகைத்தேன். ஆசாமிக்கு சந்தான பாக்யத்துக்குக் குறைவே இல்லை போலிருக்கிறது. இப்படிச் செயலுள்ளவர்களுக்கு எத்தனை பிறந்தால் என்ன? என் போன்ற பத்திரிகாசிரியர்களுக்குப் பிறந்தால் தானே சங்கடம்!...

ஒரு கணம் நின்று ''முப்பத்திரண்டா?'' என்றேன்.

நாகமுத்து சிரிக்க முடியாமல் சிரித்தார். ''ஆமாம் சார். மேளகர்த்தா ராகம் முப்பத்திரண்டும் எனக்குக் குழந்தைகள்தான். தோடிதான் எனக்குச் சீமந்த புத்திரன்!'' என்று மெதுவாகச் சொன்னார்.

''அப்படி யென்றால், உங்களுக்கு புத்திர பாக்யம் இல்லையா?'' குரலில் நிருபனின் நிர்விசாரத்தை விழுங்கி, தணிந்த முறையில் கேட்டேன்.

''அந்த பாக்யம்தான் எனக்கில்லை. நம்பிக்கையும் இல்லை.''நாகமுத்துவின் குரல் தொண்டையில் அடைத்துச் செருகியது.

''க்ஷேத்திராடனம் பண்ணினாலென்ன?''

''என்னைப் போன்ற நாதஸ்வர வித்வான் போகாத க்ஷேத்திரங்களா? அது வேறு கதை, சார்.''

கதையா? என்போன்ற கதாசிரியனுக்கு வேறு என்ன வேண்டும். ஊரானுடைய சோகக் குரலை யெல்லாம் எந்த விதமான மனமாற்றமுமில்லாமல் மனசில் வாங்கி, காசு பறிப்பது தானே எங்கள் கலை! அந்தக் கதையைக் கேட்க ஆசை கொண்டேன்.

''என்ன கதை?''

"கதையா? என் வாழ்வையே பாழாக்கிய சம்பவத்தை கதை யென்று சொல்வது?'' அவர் முகத்தில் வெற்றிலைச் சுகத்தால் ஏற்பட்டிருந்த லட்சுமிகர மெல்லாம் களையோடிப் போயிற்று. "நீங்கள் மட்டும் கேட்கத் தயாராயிருந்தால் சொல்கிறேன். ஆனால், இதையெல்லாம் பத்திரிகையில் எழுதிவிடக் கூடாது. இது என் வாழ்வின் ரகசியம் மட்டு மல்ல;ஒரு தலை முறையின் ரகசியம்!'' என்று ஆரம்பித்தார். அவருடைய உணர்ச்சி நிலையைப் பார்த்தால் அந்த சமயம் அவர் தன் 'கதை'யை யாரிடமாவது சொல்லி ஆற்ற விரும்பியவர் போலக் காணப்பட்டார்.

"இஷ்டப் பட்டால் சொல்லுங்கள். நான் அதை வெளியிடுவதில்லை'' என்று உறுதி கூறினேன்.

நாகமுத்து எழுந்து சென்று வெற்றிலையைத் துப்பி விட்டு, வந்து உட்கார்ந்தார். ஒரு கணம் முகத்தைப் பார்த்தார்: அதன் பின்னர் வெற்றிலைச் செல்லத்தைத் திறந்து ஒரு வெற்றிலையை அர்த்தமற்று நகத்தால் கிள்ளிக் கொண்டே பேச ஆரம்பித்தார்.

''அப்போது எனக்கு இருபது வயசிருக்கும். தகப்பனார் அதற்கு முன்பே காலமாய் விட்டார்கள். எனக்கு அவர்கள் புண்ணியத்தால் சங்கீத ஞானம் கொஞ்சம் இருந்தது. கோயில் சேவுகத்துக்கும், கல்யாணங்களுக்கும் வாசிக்கப் போவேன். அப்போதுதான் அந்த இன்பகரமான சம்பவம் நடந்தது'' என்று சொல்லி நிறுத்தினார்.

''இன்பகரமா!''

''ஆமாம். இன்பத்துக்குப் பின்னர்தான் துன்பம் வருகிறது. அல்லது இன்பத்தின் இறுதியேதுன்பம் தானே?

எனக்கு இந்த ஞானமெல்லாம் தெரியாது, சார். அதெல்லாம் உங்கள் காரியம். எனக்கெதற்கு?''

''சரி விஷயத்தைச் சொல்லுங்கள்.'' ஆர்வத்துக்கு அணை கட்ட முடியாமல் துடித்துப் போய்க் கேட்டேன்.''

''சொல்கிறேன். ஸ்ரீவைகுண்டத்தில் ஒரு கல்யாணம். என்னை அழைத்திருந்தார்கள். நானும் சொதையோடு சென்றிருந்தேன். கல்யாண நாளன்று மாலையில் நலங்கு நடந்தது. நலங்குக்கு யாரோ ஒரு பெண் பாட வருவதாகச் சொன்னார்கள். நன்றாகப் பாடுவாள் என்றும் கேள்விப் பட்டேன். நலங்கில் என்னையும் வாசிக்க வேண்டுமென்றார்கள். சரி என்றேன்.

''சாப்பாட்டுக்கு மேல் நலங்கு. அந்தப் பெண் வந்து சேர்ந்தாள். அவளுக்கும் என் வயதுதான் இருக்கும். நல்ல அழகி. பார்த்தவுடனேயே அவள் மீது எனக்கு ஏனோ ஒரு பாசம் தோன்றியது. விட்ட குறை தொட்ட குறை என்பார்களே, அதுதானோ என்னவோ? வந்து உட்கார்ந்தவுடனேயே அவளைப் பார்த்தேன். அவள் அழகு என்னை மயக்கியது என்று சொல்ல முடியாது. வெற்றிலைக் காவியேறிய அவளது உதடுகள் அவளது எலுமிச்சம் பழம் போன்ற தங்க மயமான முகத்தில் கோமேதகம் போல ஒளி வீசிற்று. அரகஜா சாந்தின் கருமையை, கண்ணின் கருமணிகள் தூக்கி விழுங்கின. எனக்கு உங்களைப் போல் எல்லாம் வர்ணிக்கத் தெரியாது. என்றாலும் அந்தக் கலை என்னை வசீகரித்தது.''

''என்னையும் ஓரக் கண்ணால் ஒரு பார்வை பார்த்து விட்டு அவள் பாட ஆரம்பித்தாள். இனிய சாரீரம். போன ஜென்மத்தில் அவள் எந்த ஸ்வாமிக்கு தேனபிஷேகம் பண்ணினாளோ, தெரியாது. கணீரென்ற நாதம் அவள் கண்டத்திலிருந்து பிறந்து வந்தது. முதல் இரண்டு பாட்டுக்கும் நானும் அவள் போக்குப்படியே வாசித்தேன். அவளும் லேசாகச் சிரித்துக் கொண்டே கல்யாணியில் ஒரு பாட்டுப் பாட ஆரம்பித்தாள். காகலி நிஷாதத்தில் அநாயாசமான

கார்வை கொடுத்துப் பாடினுள். அவளுடைய வித்வத்தை என்ருல் அப்போதுதான் உணர முடிந்தது. உடனே வேண்டு மென்று அவளிடம் குறும்பு பண்ணி அவள் அபிமானத்தைச் சம்பாதிக்க வேண்டும் என்று எண்ணினேன். என்ன செய் வது? வேண்டுமென்ருல், அவள் பாடும் ஒரு ராகத்தைக் கெட்டிக்காரத்தனமாகச் சுருதிபேதம் செய்து வேறு ராகம் போல மாற்றினுல் என்ன என்று யோசித்தேன். சுருதி பேதம் செய்வது நல்ல சங்கீதத்துக்கு அழகல்ல என்று தந்தை சொல்லியிருக்கிருர். ஆனுல், அந்தப் பெண்ணேடு விளையாட வேண்டும் என்று விரும்பும் என் மனசுக்கு அதெல்லாம் தெரியவா செய்தது?''

மீண்டும் ஒரு கணம் நாகமுத்து நிறுத்திஞர், நான் யோசித்தேன்: 'கதாநாயகி வந்து விட்டாள், இனி கதை தான் வர வேண்டும்'.

நாகமுத்து வெற்றிலைக் காம்பை வாயில் கிள்ளிப் போட்டுக்கொண்டு பேச முனைந்தார். அதற்குள் நன்ருக இருட்டிவிட்டது. அவரது சமையற்காரன் கூடத்து விளக் கின் ஸ்விட்சைப் போட வந்தான். மீண்டும் பேச்சைத் தொடங்குவதற்கிருந்த நாகமுத்து "வடிவேலு, விளக்கைப் பிறகு போடலாம்'' என்று சொன்ஞர். அவன் போஞன். நாங்கள் இருவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்க முடிந்தது. ஆனுல், முக உணர்ச்சிகளைக் காண முடிய வில்லை.

"கேளுங்கள் சார். என்ன சொன்னேன்? அவள் பாடினுளா? அடுத்தபடியாக, அவள் தோடி ராகத்தில் ஒரு பாட்டுப் பாட ஆரம்பித்தாள். தோடி என்ருல் எனக்குக் கேட்கவேண்டுமா? சரி. இதுதான் சந்தர்ப்பம் என்று தீர்மானித்துக்கொண்டேன். கோயிற்புரி அழகிய நம்பி அண்ணுவி கவனம் செய்த பதம் அது. ஆலாபனை யில் அதிக நேரம் செலவழியாது, சீக்கிரத்தில் பதம்பாட வந்துவிட்டாள். அவள் ஞானத்தையும் சும்மா சொல்ல முடியாது. ஆதி தாளத்தில் பாட்டுப் பாடினுள்.

"எங்கே இ ருந்தாலும் இங்கே அ ழைத்து வா"

என்ற பதம்தான் அது. பல்லவியை இரண்டு தடவை பாடிவிட்டு, என்னைப் பார்த்தாள்.

"நானும் நாதஸ்வரத்தை ஏந்தினேன். மனசிலே ஒரே உற்சாகம். பல்லவிக்குரிய 'த நிஸா நி தமகம பதநீத பம கக' என்ற சுரத்தை வாசிக்கும்போது சாதாரண காந்தாரத்தில் அழுத்தம் கொடுத்து, உலாவி வந்தேன். அவள் என்னைப் பார்த்துச் சிரித்தாள். மீண்டும் பாடினாள். எனக்கு அப்போதுதான் அவளோடு குறும்பாடவேண்டும் என்று மனசில் ஆசை பிய்த்துப் பிடுங்கியது. இரண்டாம் தடவை அவள் பாடிவிட்டதும், நான் வேண்டுமென்றே தாளத்தின் நடையை மாற்றிப் பாட்டை வாசித்தேன். அவளைத் திகைக்க வைக்க வேண்டுமென்பதற்காக, சதுச்ர நடையிலுள்ள தாளத்திற்கு சங்கீர்ண நடை கொடுத்து அதிலும் கால் இடத்தில் எடுத்தேன்.

"சபை முழுவதுமே என் பக்கம் திரும்பியது. நான் செய்வது சரியா தப்பா என்பதுபற்றி அவர்களுக்குக் கவலை யிருப்பதாகத் தெரியவில்லை. அவள் பாட நான் வாசிப்பது நின்றுபோய் இப்போது நான் வாசிக்க அவள் பாடுவது எப்படி இருக்கும் என்பதைக் கவனிக்கத்தான் அவர்கள் திரும்பினர். ஆனால், என் உள்ளத்திலுள்ளதெல்லாம் அவர்களுக்குத் தெரியுமா? நான் வாசித்து முடித்தேன். அவள் இப்போது சிரிக்கவில்லை. குனிந்து கொண்டே பாட்டை எடுக்க ஆரம்பித்தாள். ஆனால், தாளமிடக் கை வளையவில்லை. மறுகணம் சபையில் அவள் விக்கி விக்கி அழ ஆரம்பித்துவிட்டாள்.

"எனக்கு என்னவோ போலிருந்தது. நான் செய்தது தப்பு என்றுகூடப் பட்டது. என்ன பண்ணுவது? பாவம், அவள் பாடுவதே புதிதாயிருக்கலாம். சபையில் குறும்புத்தனம் பண்ணி அவள் பிழைப்பில் மண்ணெறிந்து விட்டோமோ என்று சந்தேகம். சில நிமிஷத்தில் அவள் ஒன்றும் பேசாமல் எழுந்து சென்று விட்டாள். நானும் மத்தியமாவதியை வாசித்து நலங்கை முடித்தேன். சபையி

விருந்த பெரிய மனுஷர்கள் எல்லாம் என்னைப் பாராட்டினார்கள். ஆனால், என் மனசில் உறுத்தும் அந்த ரகசியத்தை அவர்கள் அறிவார்களா?''

நாகமுத்து ஒரு கணம் பெருமூச்சுவிட்டார். நானும் பேசவில்லை. இருட்டில் அவர் வெற்றிலைப் பெட்டியை மூடும் சப்தம் மட்டும் கேட்டது. மீண்டும் அவர்குரல் கேட்டது.

''அன்று ஜாகைக்குச் சென்றதும் உட்கார்ந்து யோசித்தேன். அந்தப் பெண்ணைச் சந்தித்து சமாதானப் படுத்த வேண்டுமென்று மனம் துடித்தது. காரணம் தெரியாத ஒரு ஆசை; அந்த ஆசையின் அலைக்கழிப்பினால், என்னைச் சமாதானப்படுத்த அவளைச் சந்தித்தாகவேண்டும் என்ற பரிதாப உணர்ச்சி என் மனசில் ஏற்பட்டது. அந்தச் சமயம் பார்த்து தவுல்கார மகாலிங்கம் வந்து சேர்ந்தார்.''

"நானாகப் பேச்சை ஆரம்பித்தேன். 'என்ன அண்ணாவி! உருப்படி எப்படி?'' என்று தொடங்கினேன்.

' ''கேட்பானேன். அபூர்வமான உருப்படி. தம்பியும் சரியாய்த்தான் ஒரு பிடி பிடிச்சீங்க. நான் எல்லாம் விசாரிச்சிட்டேன். 'அந்தப் பொண்ணு தாசி வடிவாம்பாளின் மகளாம்; மேலத் தெருவிலேதான் குடியாம்' '' என்று ஆரம்பித்தார்.

'நான் அதைக் கேட்கலை' என்றேன்.

"எல்லாம் எனக்குத் தெரியும், தம்பி. இன்னிக்கி ராத்திரி போய்வர எல்லா ஏற்பாடும் பண்ணியாச்சு.

இத்தனை நாள் தம்பியோட பழகியும், உங்க கண்ணை எனக்கா புரிஞ்சிக்க முடியாது?' என்று அழுத்திச் சொன்னார் அண்ணாவி.

''அதற்கு மேலும் பிகு பண்ணி காரியத்தைக் கெடுத்துக்கொள்ள விரும்பவில்லை, மௌனமாயிருந்தேன். அண்ணாவியும் சிரித்துக்கொண்டே போய்விட்டார். எனக்கு அந்தப் பொழுதிலிருந்தே மனசு குதுகுதுக்க ஆரம்பித்து விட்டது.

''அந்தி மயங்கிய பின்னர் நானும் அண்ணாவியு மாக அங்கு சென்றோம். வீட்டு முன்கூடத்தில் யாருமில்லை. சிறு மண்ணெண்ணெய் விளக்குமட்டும் எரிந்துகொண் டிருந்தது. சுவரில் படங்கள் தொங்கின. என்ன படங் கள் என்று தெளிவாய்த் தெரியவில்லை. யாராவது வரட்டும் என்று நின்றோம்.

"உள்ளே இரண்டு பெண் குரல்கள் பேசிக்கொள்வது கேட்டது.

'அவர் அப்படித் தாள நடையை மாற்றி வாசிப்பார் என்று எனக்கு எப்படித் தெரியும் அம்மா!' என்றது எனக்குப் பழகிய குரல்.

'' 'வேல்சாமி நாதசுரக்காரரின் பிள்ளைதானடி! அவ னுக்கு அப்படியென்ன அதுக்குள்ளே ஞானம் வந்துடுத்து? அவன் அப்பா மாதிரி வேறெ! இருந்தாலும், அவர் புள்ளெதானே! நீ மட்டும் சளைச்சவளா?' என்றது மறு குரல். அது வடிவாம்பாளின் குரலாகத்தான் இருக்க வேண்டும் என்று ஊகித்துக்கொண்டேன்.''

''என்ன இருந்தாலும், அவர் கெட்டிக்காரர். சங் கீதம் என்றால்...' என்று ஆரம்பித்தாள் அந்தப்பெண்.

"அதற்குள் மகாலிங்க அண்ணாவி ஒரு 'செருமு' செருமி எங்கள் வருகையைத் தெரிவித்தார். இருவரும் வெளி வந்தனர். அந்தப் பெண்ணும் அவள் தாயும்தான் வந்தார்கள்.

'வாங்க வாங்க' என்று வரவேற்றாள் வடிவாம்பாள்.

''நாங்கள் உட்கார்ந்தோம். அந்தப் பெண் ஒன்றும் பேசாமல் சேலை முனையைத் திருகித் திருகி விட்டுக்கொண் டிருந்தாள்.

''நான்தான் பேச ஆரம்பித்தேன். 'இன்று நான் மிகவும் அசம்பாவிதமாக நடந்து கொண்டேன். உங்கள் பாட்டுக்கு நான் வாசிப்பது என்ற ஒழுங்கை மீறியது என் குற்றம்தான். ரொம்ப வருத்தமாயிருக்கிறது' '' என்றேன்.

"அதற்குள் அந்தப் பெண் கேவிக் கேவி அழுது விட்டாள். பிறகு மனசை இழுத்துப் பிடித்துக் கொண்டு, "நீங்க ரொம்பப் பெரியவுக. என் பாட்டுக்கு நீங்க வாசிக்க வந்ததே தப்பு. என் பாட்டு எங்கே, உங்கள் ஞானம் எங்கே? என்னை மன்னிச்சிடுங்கோ' என்று குழைந்து பேசி, என் காலிலேயே விழுந்து விட்டாள்."

"எனக்கு எதுவும் ஓடவில்லை. அதற்குள் வடிவாம்பாள், தன் மகளைப் பார்த்து, 'செல்லம், இதற்கெல்லாம் அழுவாளோ? தம்பி யாரு, நீ யாரு? எழுந்திரம்மா' என்றாள்".

"அண்ணாவி மகாலிங்கம் சமயம் பார்த்து 'தம்பி, அப்ப நான் இப்படி வெளியிலே கொஞ்சம் போயிட்டு வாரேன்' என்று வெற்றிலை பாக்கு எடுத்துக் கொண்டு கிளம்பி விட்டார்".

"அதிகம் சொல்வானேன். வடிவாம்பாளும், செல்லமும் வருந்திக் கேட்டுக் கொண்டதன் பேரில் நான் கொஞ்ச நாள் செல்லத்துக்கு சங்கீதப் பயிற்சி அளிப்பதாக ஒப்புக்கொண்டேன். செல்லத்துக்கும் எனக்கும் பழக்கம் நெருக்கமடைந்தது. வடிவாம்பாளும் அதற்கு இடம் கொடுத்தாள். ஒரு நல்ல தினத்தில் செல்லத்தை என் அபிமான ஸ்திரியாகவே ஸ்வீகரித்துக் கொண்டேன்.

"எங்கள் காதல் வாழ்க்கை மிகவும் சுகமாக நடந்து வந்தது, சுமார் ஒரு வருஷ காலம் அப்படியே வாழ்ந்து வந்தோம். கணவனும் மனைவியுமாகவே வாழ்ந்து வந்தோம். இடையில் அவளுக்கு ஒரு தடவை கர்ப்பம் தரித்து மூன்று மாதத்தில் அது அழிந்தும் போயிற்று."

நாகமுத்து மீண்டும் கதையை நிறுத்தினார். எனக்கோ கதை இன்னும் ஆரம்பமாகவில்லை என்றே தோன்றியது. ஒருவேளை இனித்தான் கதை அழுத்தம் பெறுகிறதோ என்று ஒரு சந்தேகம்.

நாகமுத்து மீண்டும் ஆரம்பித்தார்.

''இனிமேல்தான் சார், அந்தப் பாழாய்ப் போன துன்பம் வந்தது. வடிவாம்பாளுக்கு அப்போது உடம்புக்கு மிகவும் முடியாமல் படுக்கையில் கிடந்தாள் வைத்தியர் களும் கை விட்டு விட்டனர். மரணப் படுக்கைதான். அப்போது எங்கள் இருவரையும் அழைத்து தம்பி, செல்லம்! கேளுங்கள். தம்பி உன் தந்தை வேல்சாமி நாதசுரக்காரரும் உன்னைப் போலத்தான். அவரும் என்னைத் தன் அபிமான ஸ்திரீயாகத்தான் வைத்திருந் தார். என்னைக் கோபுரத்தில் ஏற்றி வைத்து கும்பிடப் போவதாகவெல்லாம் புகழ்ந்தார். அதிகம் வளர்ப்பா னேன். உன் தாயார்கூட அவரிடம் அவ்வளவு விசுவாச மாயிருந்திருக்க முடியாது. நான் தாசியானாலும் அவருக்கு அவ்வளவு பக்தி சிரத்தையோடு பணிவிடை செய்தேன். ஆனால் அவரோ மறந்து விட்டார். ஒரு மாத காலத்தில் வருகிறேன் என்று சொல்லிப் போனவர் அப்படியே போய் விட்டார். அந்த வஞ்சனையின் புண் என் நெஞ்சில் இன்று தான் ஆறவேண்டும். நீ அவர் மகன்; செல்லம் என் மகள். அதனால்தான் அவர் செய்த வஞ்சகத்துக்கு உன்னைப் பழி வாங்கினேன். நீ செல்லத்தை விரும்பியதும், இது தான் சமயமென்று திட்டமிட்டேன். நீ கட்டிய மனைவி போல, செல்லத்திடம் நடந்து கொள்கிறாயே செல்லம் யார் தெரியுமா? உன் தங்கை!'' என்று சொல்லிவிட்டு மறுகணம் கண்ணை மூடிவிட்டாள்.

' ''செல்லம் என் தங்கையா? தங்கையையா நான் கல்யாணம் செய்தேன்! ஒரே தகப்பனுக்குப் பிறந்த குழந்தைகளா தம்பதிகளாக நடந்து கொள்வது?' இப்படி யெல்லாம் என் சிந்தனை தட்டுத் தடுமாறியது. அன்று முதல் என் மனம் நிம்மதியை இழந்தது.''

''நானும் செல்லமும் ஒன்றாகத்தான் இருந்தோம். ஆனால், 'செல்லத்தை என்றாவது நெருங்கும்போது நான் கணவனாகவே நடந்துகொள்ள முடியவில்லை. மனசிலே ஏற்பட்ட கறை என் ஆண்மையையே சூறையாடிவிட்டது. பிறகு புத்திர பாக்யம் எங்கே?' என்று சொல்லி, மீண்டும்

கதையை நிறுத்தினார் நாகமுத்து.''

நானும் சூள் கொட்டிவிட்டு யோசித்தேன். இதுவும் ஒரு விகாரமா? தங்கையென்று தெரிந்ததனால் ஏற்பட்ட மன விகாரம் உடம்பையும் பாதிக்குமா? ஒடீபஸ் விகாரத்தைப்பற்றிப் படித்திருக்கிறேன். அவன் தாயையே தாரமாக்கியவன். தாயிடம் தனக்கு ஒரு குழந்தையையும் பெற்றெடுத்தான் என்று கதை. அருணகிரிநாதன் தமக்கையைச் சேர முனைந்தான் என்றும் படித்திருக்கிறேன். சம்பந்தம் ஏற்பட்டதா என்று தெரியவில்லை. தாயைப் பெண்டாள வந்த ராஜகுமாரன் கதையிலும் அவன் அவளைப் பெண்டாள விடாமல் கன்றுக்குட்டி தடுத்து விட்டது, அப்படியானால் இந்த விகாரத்தை எப்படிப் புரிந்து கொள்வது? நான் ஒருகணம் தயங்கிவிட்டு வாயைத் திறந்தேன்.

''அப்புறம்? அதன் பின்னர் தாங்கள் வேறு கல்யாணம் பண்ணிக் கொண்டீர்கள் அல்லவா?'' என்று ஆரம்பித்தேன்.

''பண்ணி என்ன சார் செய்ய?'' என்றார் நாகமுத்து. இருட்டில் அவர் அழுகிறாரோ என்று சந்தேகம். குரலில் அத்தனை பரிதாபம் தொனித்தது. ''செல்லம் என் தங்கை. ஆனால், இப்போதோ மனைவி என்ற ஸ்தானத்தில் எனக்கு யார் வந்தாலும் எல்லாரும் என் தங்கைகளாகவே தோன்றுகின்றனர். பிறகு நான் எப்படி கணவனாக நடப்பது? வடிவாம்பாள் என்னை வஞ்சித்து விட்டாள்! என் ஆண்மையை ஒரே ஒரு சொல்லால் வஞ்சித்து விட்டாள்!'' என்று கத்தினார் நாகமுத்து.

நான் அவரது சோகத்தை மௌனத்தின் மூலம் பகிர்ந்து கொண்டேன்.

நாகமுத்து மீண்டும் பேசினார்: ''சார், அந்தக் கல்யாண நலங்கில், நான் சுருதி பேதம் செய்து செல்வத்தைச் சபையில் அவமானப்படுத்தினேன். வடிவாம்

பாள் கிழவியோ என் வாழ்க்கையையே சுருதி பேதம் செய்துவிட்டாள்! சங்கீதத்தில் சுருதிபேதம் செய்தாலும், மீண்டும் பழைய நடையைப் பிடித்து விடலாம்; வாழ்க்கையிலே, இதயத்திலே சுருதி பேதம் செய்தால் மீண்டும் அதைச் சரிப்படுத்த முடியுமா?'' என்று கதையை முடித்தார்.

எனக்கு நாகமுத்துவின் கதை பெரிய புதிராக இருந்தது. அவரது சோகக் குரலுக்குப் பின் நான் எதுவும் பேச விரும்பவில்லை. சூழ்நிலையை மாற்றுவதற்காக, எழுந்திருந்து விளக்கைப் போட்டேன்; மௌனமாக வெற்றிலையைக் காம்பு கிள்ளிப் போட்டு ஒதுக்கிக்கொண்டேன்.

பிறகு, மெதுவாக ''நேரமாகிறது. நான் வருகிறேன்'' என்று சொல்லி எழுந்தேன்.

''வடிவேலு, டிரைவரைக் கூப்பிட்டு ஐயாவைக் கொண்டு விட்டுவிட்டு வரச்சொல்லு'' என்றார் நாகமுத்து,

எங்களுக்குள் வேறு பேச்சு நிகழவில்லை.

3

மறுநாள் நான் நாகமுத்துவின் பேட்டியை எழுதிக் கொண்டிருந்தேன். அந்த பேட்டி விவரம் பின் வருமாறு முடிந்திருந்தது.

நாகமுத்துவுக்கு குழந்தைகள் உண்டு : நாடகப் பிரியா, கோகிலப் பிரியா, நாம நாராயணி, பவப்பிரியா, லதாங்கி, சரசாங்கி, கல்யாணி......

இவர்களில் அவருக்குச் சிறந்த புத்திர பாக்கியமாக விளங்குவது தோடி தான்.

1949

# ஆனைத் தீ

## 1

ஊட்டுப் போட்டுத் தரனு மின்னான்
ஒத்த பிள்ளை சுடலையாண்டி!

என்று பாடிக் கொண்டு, வில்லுப் புலவன் வீராசாமிப் படையாச்சி பிடரியில் விழுந்து புரளும் தலைமயிரை அள்ளிச் செருகிக் கொண்டே, கட்டாரித் தேவன் வீட்டு வாசலில் கால் வைத்தான்.

உள்ளே, மார்பின் மேல் வரிந்து கட்டிய சேலை நெகிழாமல், உடற்கட்டின் ஒவ்வொரு அங்கமும் பின்னி விட்ட சாட்டையைப் போல் துவண்டு துவண்டு திமிற, மாடத்தி முற்றத்திலுள்ள கற்குழியில் நெல்லையிட்டு உலக்கைக் கொண்டு குத்திக் கொண்டிருந்தாள். இரண்டு கையும் மாறி மாறி நெல்லைக் குத்த, பாதத்தால் குழியை விட்டு வெளிவரும் நெல் மணியை ஒதுக்கித் தள்ளிக் கொண்டிருந்தாள்.

வீராசாமியைக் கண்டதும் குத்துவதை நிறுத்திவிட்டு, உலக்கையை மார்பின்மேல் சாத்தியவாறே, ''என்ன கொழுந்தப்பிள்ளே, கோயிலுக்குப் போவெலே? இன்னிக்கி உங்க வில்லுதானே'' என்று கேட்டாள்.

''ஆமா, மதினி. எல்லாம் நம்ப சொளைதான். அது சரி. அண்ணாச்சியை எங்கே? வெளியே போயிருக்காகளா?'' என்று கேட்டான் வீராசாமி.

''நல்லாத்தான் கேக்கிய? கோயில்லே கொடையும் நாளுமா வீட்டிலியா இருப்பாக. அதுவும் இன்னிக்கி ஊட்டுப் போட்டுத்தார நாளு. கோவிலுக்குப் போற

தாவத்தான் சொல்லிட்டுப் போனுக'' என்று சொல்லி விட்டு, மாடத்தியம்மா உலக்கையைப் பிடித்தாள்.

''சரிதான். கோயிலுக்குத்தான் போயிருப்பாக. நானுந் தான் போகனும். வரட்டுமா?'' என்று கூறிவிட்டு நடை யிறங்கினுன், வீராசாமி.

மாடத்தியம்மாவின் உலக்கைச் சப்தம் மீண்டும் கேட்டது.

படியிறங்கிய வீராசாமி, ''அண்ணுச்சி கோயிலுக்கா போயிருப்பாரு? கோயில் குளத்தான் கடைக்குந்தான் போயிருப்பாரு!'' என்று தனக்குள் முணுமுணுத்துக் கொண்டே நடையைக் கட்டினுன்.

## 2

கருப்பன் துறை சுடுகாட்டுப் பிராந்தியம். அந்தப் பிராந்தியம் முழுவதும் ஒரே பனங்காடு. ஆற்றங்கரையை ஒட்டிப் பிடித்தாற்போல் உயரமாக வளர்ந்து, கரையில் வேரோடி நிற்கும் மருத மரங்கள் தாமிரபருணி நதிப் போக்கிற்கு பாரா கொடுப்பது போல் நிற்கும். பனங் காட்டு வரிசையைக் கடந்துவிட்டால், விளாகத்துறையின் பக்கம் நாலைந்து மாமரங்கள் கொண்ட தோப்பும், அதை யொட்டிய துரவுகளும், குடிசைகளும், ரோட்டை யடுத் துள்ள கோயில் குளத்தான் சாராயக் கடையும், செங்கல் சூளையும் ஊழிக்குப் பின் முளைத்தெழுந்த உலகம் போல் புது மேனியுடன் நிற்கும். ஆற்றங்கரை யோரத்தில், மாந்தோப்புக்குச் சமீபமாக, சுடுகாட்டுப் பிராந்திய எல்லைக்குள் சின்னக்கல்கட்டிடம் ஒன்று தெரியும். முன் புறமும் மேல் புறமும் அடைப்பற்றிருக்கும் அந்தக் கட்டிடந்தான் சுடுகாட்டுச் சுடலைமாடன் கோயில்.

கருப்பன்துறைச் சுடலைமாடன் என்றுல் அந்தப் பக்கத்து ஜனங்களுக்கு பயமும் பக்தியும் அதிகம். இருட்

டுக் காலங்களில் அந்த வழியாய்ப் போகின்றவர்கள் சுடலை மாடசாமியை ஏறிட்டுக் கூடப் பார்க்க மாட்டார்கள். கோயில் முன் வந்தவுடன் கண்ணை மூடிக் கொண்டு தம் வழியே நடையை எட்டிப்போடுவார்கள். காரணம் அந்தச் சாமி துடியானது மட்டுமல்ல. அதை ஏறிட்டுப் பார்ப்பதற்கே யாருக்கும் தைரியம் இருக்காது.

நல்ல கருங்கல்லில் வடித்து, மழமழப்பேறிய சுடலை மாடசாமி சிலையின் முகத்தில் குந்தம் தள்ளியது போல் உள்ள உருண்டையான முண்டக் கண்களும், கடைவாயி னின்று கிளம்பி, தாடை வரையிலும் ஓடியுள்ள வீரப் பல்லும், இளித்த வாயில் இடைவெளி தெரியும் பல் வரிசையும் குரூரமாகவும் பயங்கரமாகவும் இருக்கும். சிலை யின் ஒரு கரம் ஒடிந்து ஊனமாயிருந்தது. எவனோ ஒரு மலையாள மாந்திரிகன் விழத் தட்டியது என்று சில பேர் சொல்லுவார்கள். எனினும், ஜனங்களுக்கு அதில் நம் பிக்கை அவ்வளவு லேசில் வராது. 'காளியப் புலையனை வெற்றி கண்ட கரமா, மந்திரத்தில் முறிந்து விழுந்து விடும்?' என்பதுதான் அவர்களது நம்பிக்கை. பிறை நிலாக் காலங்களில், இருளில் முகடற்ற மேல்புறத்தின் மூலம் மங்கிய சந்திர ஒளி சிலையின் மீது வழிந்தோடு வதைப் பார்த்துவிட்டால், அங்கேயே பயமடித்து ரத்தம் கக்கிச் செத்துப் போவார்கள் என்றும் சொல்வதுண்டு. சிலை அத்தனை கோர ரூபத்துடன் இருக்கும். மேலும், அது பிணந் தின்னிச் சுடலை.

எனினும், சுடலையையே குல தெய்வமாகக் கொண்ட வர்கள் நாலைந்து வருஷங்களுக்கு ஒரு முறை சுடலைக்குக் காவு கொடுத்துக் கொடை நடத்துவார்கள். கொடைக் காலத்தில் மட்டும் சுடுகாடு, சுடுகாடாகவே தோன்றாது. பறை மேளமும், தப்பறையும் மூன்று நாளும் கும்மென்று எதிரொலித்து விம்மிக் கொண்டிருக்கும். சுடலை மாடனை யும் ஜனங்கள் அப்போதுதான் ஏறிட்டுப் பார்க்கத் துணிவார்கள். பூசாரியின் அலங்காரத் திறனில் சிலையின் பயங்கரம் ஓரளவு மாறிப் போயிருக்கும்.

கொடைக் காலம் மட்டுமல்லாது, மற்றக் காலங் களிலும் சுடலையை நேர் நின்று தரிசிக்கும் தெம்பும் திராணி யும் பெற்றவன் ஒருவன் தான் உண்டு. அவன்தான் கட்டாரித் தேவன். கோழைப்பட்ட மனசுடையவர் களுக்குக் கட்டாரித் தேவனைக் காணவே தைரியம் வேண்டும். சுடலையே உயிர் பெற்று உலாவுவது போலி ருக்கும், அவனுடைய தோற்றம். கரு மெழுகிலே திரட்டிச் செய்த யவனப் பொம்மைபோல், அடிக்கொரு அசைவும், திமிரும் காட்டி, வரிந்து கட்டிய நரம்பு முடிச்சுக்களிடையே திருகி விறைப்பேறும் தசைக்கூட்டம் அவனுடைய மேனி வளத்தை எடுத்துக் காட்டும். கத்தியைக் கொண்டு குத்தினாலும் உள்ளே இறங்காது என்னும்படி இருக்கும், அவனது தேக வலிமை. அவன் வாயிலிருந்து எப்போதும் சாராய நாற்றம் அடித்துக் கொண்டிருக்கும். ரத்தத்திலே தோய்ந்தது போன்ற சாயவேட்டியை தார் பாய்ச்சிக் கட்டியிருப்பான். நெற்றியில் வெட்டப்போகும் கிடாவுக்கு வைத்த அரக்கு சீலைப் போல், கோயில் குங்குமம் தீயாய்த் தெரியும்.

கட்டாரித் தேவன் சுடலை மாடசாமி கொண்டாடி. அவனுடைய குடும்பத்தில் தலைமுறை தலைமுறையாக இருந்துவரும் வழக்கம் அது. அதனால் தான் எந்த ராத்திரி யானாலும் சுடலையைத் தரிசிக்காமல் கட்டாரி வீடு திரும்பு வதில்லை. மேலும், அவனுடைய நில புலங்களும் அந்தப் பத்திலேயே இருந்ததால், அந்தப் பிராந்தியத்திலேதான் சுற்றிக் கொண்டிருப்பான். கோயில் குளத்தான் சாராயக் கடையும் சமீபத்திலேயே இருந்தது அவனுக்குச் சௌகரிய மாயிருந்தது. மேலும் கட்டாரித் தேவனின் தினசரிப் பொழுது ஆற்றங்கரையிலேதான் கழியும். வயலில் உழைத் தலுத்து வரும்போது, பேச்சுத் துணைக்கு ஒருவரும் கிடைக் காவிட்டால், மாந்தோப்பைக் காவல் புரியும் இசக்கியிடம் வந்து பேசிக் கொண்டிருப்பான்.

இசக்கி நாட்டாண்மைக்காரத் தேவரின் மனைவி. நல்ல மஞ்சள் கடம்புக் கட்டையில் செதுக்கி நிறுத்திய

சித்திரப் பாவை போலிருப்பாள். தலையை அள்ளிச் செருகி கோழிவால் கொண்டை போட்டிருப்பாள். நெற்றியின் நடுவே ஓடி, உச்சி வகிடோடுமுடியும் பச்சை குத்திய நாமம் அவள் கண்களின் பாய்ச்சலை அளக்க உதவும் கேந்திரமாகத் துலங்கும். மழமழப்பான அவளது அவயங்கள் யார் மனசையும் தடுமாடச் செய்யும். மாம்பழக் காவலுக்கு அவள்தான் தோட்டத்திலிருப்பாள். கட்டாரித் தேவனுக்கு அவளோடு பேசுவதில் தனி இன்பம். மஞ்சள் பூசிய முகத்தில் துலாம்பரமாய் விளங்கும் வெற்றிலைக் காவி உதடுகளில் புன்னகை பூக்க, யாரிடமும் சிரித்துச் சிரித்துப் பேசுவாள் இசக்கி.

இசக்கியிடம் பழகிய நாளிலிருந்தே கட்டாரித் தேவனின் மனம் அவள் உடம்பில் லயித்தது. என்றைக்காவது ஒரு நாள் இசக்கியை அனுபவித்துத் தானுக வேண்டும் என்ற பேயாசை அவனை உலுப்பி வந்தது. கட்டாரி எதற்கும் துணிந்தவன். எனினும் மானுபிமானத்துக்குப் பயந்து நடப்பவன். ஆதலால், அவளிடம் எப்போதும் ஒரு முழம் தள்ளியே பழகி வந்தான். கலியாணமானவன்தான். எனினும், மனசில் எழும் குரூர ஆசையை அவனுல் கொல்ல முடியவில்லை. ஆசையை மறப்பதற்காக, சாராயத்தை அதிகம் குடித்தான். சாராயக் கடையை விட்டு வெளியேறியவுடன், ''இவளா மாந்தோப்புக்குக் காவல் இருக்கது? இவளே சாதி மாம்பளம் மாதிரி இருக்காளே. உடம்பிலே அரைச் சேரு கறி அறுத்துத் திங்கலாம் போலிருக்கு'' என்று முனகிக் கொள்வான். மனசிலும் உடம்பிலும் அத்தனை பசி. உடம்பு குறு குறுத்தால் இன்றும் ஒரு டிராம் அவன் நெஞ்சுக் குழாயை எரித்துச் செல்லும்.

அன்றும் அவன் கோயிலுக்குச் செல்லும்முன் நேராகக் கோயில்குளத்தான் கடைக்குத் தான் சென்றிருந்தான்.

3

முன்னே இருந்த கிளாஸ் சாராயத்தை வாயெடுக்காமல் குடித்துக் காலி செய்துவிட்டு, குச்சிக் கறித்துண்டு ஒன்றை எடுத்து, கடைவாயிலிட்டுச் சுவைத்தான் கட்டாரி.

''என்ன அண்ணுச்சி, நேரத்தோடேயே வந்துட்டி யளா? வார வளியிலே வீட்டுக்குப் போயிட்டு வந்தேன்'' என்று விசாரித்துக்கொண்டே, வீராசாமிப் படையாச்சி உள்ளே நுழைந்தான்.

ஏற்கெனவே அளவு தாண்டி, 'கிறிச்சி' கிளம்பி தலை சுற்றியாடும் கட்டாரி, வீராசாமி வந்ததை உணர்ந்து கொண்டான். மரத்துப் போன உதடுகளைப் புறங்கையால் உரசித் துடைத்துக் கொண்டு, ''யாரது, வீராசாமியா? வாடா. வந்து உட்காரு'' என்று அருமையாய் அழைத் தான். பிறகு கடைக்கார நாடாரைப் பார்த்து, ''நாடாரே, இன்னம் ரெண்டு கொண்டாரும். முட்டை இருக்குதா? இருந்தா அதுவும்........... ஒண்ணுமில்லியா? சர்த்தான், ஏதாவது கொண்டாரும்'' என்று உத்திரவிட்டான்.

நாடார் கொண்டு வைத்த சாராயத்தை இருவரும் மடக்கு மடக்கென்று குடித்தார்கள். குடித்து விட்டு, சுவாசத்தை அடைக்கும் கசப்புக் கமறலைத் துடைக்க, உடனே இரண்டு கறித் துண்டுகளை எடுத்துக் கடித்துக் கொண்டார்கள்.

குடித்துக் குடித்து இருவருக்கும் போதை கிளம்பி கண் வெள்ளை சிவந்தது. உடல் முழுவதும் வெறி பரவி, மரத்துப் போகும் உணர்ச்சியினால் ஏற்படும் சிலுசிலுப்பும், மயக்க நிலையில் சொக்கி வரும் இன்பமுமாக அவர்களுக்கு இருந்தது.

இனிமேலும் மேலே சென்றால் வண்டி குடை சாய்ந்து விடும் என்று உணர்ந்த கட்டாரித் தேவன் எழுந்து நடக்க ஆரம்பித்தான். வீராசாமியும் கட்டாரியின் கைத் தாங்கலில் எழுந்து கடையை விட்டு வெளியே வந்தான்.

இவர்கள் கடையை விட்டு வெளியே வருவதற்கும், பனங் காட்டு ஒற்றையடித்தடத்தின் மேலாக இசக்கி மாம்பழக் கூடையைச் சுமந்து கொண்டு ஒய்யாரமாக நடை போட்டுச் செல்வதற்கும் சரியாயிருந்தது.

''அண்ணேன், அன்ன பாருங்க'' என்று இசக்கி வந்த திக்கைக் காட்டினன் வீராசாமி.

கனத்துப் போய் விழிகளோடு பசைபோல் ஒட்டும் இமைகளைத் திறக்க முயன்று கொண்டே, ''சிறுக்கி நடையைப் பாரேன். அப்படியே அவளைக் கடிச்சி முழுங்கிறலாம் போலிருக்கு'' என்று வாய்விட்டுக் கூறிவிட்டுப் பற்களைநெரித்தான் கட்டாரி.

''ஆமாண்ணேன். கிளியாட்டந்தான் இருக்கா. எங்கே போவா? போயிட்டு, கோயிலுக்கு வராமலாப் போவா?'' என்று கூறிவிட்டு, அவிழ்ந்து விழுந்த தலைமயிரை அள்ளி முடிக்க விரல்கள் வளையாததால் அதைப் பிடரியில் ஒதுக்கினன்.

''இந்தக் கட்டாரித் தேவன்கிட்டெ அவ வராமப் போறதாவது? பாத்துக்கிடுதேன்'' என்று மீசையில் கை போட்டுக் கொண்டு கோயிலைப் பார்க்க நடந்தான் கட்டாரி.

## 4

அன்றிரவு சுடலைமாடனுக்கு பிரமாதமான அலங்காரம். துருவகற்றி, பளபளவென்று மின்னும் இரும்பு வாளைக் கையில் ஏந்தி நின்றது சிலை. முகத்தில் வழிந்திருந்த எண்ணெய் சுடலைமாடனின் கருமையையும் கோர ரூபத்தையும் கூட்டிக் காட்டிற்று. சிலை முகத்தில் பட்டிருந்த சுண்ணும்புக் கீறல் அதன் விகாரத்தையும் குரூரத்தையும் கோடிட்டுக் காட்டுவது போலிருந்தது.

நடுச்சாம வேளை நெருங்கிக் கொண்டிருந்தது. கோயிலின் முன் பல திக்குகளிலும் நாட்டியிருந்த தீவட்டிப்

பந்தங்கள் பசி நாக்குகளைச் சுழற்றிச் சுழற்றி எரிந்து கொண்டிருந்தன. பம்பையும் பறைமேளமும் கணகண வென இரைந்து குமுறும் ஒலி அக்கரை நத்தத்து வயல் வெளியில் மோதித் திரும்பி, மீண்டும் கருப்பன்துறை பனை விளைக்குள்ளேயே எதிரொலித்துக் கொண்டிருந்தது.

சாராயக் கடையிலிருந்து வந்த கட்டாரித் தேவன் சுடலையின் கோயில் முன் சென்று உட்கார்ந்தான்

சுடலையின் முன் சாராயப் புட்டியும், காரப் புகை யிலைச் சுருட்டும் இருந்தன. பொங்கிப் பொரித்துப் படைத்த சோறும் கறியும் ஆவி வர, புலால்மணம் வீசிக் கொண்டிருந்தது. பலி கொடுத்த ஆடு கோழிகளின் ரத்தம் கோயிலின் முன்னுள்ள மண்ணில் உறைந்து பொருக்காடிப் போயிருந்தது.

கட்டாரித்தேவன் அசையாமல் உட்கார்ந்திருந்தான். கண்களின் கிறக்கம் சாராய வேகத்தைக் காட்டியது. மட்டச் சாம்பிராணிப் புகையும், ஊதுவத்தி மணமும், படைப்புச் சோற்றிலிருந்து எழும் புலாலின் நாற்றமும் அவனை மயங்கச் செய்துவந்தன.

பம்பையின் டங்காரமும், உறுமி மேளத்தின் குமைந்து வரும் சிலுசிலுப்பும், தப்பறையின் ஓலமும் அவன் செவி களைத் தாக்கி, காதுச் சவ்வுகளை மரத்து அடைத்துப் போய் இரையச் செய்தன.

தலையாட்டம் கொடுத்துக் கொண்டே கட்டாரித் தேவன் கண்களை ஒரு சுழற்று சுழற்றினான். தூரத்தில் இசக்கி பச்சை நிறக் கண்டாங்கிச் சேலையைச் சரிபண்ணிய வாறே சிரித்துக்கொண்டு நின்றாள். இசக்கியின் வனப்பு கட்டாரியின் கண்களை ஈர்த்தன. கட்டாரிக்கு தலைக் கிறக்கம் அதிகமாயிற்று. சுடலையையும் இசக்கியையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டேயிருந்தான்,

திடீரென ஒரே ஆகாகாரம் செய்து கொண்டே துள்ளி யெழுந்தான் கட்டாரி. அவன் உடல் கிடுகிடென்று

ஆடியது. கையெடுத்துச் சுடலையைக் கும்பிட்டான் அவன். உயர்ந்து உயர்ந்து செல்லும் கட்டை நாதசுரத்தின் விறு விறுப்பும், மேளதாளங்களின் ஸ்தாயியும் அவனை உலுப்பின; உணர்வை மறக்கச் செய்தன.

பூசை முடித்துவிட்டுத் திரும்பிய பூசாரி எரிந்து கொண்டிருந்த கற்பூரத் தட்டை கட்டாரியிடம் நீட்டி ஞன். எரிந்துகொண்டிருந்த கர்ப்பூரத்தை உள்ளங்கையில் வாங்கி வாயில் போட்டான். உடனே பூமி அதிரும்படி திங்கு திங்கென்று குதித்தாட ஆரம்பித்து விட்டான் கட்டாரி!

சுடலை குடி புகுந்துவிட்டான் என்று ஜனங்களெல் லாம் கட்டாரியைக் கையெடுத்துக் கும்பிட்டார்கள்.

கட்டாரி ஆடிஞன், சத்தமிட்டான், துள்ளிஞன், பாய்ந்தான்! ஆடிக்கொண்டே கட்டாரி நடந்தான். நட்டு வைத்திருந்த பந்தம் ஒன்றை எடுத்துக்கொண்டு, கட்டாரி யின் முன்ஞல் பூசாரி பின் காட்டி நடந்தான்.

சுடுகாட்டை நோக்கி ஆடிக்கொண்டே நடந்தான் கட்டாரி. கொள்ளிவாய்ப் பிசாசு போல, பூசாரி அந்த ஒற்றைத் தீவட்டியை ஏந்திச் சென்ருன். தீவட்டியின் ஒளி எல்லைக்குள்ளாக, படமெடுத்தாடும் கருநாகத்தைப் போல் இருள் கவிந்து நிற்க, கட்டாரி பூதாகாரமாய் நடந்தான்.

தீவட்டிப் பந்தத்தின் அசைந்து அசைந்தாடும் மங்கிய ஒளியிலே, சுடுகாட்டு ஆலமரத்தின் தரையோடிப் பாய்ந்து நின்ற விழுதுக் கூட்டங்கள் ஒளியும் நிழலும் கொடுக்கும் பைசாச ரூபத்தோடு, தரை கீறிக் கிளம்பிய கூளிக்கணங் கள் களியாட்டம் ஆடுவதைப்போல் தோன்றின. இருள் சூழ்ந்த அந்தப் பிரதேசத்தில், மங்கிய ஒளி கொண்ட புகைமூட்டம் இருளையும் விடப் பயங்கரமா யிருந்தது. கோயிலில் ஒலிக்கும் வாத்திய ஒலி மங்கி உள்வாங்கி ஒலித்தது. பக்கத்து மருத மரத்திலிருந்து சரசர வென்று

இறங்கி, விகாரமாய் அழுதுகொண்டே குறுக்கே தாவியது ஒரு மரநாய்.

சாமி குடிகொண்ட கட்டாரி நடந்தான். பூசாரியும் கட்டாரியும் சுடுகாட்டுக்குள் நுழைந்தனர்.

நாலைந்து பிணங்கள் கங்குதெறித்து விழ, எரிந்து கொண்டிருந்தன. மங்கிய செந்நெருப்புத் தழல் காட்டி, எரிந்து கொண்டிருந்த பிணத்தைக் கண்டு ஓடியது, கட்டாரியிடம் குடி கொண்ட சுடலை!

ஈரம் காய்ந்து பொருக்காடிப் போன சிதை மூட்டத்தை முஷ்டியால் ஓங்கி உடைத்தது சுடலை. ஓடாய்ப்போன மூட்டம் உடைந்து பிலவாய் போல் திறந்து விழுந்தது. சிதையினுள் சுட்ட கத்தரிக்காயைப் போல், பிணம் கருமை யெய்தி கருகிக் கொண்டிருந்தது: அடியிலே இளகி வடியும் கொழுப்பின் துர்நாற்றம் மெல் லிய புகைக் கொடியாக இழைந்து கிளம்பிக் கொண் டிருந்தது.

ஆடிக்கொண்டே நின்ற சுடலை, உடைபட்ட பாகத் துக்கு நேராயிருந்த பிணத்தின் வயிற்றுக்குள் கூச்சலிட்டுக் கொண்டே இரண்டு கைகளையும் புலி நகம் போல் சொரு கியது!

பக்கத்து ஆலமரத்தில் இரண்டு ஆந்தைகள் ஒன்றுக் கொன்று அடித்துச் சத்தமிட்டுக் கொண்டு சிறகடித்துக் கீழே விழுந்தன. தூரத்தில் எங்கோ குழி பறிக்கும் நரி யின் ஊளை சுடுகாட்டில் எதிரொலித்தது!

சொருகிய விரல்களால் பிணத்தைக் குடைந்து குடைந்து, உள்ளேயுள்ள குடலை உருவி இழுத்து, வாயில் வைத்துத் திணித்தது சுடலை! குடற்கொடி முழுவதும் வாயினுள் செல்லாமல் மார்பிலும் கழுத்திலும் அடித்துப் போட்ட பாம்பைப்போல் சுற்றி விழுந்தன. ஆவேசம் தீராமல் உள்ளேயிருந்து பிருண்டி எடுத்த மாமிசத்தை, அரைகுறையாய் வெந்து பச்சை நெடி வீசும் பிண மாமிசத்தை. வாயில் வைத்துத் திணித்தது. முகத்திலும்

மார்பிலும் பலாச் சடை போல் ஒட்டியிருந்த சவ்வையும், கொழுப்புத் திரைகளையும் பூசிக்கொண்டது!

முகத்தில் ஒட்டியிருந்த மாமிசப் பசைத் திரைகள் பயங்கரத்தைக் கூட்டிக் காட்டியது. ஆவேசமும் ஆங்கார மும் கொழுந்து விட்டெரியும் முகத்தில் ரத்தப் பசி தலை தூக்கி நின்றது.

பிணத்தைப் பட்சித்த பின் வாரியடித்துப் பூசிய புலா லும் கொழுப்பும் ஒட்டிக் கிடக்க, பூசாரி காட்டிய வழி யில் நடந்தது சுடலை!

பசிப்புலி போல் பாய்ந்து வந்த கட்டாரியைக் கண்ட வுடன் ஜனங்கள் கையெடுத்துக் கும்பிட்டனர். நிணமும் சதையும் வாய்க் கடையில் பிதுங்கி வெளிவர, கோயிலின் முன் நின்று ஆடினான் கட்டாரி.

வில்லுக்கார வீராசாமி வாய் உரக்கப் பாடினான்:

தோளிலே சில பிணத்தைத்
துங்க மாலை போட்டுக் கொண்டான்
கையதிலே சில பிணத்தைக்
கட்டியாக எடுத்துக் கொண்டு
வாயதிலே ஊன் வடிய
வாரானே சுடலைக் கண்ணு!

சப்த அலைகளை அடக்கி அடக்கி விடும் வில்லுக் குடத் தின் குமைவும், வில்லில் கட்டிய மணியின் கலகலப்பும், நாணின் டங்காரமும் வீராசாமியின் பாட்டுக்கு வேகம் கொடுத்தன.

கட்டாரித் தேவன் ஆடிக்கொண்டே இருந்தான்.

வீராசாமி, பெண்கள் கூட்டத்தின் முன் வரிசையில் இசக்கி உட்கார்ந்திருப்பதைக் கண்டான். உடனே, கதை யில் வரும் காளியப் புலையன் மகள் இசக்கியை, இந்த

இசக்கியைப் பார்த்துக் கொண்டே, இவளை வருணித்துக் கொண்டே பாட ஆரம்பித்து விட்டான்:

ஏந்து நல்ல ஸ்தன மிரண்டாம்
இந்திராணி மார்பழகாம் இசக்கி!
ஆறு முழம் நூறு பணம்
அருவங் கோட்டுக் கண்டாங்கி இசக்கி!
சித்துடுக்குக் கழிந்தது போல்
சேலைக்கட்டும், இடையிறுக்கும் இசக்கி!
பின்னழகைக் கண்டவர்கள்
பிரமித்து நின்றிடுவார் இசக்கி!
முன்னழகைக் கண்டாலோ
மோகிப்பார் ஆயிரம் பேர்! இசக்கி!

பாட்டின் வருணனை அழகும் இசக்கியின் பெயரும் வேகமிறங்கி வரும் கட்டாரியின் காதுகளில் விழுந்தன. கட்டாரி திரும்பி இசக்கியைப் பார்த்தான்.

கட்டாரி இசக்கியின் பக்கம் திரும்புவதைக் கண்ட வீராசாமிக்கு உற்சாகமும் குறும்பும் வளர்ந்தன.

சுடலைமாடனுக்கும் இசக்கிக்கும் உள்ள தொடர்பை, இசக்கியைக் கன்னியழிப்பதாகச் சத்தியம் செய்யும் சுடலை-இசக்கி சம்வாதத்தை, கட்டாரியையும் இசக்கியையும் இணைத்துத் தன் சொந்தப் பாட்டில் பாட ஆரம்பித்து விட்டான். உடனே கட்டாரிக்கு அப்படியே அங்கிருந்து தாவிப் பாய்ந்து இசக்கியை அணையவேண்டும் என்றிருந்தது.

உள்ளுக்குள்ளேயே கிடந்து குமுறும் காமவெறி மனசைப் பிடித்து உலுப்பி வெறியூட்ட, ஒன்றும் புரியாமல் குதித்தாட ஆரம்பித்தான் கட்டாரி. பிறகு சுடலை மாடசாமியின் முன் படைத்திருந்த சாராயபுட்டியை எடுத்து, கடகடவென்று குடித்தான். படைப்புச் சோற்

றின் முன் மண்டியிட்டு அமர்ந்தான். பற்றி எரியும் வயிற்றின் காந்தலும், உடலிலுள்ள அனற்கொதிப்பும் அவனை அலைக்கழிக்க, படைச் சோற்றை அள்ளி அள்ளித் தின்றான். எலும்பும் கறியும் தெரியாமல் நறநறவென்று கடித்தான். முருந்து எலும்புகள் முறுக்கு மாதிரி கடைவாயில் நொறுங்கின. எலும்புக் குழலுக்குள் இளகி நிற்கும் குறுத்துக் கோழை, வாய்க்கடை யோரம் வழிந்தோடிற்று. ஒரே பசி! ரத்தப் பசி!

தின்று குடித்துச் சலித்தவுடன் முன்னிருந்த சுருட்டை எடுத்து தீப்பந்தத்தில் பற்றவைத்துக் கொண்டு ஆடினான். புதிதாக வயிற்றினுள் சென்ற சாராயம் போதை எழுப்ப, தளரும் கால்களை அதிகம் ஊன்றாமல் துள்ளித் துள்ளியாடினான் கட்டாரி.

ஜனங்கள் அவனைக் கையெடுத்து வணங்கினர். இசக்கி மட்டும் கும்பிடாமல் கையால் நாடியைத் தாங்கியவாறே அவனை வியப்புடன் பார்த்துச் சிரித்துக்கொண்டிருந்தாள்.

வீராசாமியின் பாட்டும் சுற்றிச் சுற்றி இசக்கியிடமே வந்து நின்றது.

போதை உச்சிக்கேறிய பின் கட்டாரி தன்னிலை தவறி ஆடினான்; தடுமாடினான். திடீரென்று "கொண்டா இசக்கியை!" என்று கத்த ஆரம்பித்தான். ஆனால் நாக்கு சொல்லுக்கு வளையாமல் உள்ளிழுத்துச் சுருண்டது. கால்கள் ஒன்றோடொன்று பின்னி முடைந்தன. கண்கள் மேலேறிச் சொருகின. அப்படியே தொப்பென்று சாய்ந்தான்! ஆட்டபாட்டம் ஒய்ந்து சவமாய்க் கிடந்தான்!

பூசாரி மீண்டும் சுடலைக்குப் பூசை பண்ணினான். 'சாமி மலையேறி விட்டது!' என்றனர் ஜனங்கள்.

பூசாரி ஏந்திய கர்ப்பூர ஒளியில் சுடலையின் உதட்டிலுள்ள வெள்ளைச் சுண்ணும்புக் கீறலில் ஒரு சொட்டு பச்சை ரத்தம் இருந்தது!

'ஊட்டை சாமி ஏற்றுக் கொண்டது' என்ற திருப்தி யால் கற்பூரத் தட்டை உயர்த்தினன் பூசாரி.

ஜனங்கள் கையெடுத்துக் கும்பிட்டனர்!

## 5

கட்டாரித் தேவன் வாயிலிருந்து கொழுப்புக் கூழும், கோழையும், நுரையும் வடிந்து கொண்டிருந்தன. கருங் கல் போன்ற அவனுடைய தசைக்கோளங்கள் தளர்ந்து தொளதொளத்துக் கிடந்தன. உணர்வற்றுக் கிடந்த கட்டாரித்தேவன் வெகு நேரம்வரை எழுந்திருக்காததி லிருந்து, ஜனங்கள் கட்டாரியின் போதையை உணர்ந்து கொண்டார்கள்.

அதன்பின் கட்டாரித் தேவனை வண்டியில் போட்டு போதை தெளியுமுன் வீடு கொண்டுவந்து சேர்த்தான் வீராச்சாமி.

சேர்த்துவிட்டு, ''ஒன்றுமில்லை. கிறக்கம். இன்னைக்கி அண்ணச்சி பெரிய ஆட்டமில்லா ஆடிட்டாக'' என்று மாடத்தியிடம் சொல்லிவிட்டுப் போனுன்

படுக்கையில் கிடந்த கட்டாரித் தேவனை மங்கிய விளக்கொளியில் பார்க்கச் சவம் போலவே யிருந்தது,

மாடத்தி நெற்றியில் கை வைத்துப் பார்த்தாள். நெற்றி கொதித்தது. உடம்பிலிருந்து கருகிய மாமிச நாற்றமும், சாராய வீச்சமும் கலந்தடித்தன.

போதை தெளிந்து புரண்டு கொடுத்த கட்டாரி ''சிறுக்கி, என்னமா யிருக்கா? அப்படியே கடிச்சி முழுங் கிறலாம் போலிருக்கு'' என்று முணுமுணுத்தான்.

''என்ன புலம்புதிய? உங்களைத்தானே. நானிருக்கது தெரியலெ'' என்று மெல்லக் கேட்டாள் மாடத்தி. தலை மயிரையும் நெற்றியையும் தடவிக் கொடுத்தாள்.

ஸ்பரிச உணர்ச்சி பெற்று விழித்த கட்டாரி அந்த மங்கிய இருளின் ஒளி மூட்டத்தில் மாடத்தியைப் பார்த்தான்.

''வந்திட்டியா? நீ வருவேன்னு எனக்குத் தெரியுமே'' என்று சொல்லிக்கொண்டே மாடத்தியை இழுத்து அணைத்தான்.

''விடுங்கன்னு!'' என்று திமிறினுள் அவள்.

கட்டாரி விடவில்லை. அவளைக் கட்டிப் பிடித்துக் கட்டிலில் உருட்டிப் புரண்டான்.

கட்டாரியின் மேனி முழுவதும் பிணத்தின் நிண நாற்றம் அடித்தது. பிண நாற்றம் மாடத்தியின் புலனைத் தாக்கியது கட்டாரி தன் முகத்தை மாடத்தி முகத்தின் பக்கம் நெருக்கியபோது, மாடத்தியின் உடம்பு குளிர்ந்து புல்லரித்தது. தாங்கமுடியாத நாற்றத்தின் கமறலால் குமட்டல் எடுந்து ஓங்கரித்தாள். எனினும் வெறும் ஓங்கரிப்பு! தொண்டைக் குழிதான் வற்றிப் புண்ணுயிற்று!

## 6

மாடத்தியின் இந்தக் கர்ப்ப மாசங்கள் எல்லாம் மிகவும் கஷ்டத்துடன் கழிந்தன. பத்து மாசமும் ஒரே ஓங்கரிப்பும், குமட்டலும், வாந்தியெடுப்புந்தான். எந்தப் பொருளும் வாய்க்குக் கசந்தது; நாற்றமடித்தது! அன்றைய இரவின் அருவருப்பு அத்தனை வைரம் பாய்ந்திருந்தது!

பத்தாவது மாசம் ஓரிரவில் கடைச் சாமத்தில் மாடத்தியம்மா பிரசவித்தாள். முதன் முதலாக பிள்ளையைப் பார்ப்பதற்காக, பக்கத்தில் கழுவிப் போட்டிருந்த பிள்ளையின் பக்கம் முகத்தை நெருக்கினுள் மாடத்தி. உடனே பயங்கரமான ஓங்கரிப்பு வந்து அவள் வயிறு நொந்தது.

ஒரே நாற்றம்! பெற்றெடுத்த பிள்ளையின் உடம்பி லிருந்து பிண நாற்றத்தின் தாங்கமுடியாத நெடி அடித்தது!

கட்டாரியின் மூத்த மகள் மாகாளி ஓடோடியும் வந்து தெருத் திண்ணையில் முட்டைக் கட்டியிருந்த கட்டாரியிடம் ''அய்யோவ், தம்பி புறந்திருக்கான்!'' என்று கூச்சலிட் டாள்.

''எல்லாம் என் அப்பன் கிருபை. சுடலேன்னு பேரு வைக்கணும்'' என்று தனக்குள் முனகினன் கட்டாரி.

எதிர் வீட்டுத் தாழ்வாரத்தில் படுத்திருந்த வீராசாமி விடிவெள்ளி முளைத்துவிட்டதை உணர்ந்து, துண்டை உதறித் தோளில் போட்டுக்கொண்டு,

வாருமையா சிவனரே, வார்த்தை
யொன்று சொல்லக் கேளும்
பிள்ளை வரம் கேட்டதுக்கு
பிணந்தின்னியைத் தந்தீரோ
என்று சொல்லும் வேளையிலே
ஏது சொல்வார் சிவனரும்...

என்று பாடிக்கொண்டே வயல் வெளிக்குச் செல்லும் பாதையில் நடக்க ஆரம்பித்தான்.

1946

# அசலும் நகலும்

## 1

திருவாளர் பாண்டிப் பெருமாள் பிள்ளை தமது பௌத்திரன் செந்தில் விநாயகத்துக்கு காலாகாலத்தில் காலில் ஒரு கட்டுக் கட்டிப் போட்டுவிட்டு, மண்டையைப் போட வேண்டும் என்று எதிர்பார்த்தார். மேலும் காலஞ் சென்ற தமது புதல்வனும், செந்தில் நாயகத்தின் தந்தையுமான குருபரம் பிள்ளையைப்போல் தம் பேரப் பிள்ளையும் செய்ய வேண்டிய கிரியாதிகளை, உற்ற பொழுதில் செய்யாத காரணத்தால், சகவாச தோஷத்துக்காளாகி, கிருத்திருமத் திரிச்சலில் கிளம்பிவிடக் கூடாதே என்ற பயமும் அவருடைய ஆசையை, அவசரக் கடமையாகக் கருதச் செய்தது.

செந்தில் விநாயகம் சென்னையில் சர்க்கார் உத்தியோகத்தில் இருக்கிறான் என்ற பெருமை, டர்பனும் டையும் கட்டி வாழ்ந்த அந்தப் பத்தொன்பதாம் நூற்றாண்டு ராஜ விசுவாசப் பிறவியான பிள்ளையவர்களின் மனசில் புகுந்து கொண்டதில் அதிசயமில்லை. ஆனால் செந்திலோ கெஜட் பதிவில்லாத சாதாரண குமாஸ்தாதான். பஞ்சப் படியையும் சேர்த்து எழுபது ரூபாய் சம்பளம் வாங்கி வந்தான். இன்றைய யுவ பாரத லட்சியத்தின் காரணமாக, அவன் சம்பளத்துக்குப் புறம்பாக, கிம்பளம் எதுவும் வாங்கத் துணியவில்லை என்பதைவிட, அவன் மனசில் கிடந்த கோழைத்தனமும், நியாய அநியாயத்துக்குப் பயந்த சுபாவமும்தான் அவனை அந்த ஸ்தானத்தில் அரிச்சந்திரனாக்கியது என்று சொல்லவேண்டும். சுய சம்பாத்யம், வாரத்துக்கு இருமுறை முக க்ஷவரம் செய்து கொள்ள வேண்டிய

வயசு—இரண்டும் வந்து சேர்ந்தும், செந்திலுக்கும் தானும் நாலுபேரைப் போல், கட்டிய மனைவியோடு கடற்கரைக்குச் செல்லவேண்டும் என்ற ஆசையே உதிக்காமலிருந்தது.

இப்படி இல்லறத்தில் நாட்டமற்றுப் போவதற்குக் காரணம், பசையும் பிடிப்புமற்று, சென்னை நகரத்தில் மனிதரோடு மனிதராய்த் திரிந்து, தனக்கென்று ஒரு உலகை ஸ்தாபித்து வாழும் கோயில் மாட்டைப் போன்ற வாழ்க்கை மட்டுமல்ல. இரண்டாவது தேதி விடிவதற்குள் வாங்கிய சம்பளத்தை கைமாத்து, கடன்காரன், கடைக் காரன் என்று கொடுத்துவிட்டு மாசம் முப்பது நாளும் ரெயில்வே சீசன் டிக்கட்டையும், ஆபீஸ் காண்டீனையும் நம்பி வாழும் அந்த என்.ஜி.ஒ வாழ்க்கையில், மனித னுக்கு கல்யாண நினைப்பு வருவது அபூர்வந்தான். உள்ளத்தை எதற்கும் ஆகவொட்டாமல், நபும்சகமாயடிப் பதன் மூலம், உடலையும் சக்கையாக்கும் அந்த நைட்டிக வாழ்வு மட்டுமே செந்திலை அவன் கல்யாணத்தை ஒத்திப் போடும்படி தூண்டி வந்தது என்று சொல்லமுடியாது.

இதற்கெல்லாம் மேலாக, அவன் மனசுக்குள் மெல்ல வும் மாட்டாமல், விழுங்கவும் ஒட்டாமல், நஞ்சுண்டனின் கண்டக்கறை போலக் கிடந்து உறுத்தும் அந்த எண்ணத் தின் நமைச்சலை அவனால் தாங்க முடியவில்லை. தவற்றின் காரணமாக, கர்ப்பவதியாகிவிட்ட கன்னிப்பெண் உள்ளுக் குள்ளேயே மருகிக் கண்ணீர் வடித்து, திகைப்பது போலத் தான் செந்திலும் கஷ்டப் பட்டுக் கொண்டிருந்தான். அவளுக்காவது பத்து மாசம்; இவனுக்கோ? அது இன் னும் தீராப்புதிர்.

இந்த வேளையில்தான் பாண்டிப் பெருமாள் பிள்ளை தமது பேரனின் தாமரையிலைத் தண்ணீர் போன்ற வாழ் வின் சூட்சம உண்மையை உணராமல், செந்தில் வெறுங் கோவணாண்டியாகப் போய்விடக் கூடாதே என்ற ஆதங்கத் தின் பேரில், மேல வீட்டு மைத்துனர் சுப்பிரமணியப்

பிள்ளையவர்கள் குமாரத்தி கோமதியம்மாளை செந்திலுக்கு நிச்சயம் பண்ணி முடித்தார். பிறகு செந்திலுக்கும் விஷயத்தைத் தெரிவித்து சுந்தி கொடுத்தார். எந்த வித மான அதிர்ச்சிக்கும் ஒரேவித உணர்ச்சி காட்டும் அவனது யந்திரப் புத்தி செந்திலை வசிய மந்திரம் போல் திருநெல் வேலிக்கு இழுத்துச் சென்றது.

அருணோதயத்தில் மிதுன லக்கினத்தில் கல்யாணம்.

செல்வச் சிரஞ்சீவி செந்தில் நாயகத்துக்கும், சௌபாக் கியவதி கோமதிக்கும் மாப்பிள்ளைச் சடங்கும் பெண் சடங்கும் நடந்தேறின. புரோகிதர் இருவருடைய சுண்டு விரல்களையும் பின்னிப் பிணைத்து, பட்டுத் துணியைச் சுற்ற ஆரம்பித்தார்.

செந்தில் இரு கரங்களையும் கவனித்தான்.

"நல்லா புடிச்சிக்கடி. விட்டுடாதே" என்று மதினிக் காரி கோமதிக்கு ஆணையிட்டாள். அந்தப் பிணைப்பின் பிடி இழந்தால், வாழ்க்கையிலும் பிடியும் பிணைப்பும் அற்றுப் போகும் என்று சாஸ்திரம் சொல்லுகிறதாம்!

அந்த இரு கரங்கள்: பட்டுப்போல் மிருதுத் தன்மை யும் பசையும் ஏற்று, தங்கத்தின் தகதகப்பை மெரு கேற்றிக் குளிர்வித்தது போன்ற கோமதியின் கரம். பிஞ்சு விரல்கள்; பிஞ்சுச் சதை.

சாம்பல் அகலாத தடியங்காயைப் போல் நிறம் பெற்று, முருங்கைக்காயின் முரமுரப்பும் விறைப்பும் கொண்டு, பசையற்று வெள்ளை பூத்த கரம்; செந்திலின் கரம்.

இந்த இரு கரங்களும் சேர்வதா?

அவன் திகைத்தான்; அவர்கள் அக்னியை வலம் வந் தார்கள். முதல் சுற்றிலேயே அவர்களது விரல்கள் பிடிப்பை அறுத்துக்கொண்டன.

அவர்கள் வலம் வந்து முடித்தனர்.

கல்யாணம் முடிந்தது.

செந்தில் மஞ்சள் காப்பு அறுத்த அன்றே சென்னைக்குப் புறப்பட்டான். சாந்தி முகூர்த்தம்கூட நடைபெறவில்லை. திரும்பும்போது, அவனுக்குத் தான் ஒரு சம்சாரியாகி விட்டோம் என்ற உணர்ச்சி அழுத்தமாகவே பதியவில்லை. அதையும் மிஞ்சி அவனுடைய உள்ளத்தின் அந்த நமைச்சல் பயப்பிராந்திதான் தலைதூக்கி நின்றது.

## 2

செந்திலின் தந்தையான குருபரம் பிள்ளைக்கு வீட்டில் தங்க விக்ரகம் போல் மனைவியிருந்த போதிலும், தூரத்துப் பச்சையிலேதான் மனம் ஓடியது. பணமும் பதவிசும் அவருடைய ஆசைக்குப் பாதை வகுத்துக்கொடுத்தன. அதனால் ஆடாத கிரீடை இல்லை; வாங்காத நோயில்லை. அந்திம காலத்தில், அவர் ஒட்டுத் திண்ணையில் அழுகிய விரல்களோடும், அருவருப்போடுந்தான் கிடந்து உயிர் நீத்தார். தந்தை இறந்ததெல்லாம் செந்திலுக்கு ஏதோ நினைவு தெளியாத சொப்பனம் மாதிரிதான். எனினும், ஊர்க்காரர்கள் செந்திலை ‘குட்டம் போத்தி’யின் மகன் என்று சகஜமாகவே கூப்பிட்டார்கள். அந்த வார்த்தையின் அர்த்தம் செந்திலுக்கு அந்த வயசில் புரியவில்லையென்றாலும், தனது தந்தை தனக்கு ஒரு பொல்லாத் தீங்கிழைத்துச் சென்றதாகவே எண்ணினான்.

சிறு பையனாயிருக்கும்போது அவன் பெரிய கோயில் வாசலில் வெந்து அழுகின புன்மேனியோடு பிச்சை கேட்கும் குஷ்டரோகிகளைப் பார்த்திருக்கிறான். அந்தக் குஷ்டரோகிகளைப் பார்த்தபோது சித்தார்த்தனைப் போல் துன்பத்தின் சாகைகளின் மூலாதாரத்தைக் காணவேண்

டும் என்ற லட்சிய எண்ணம் அவனுக்கு ஏற்படவில்லை. அதற்குப் பதிலாக, அந்த நோயால் இறந்ததாக ஊரார் சொல்லும் தன் தந்தையின் உருவமும், தனக்கு அந் நோய் தொத்திக்கொண்டால் என்ற எண்ணமும்தான் அவன் மனசில் தோன்றும். அந்த எண்ணத்தின் கறை அவன் மனசின் அடித்தளத்தில் என்றோ பதிந்து உறைந்து போயிருந்தது.

ஒருநாள் அவனுடைய காதுச் சவ்வுகள் சிவந்து கனன்றிருப்பதைக் கண்ட அவனுடைய நண்பன் ஒருவன் திடீரெனக் கேட்டான்:

"என்னடா, காது எல்லாம் இப்பிடி குஷ்டம் பிடிப்பதுபோல் சிவந்திருக்கு?"

செந்தில் திகைத்துப் போய்க் கேட்டான்: "ஏண்டா, குஷ்டம் பிடிப்பதானா இப்படித்தான் சிவக்குமோ?"

செந்திலின் பாமரத் தன்மையை நன்றாகப் பயன்படுத்திக் கொண்ட அந்தப் படுகாலி நண்பன் "ஆமடா. முதலில் இப்படித்தான் சிவக்கும்!" என்று விதையை ஊன்றினான்.

செந்தில் அன்று முழுவதும் தன் காதை மேலும் சொறிந்து சிவப்பாக்கிக் கொண்டான். கண்ணாடியிலும் பார்த்தான். அவனுடைய சந்தேகம் வலுத்தது. அகராதியைப் புரட்டி, குஷ்டத்தின் தன்மைகளை அறிய முற்பட்டான்; 'குஷ்டம்: உடம்பைக் கொஞ்சங் கொஞ்சமாக அரித்துத் தின்னும் படுமோசமான வியாதி. கெட்ட நடத்தையாலும், பிதுர் வழியாலும் வரக்கூடும்' என்று போட்டிருந்தது.

செந்தில் அன்றிரவு முழுவதும் தூங்கவில்லை. படுக்கையிலேயே புரண்டு கொண்டிருந்தான். கடைச் சாமத்தில் லேசாகக் கண்ணயர்ந்தான். எனினும் அந்தப் பொழுதில் அவன் கண்ட அந்த விகாரக் கனவுகள்!—

இரும்பு வளையல்கள் அணிந்து, தலைவிரி கோலமாய், சுண்ணாம்புக் கீறலைப் போன்ற பல் வளைவுடன் ஒரு கரும் ராக்ஷஸப் பெண் சிரித்துக்கொண்டே வருகிறாள். தன் கையிலுள்ள கும்பத்திலிருந்து ஒளி வீசும் சந்தனக் குழம்பை வாரி வாரி அவன் மீது பூசுகிறாள். குழம்பு பட்ட இடங்களெல்லாம் பொத்துப் பொரிகின்றன. உடம்பெல்லாம் சந்தன மணம்! எனினும் தாங்க முடியவில்லை. ஒரே எரிச்சல்!

அவன் ஓடிப்போய் தண்ணீரில் விழுகிறான். உடம்பைக் கழுவுகிறான். சந்தனத்தோடு உடம்பே கரைந்தொழுகுகிறது. கை விரல்களைப் பாறையில் தேய்த்துத் தேய்த்து மணத்தைப் போக்க முனைகிறான். தண்ணீரில் நனைத்து. கைகளை உதறுகிறான். விரல்கள் உதிரும் மலரிதழைப் போல அறுந்து விழுகின்றன. கை விரல்கள் -கால் விரல்கள்—சதைப் பகுதி எல்லாம் கழன்றோடுகின்றன......

இது என்ன மாயம்? குஷ்டமா?—'

அவன் விழித்துப் பார்க்கிறான். அவன் மீது ஒரு மூஞ்சுறுக் குஞ்சு விழுந்தடித்து ஓடியது.

கைகள்—கால்கள்—உடம்பு எல்லாம் சரியாக இருந்தன. விடியற்காலைக் கனவு பலித்தாலும் பலிக்குமாமே!

அவன் மனசில் அந்தப் பயம் குடி கொண்டது.

## 3

சில நாட்கள் கழிந்தன.

செந்தில் சென்னையிலே வந்து வேலை ஒப்புக்கொண்டாய் விட்டது. அதைத் தொடர்ந்து அவனுக்குக் கலியாணமும் நடந்தேறி விட்டது.

எனினும், அவனுக்குத் தன் மனசிலுள்ள பயத்தைப் போக்க முடியவில்லை. தன் அப்பாவுக்குப் பெரு நோய்— அது தனக்கும் வரும் என்ற பயம். ஆகவேதான் ஊரில் சாந்தி முகூர்த்தத்தை நிச்சயம் பண்ணி, அவனுக்குக் கடிதம் எழுதும் போதெல்லாம் அவன் அதைக் காலங் கடத்தும்படியே பண்ணி வந்தான்.

அவனுடைய பயத்தின் பிரதிபலிப்பே போல், அவன் உடம்பு முழுதும் மலைப் பாம்பின் மேனியிலே தோன்றும் வட்டத் திட்டுக்கள் போல, சாம்பல் படரும் ஒரு வண்ணம்.

அவன் தன் உடம்பின் மாறுதலைக் கண்டு பயந்தான். நண்பர்களிடம் கேட்டான்.

சிலர் தேமல் என்றனர்.

சிலர் பூரிப்பு என்றனர்.

சிலர் இது ஏதோ சரும நோய்க்கு முன்னறிவிப்பு என்றும் சொல்லிச் சென்றனர்.

அவனுக்கு எதுவுமே ஓடவில்லை. வாய்விட்டுத் தனது நெஞ்சைக் குடையும் பயப் பிராந்தியை வெளியில் சொல்லி, தன்னைத் தெளிவுபடுத்தவும் முடியவில்லை. கடைசியில் ஒரு டாக்டரிடம் சென்றான்.

"ஸார், என் உடம்பைச் சோதனை செய்யவேண்டும்"

அவர் உடம்பு முழுவதும் சரியாகச் சோதனை செய்து பார்த்தார். கடைசியில் "உடம்புக்கு எதுவுமில்லை" என்றார்.

செந்தில் அவ்வளவு லகுவில் அவரை விட்டுவிடவில்லை.

"ஸார். எனக்கு பெருநோய் வருமா ஸார்?" என்று பயந்து பயந்து கேட்டான்.

"ஏன்?"

"வருமென்று என் மனசுக்குப் படுகிறது."

"உங்களுக்கு ஏதாவது மேக நோய் உண்டா?"

"மேக நோயா?"

"ஸ்திரீ சகவாசம் உண்டா?"

"கிடையாது."

"பின் உங்களுக்கு வராது ஸார்."

"ஆனால், எங்கப்பாவுக்கு இருந்ததாம். எனக்கும் வரலாமல்லவா?"

"வரணுமென்ற கட்டாயமில்லை."

"எனக்கென்னவோ அந்த நோய் கட்டாயம் வந்தே தீரும் என்றுதான் தோன்றுகிறது, ஸார்."

"அப்படி தோன்றுவதும் ஒரு நோய்தான்."

"என்ன நோய்?"

"பயம்!"

அவன் எதுவுமே பேசவில்லை. எனினும் அவன் மனசில் தெளிவு ஏற்படவில்லை. கடைசியில் பழவர்க்கங்கள் அதிகம் சாப்பிட வேண்டும் என்று டாக்டர் சொல்லிய புத்திமதியைக் கேட்டுக் கொண்டு திரும்பிவிட்டான்.

## 4

செந்திலுடைய நண்பன் ஒருவன் ஒரு புதுக் காமிராப் பெட்டியும் கையுமாய் வந்து சேர்ந்தான். அந்த நண்பன் கொஞ்சம் பணமுள்ள ஆசாமி. ஆகவே பணமுள்ளவர்கள் தேர்ந்தெடுக்கும், பணத்தைக் கரியாக்கும் 'ஹாபி'யாக

புகைப்படம் பிடித்தலைத் தனது பொழுதுபோக்காகக் கொண்டவன். தோல் வாரோடு கூடிய காமிராவைத் தோளில் மாட்டிக்கொண்டு போவதிலேயே அவனுக்கு ஒரு குஷி. அன்று வந்தவன், தான் இப்போது படம் எடுக்கமட்டும் கற்றுக்கொள்ளவில்லை என்றும், அதை இருட்டறையில் கழுவி, 'டெவலப்' பண்ணவும், 'பிரிண்ட்' எடுக்கவும் கற்றுக் கொண்டதாகவும் பெருமை அடித்துக் கொண்டான்.

''என்னடா செந்தில்! உன்னை ஒரு படம் எடுப்பமா?'' என்று உல்லாசமாகக் கேட்டுக்கொண்டு 'உன் மனைவியையும் கூட்டி வந்திருந்தால் ஒரு 'கப்பிள் போட்டோ' கூட எடுக்கலாம்'' என்றும் சொன்னான்.

செந்திலுக்குத் தன்னைப் படம் எடுத்துக் கொள்வதில் சபலம் தட்டியது. நண்பனின் வேண்டுகோளுக்குச் சம்மதித்து வெயிலில் வந்து நின்றான்.

நண்பன் படத்தை எடுத்துக்கொண்டு போய், இரண்டு நாட்களில் போட்டோ காப்பி ஒன்றும் போட்டுக் கொண்டு வந்தான். செந்திலுக்கு படத்தில் தான் நன்றாயிருப்பது போலவே பட்டது. படத்தைச் சட்டம் போட்டு, அலங்காரமாக அறையில் மாட்டி வைத்தான். தன் அறைக்கு வரும் நண்பர்களிடமெல்லாம் படத்தைக் காட்டினான். அவர்கள் அபிப்பிராயங்களைக் கேட்டான்.

அன்று இரண்டு நண்பர்கள் வந்தார்கள்.

செந்தில் அவர்களிடமும் படத்தைக் காட்டினான்.

ஒருவன் ''என்னடா இது? முகமெல்லாம் குஷ்டம் பற்றியது மாதிரி திட்டுத் திட்டாயிருக்கிறது?'' என்று சொல்லி விட்டான்.

செந்திலுக்கு திக்கென்றது. எதிரே இருந்த கண்ணாடியில் முகத்தைப் பார்த்தான். முகத்தில் படர்ந்திருந்த தேமல் விகாரமாயிருந்தது. அது தேமலா? அல்லது குஷ்டமா?

கூட வந்தவன் சொன்னான்: ''யாரு, நம்ம ராமசாமி எடுத்த படம்தானே. படத்தில் 'கிரெய்ன்ஸ்' ஜாஸ்தியா யிருக்கு. சரியா 'டெவலப்' பண்ணலே. அதுதான் இப்படி இருக்கு.''

இந்தச் சமாதானம் செந்தில் நாயகத்தின் மனசில் அவ்வளவு லகுவில் உறைக்கவில்லை. உண்மையிலேயே அந்தப் புகைப்படம் தனது 'குஷ்டம் பிடித்து வரும்' முகத்தைத்தான் பிரதிபலிக்கிறதா?

அந்த எண்ணத்தை அவனால் தாங்க முடியவில்லை. அதிலிருந்து அந்தப் படத்தைப்பற்றி யாரிடமும் அவன் அபிப்பிராயம் கேட்பதே இல்லை.

ஒரு நாள் அவன் அறையில் உட்கார்ந்து சாவகாச மாக 'ஷெல்ப் ஷேவ்' பண்ணிக் கொண்டிருந்தான். பிளேடு புதிதாகையால், ஜாக்கிரதைக் குறைவால் தோலில் அழுத்திப் பதிந்து, கன்னத்தில் ரத்தம் துளித்தது.

வேதனையைத் தாங்கிக்கொண்டு, அவன் துளித்த ரத்தத்தை விரலால் சுண்டினான். சுண்டிய ரத்தம் தெறித்து விழுந்தது. க்ஷவரம் பண்ணி முடித்துவிட்டு, தனது படத்தின் பக்கம் திரும்பினான்.

என்ன ஆச்சரியம்?

படத்திலும் கன்னத்தில் வடு தென்பட்டது; அது மட்டுமல்ல, ஒரு துளி ரத்தமும்கூட இருந்தது!

செந்தில் திகைத்தான்.

அப்படியானால் அந்தப் படம்? அது அவன் வாழ்க் கையையே பிரதிபலிக்கிறதா? புகைப்படம் என்பது உயிர் ராசியின் நகல் பிரதி என்றாலும், உயிர் ராசியின் இன்ப துன்பங்களும், தாழ்வு வீழ்ச்சிகளும் அந்த நகலையும் பாதிக்குமா? அவன் யோசித்தான். அவனுந்தான் ஆஸ் கார் ஒயில்டின் டோரியன் கிரேயையும், லூகாசின் காரை யில் கண்ட முகத்தையும் படித்திருக்கவே செய்கிறான்.

அந்தக் கதைகளில் வரும் படத்திலும், சுவரிலும் உயிர்க் குலத்தின் துடிப்பு பிரதிபலிப்பது போலவே, இந்தப் படமும் அவனது வாழ்க்கையைப் பிரதிபலிக்கிறதா? அப்படியானால் இதோ இருக்கும் அந்தப் படம் அவனது வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் சூத்திரதாரியா?

அவன் திகைத்தான். மருண்டான்.

அன்று முதல் அந்தப் படத்தை மிகவும் ஜாக்கிரதையாகக் கவனித்து வந்தான். தனக்கு வரும் ஆபத்து எப்படி அந்தப் படத்தையும் பாதிக்கிறதோ, அதுபோலவே அந்தப் படத்துக்கு வரும் ஆபத்து தன்னையும் பாதிக்கக் கூடுமென்று கருதினான்.

படத்தைப் பத்திரமாக மாட்டி வைத்தான்.

ஆனால்—

சில நாட்கள் கழித்து அவன் அந்தப் படத்தைப் பார்க்கும்போது அந்தப் படத்தில் முன்னைவிட அதிகக் கருமை தென்பட்டது. முகத்தில் துலாம்பரமாக வட்ட வட்டத் திட்டுக்கள் தென்பட்டன. கரையான் அரித்தது போல் படத்தின் பல பாகங்கள் மங்கி மறைந்தன.

செந்திலால் இந்த மாற்றத்தைத் தாங்க முடியவில்லை. நண்பர்களிடம் மீண்டும் அபிப்பிராயம் கேட்டான். வந்த நண்பர்கள் படத்தைப் பற்றிப் பலவாறாகப் பேசினார்கள்.

''என்ன கருங் குஷ்டம் பிடித்ததுபோல் கறுத்துக் கொண்டிருக்கிறதே'' என்றான் ஒருவன்.

"ராமசாமியின் போட்டோ டெவலப்மெண்டின் அழகு இது! அவனுடைய அமெச்சூர் போட்டோகிராபிக்கு இது ஒரு உதாரணம். 'ஹைப்போ ஸொலூஷ'னில் படத்தைச் சரியாகப் போடவில்லை. அதனால்தான் இந்தக் கோளாறெல்லாம்'' என்றான் மற்றொருவன்.

''இந்தப் படத்தை மாட்டி வச்சிருக்க உனக்கு வெட்கமாயில்லை? கழற்றித் தூர எறி'' என்றான் வேறொருவன்.

செந்தில் நாயகத்தால் இந்த அபிப்பிராயங்களைக் கேட்க முடியவில்லை. தன்னுடைய வாழ்க்கையின் பிரதி பிம்பமே அந்தப் படம் என்று அவன் கருதுகிற விஷயத்தை நண்பர்களிடம் சொல்லவும் துணிவில்லை. தனது உள்ளத்தில் கிடந்து உறுத்தும் நமைச்சலையும் வெளியிடத் திராணியில்லை.

அன்று முதல் அவன் அந்தப் படத்தையும் தன்னையும் ஒழுங்காகக் கவனித்தான்.

படம் நாளுக்குநாள் கருத்துக்கொண்டு வந்தது.

'எனக்கு, குஷ்டம் வருவதைத் தடுக்க முடியாதா? அப்படி வந்தால்......'

அவன் யோசித்தான். 'வீட்டிலிருந்து கடிதத்துக்கு மேல் கடிதம் வருகிறது. சாந்தி முகூர்த்தமாம்! ஏன்? அந்த அபலை கோமதிக்கும் இந்த விஷயத்தில் பங்கு கொடுக்கவா? என் தந்தையின் வழியாக எனக்கு வந்து கொண்டிருக்கும் இந்தத் தொழுநோய் பரம்பரை பரம்பரையாய் நிலைத்து வாழவா? நான் குஷ்டரோகியாய், அழுகி வழியும் தொழும்புப் புண்களுடன் சீழுடன் விரலற்ற மொட்டைக் கரங்களுடன் உலகிலே திரிய வேண்டுமா? என் நண்பர்கள், உறவினர்கள் என்ன நினைப்பார்கள்? எல்லோரும் காறியுமிழ, கதியற்று, ஆதரவற்று, யாவரும், அருவருக்கும் புழுத்துச் செல்லரித்துப்போன ஒரு ஜென்மமாய் நாட்டில் உலவவா?'

அவனால் அந்தச் சிந்தனையின் வலிமையைத் தாங்க முடியவில்லை.

படம் கறுத்துக்கொண்டே யிருந்தது!

அதே வேளை தாத்தாவிடமிருந்தும் உடனே புறப்பட்டு வருப்படி தந்தி வந்தது!

அவனோ அறையை விட்டு வெளிச் செல்வதில்லை. உடம்பைத் திறந்தவாறே வைத்திருப்பதில்லை. யார்

மத்தியிலும் வரக் கூசினான்: ஜெகிலின் உருவைத் திரும்பப் பெற முடியாத ஹைடைப் போலப் பயப்பட்டான்.

'எப்படி இந்த நோயிலிருந்து விடுபடுவது? தற்கொலை செய்து கொள்வதா? அல்லது ஓடிப் போய்விடுவதா?'

அவன் திகைத்தான்; அழுதான்; கண்ணீர் சிந்தினான்.

## 5

ஒரு வருஷ காலத்திற்குப் பின் பத்திரிகையில் ஒரு விளம்பரம் வந்திருந்தது:

செந்தில் நாயகத்துக்கு

அருமைச் செந்திலே! இப்படி எங்களை யெல்லாம் பரிதவிக்க விட்டுவிட்டு நீ தகவலற்றுப் போய்விடலாமா? உன் மனைவியும் அவள் குடும்பத்தாரும் கண் கலங்கி நிற்கிறார்கள். நானும் படுக்கையில் விழுந்துவிட்டேன். உன் தாய் மரணப் படுக்கையில் கிடக்கிறாள். இந்த வேளையாவது நீ இங்கு வந்து எங்களுக்கு ஆறுதல் சொல்லப்பா.

—தாத்தா, பாண்டிப் பெருமாள் பிள்ளை.

1948

# ஞாஞேயம்

## 1

“காஞ்சனு!”
பதிலில்லை.
“கமலா!”
பதிலில்லை.
“ரத்னு!”
பதிலில்லை.
“ரங்கா!”
பதிலில்லை.

அவன் சோர்ந்து போனுன். ஒன்ரு, இரண்டா? எத்தனை கதவுகள்! ஓங்கி ஓங்கித் தட்டி, அவன் முஷ்டி கூட வீங்கிவிட்டது.

அதோ, ரத்னுவின் வீட்டு மாடியில் விளக்கு எரி கிறது! அவள் தூங்கியிருக்க மாட்டாள்!

“அதோ காஞ்சனுவின் வீட்டுக்குள் காற்சிலம்போசை கேட்கிறது. அவள் தூங்கியிருக்க மாட்டாள்!

அதோ ரங்காவின் வீட்டுக்குள் பேச்சுக் குரல் கேட் கிறது. ஆண் குரல்!......அவளும் தூங்கவில்லை!

அதோ கமலாவின் வீட்டுக் கதவு திறக்கிறது. புதி தாக ஒரு ஆசாமி நுழைகிருன். சிரிப்பு கலகலக்கிறது. அவளும்......!

அவனுக்கு உடம்பெல்லாம் பற்றி யெறிந்தது. சப்த நாக்குகளையும் சுற்றிச் சுழலும் அக்னியைப் போல், உடம்

பெல்லாம் கனன்று கொழுந்துவிட்டுக் கொதிப்பது போல் இருந்தது.

அவன் மனசில் ஒரே எண்ணம்: கலவி! உடம்பில் ஒரே நெருப்பு: காமம்!

அவர்கள் ஏன் கதவைத் திறக்கவில்லை? ஒரு காலத்தில் அவர்கள் அவனது இதழ் அமுதுக்காக, எச்சில் தம்பலத் துக்காக, இனிய வார்த்தைக்காகத் தவம் கிடக்கத்தான் செய்தார்கள். அந்த அமுதம் இன்று கசந்து விட்டதா? அந்த ஆனந்தம் இன்று அழிந்துவிட்டதா?

'ஏன் என்னை அவர்கள் உதாசீனம் செய்கிறார்கள்!'

அவன் துடித்தான்.

அவன் ரோகி? குஷ்டரோகி! அவனோடு கலந்து அவர்கள் அந்த ரோகத்தைத் தாங்களும் பெறத் தயாரா யில்லை. குஷ்டரோகியோடு கூடிக் குலவுவதா? ஆனால்... ஆனால், அந்த ரோகமே அவர்கள் தந்த வரப் பிரசாதம் தானே!

கொடுத்த தானத்தை திரும்பப் பெற்றால் என்ன? அவனிடமிருந்து அவர்கள் பணம் பெறவில்லையா? வைரம், வைடூரியம், முத்து, மாணிக்கம், கோமேதகம், மரகதம் எல்லாம் பெறவில்லையா? இதையும் பெற்றுக்கொண்டால் என்ன? இல்லை. அவர்கள் பெற்ற சாமானைத் திருப்பித் தரவும் மாட்டார்கள்; கொடுத்த நோயையும் திரும்பப் பெறமாட்டார்கள்! அப்படித்தானா?

இல்லை. இல்லை, இப்போது பணம் கொடுத்தால், அவர்கள் அவனைக் கலப்பதற்குக் கூசமாட்டார்கள். அவனையா கலக்கிறார்கள்! அவன் தரும் பணத்தை! நாய் விற்ற காசு குரைக்குமா? பணம் தந்தால் பிணத்தையும்!... அவர்கள் தாசிகள்! வேசிகள்!...

ஆனால் பணத்துக்கு அவன் எங்கே போவது? கை முதலைக் கொள்ளைக் கொடுத்துத்தான் அவன் கால

மெல்லாம் அந்தச் சுகத்தை அனுபவித்தான். ஆனால், ஆசை, இருபதிலும் அறுபதிலும் குறையாத அந்த ஆசை, இன்றுமட்டும் இற்று விட்டதா?

அவனுக்கு வேண்டியது ஒன்றே ஒன்றுதான்: ஒரு பெண். ஒரு சதைப் பிண்டம். இல்லை......பிறந்த இடம் நோக்கும் பேதை மனசுக்கு ஒரு சாந்தி; கறந்த இடம் நோக்கும் கண்ணுக்கு ஒரு திருப்தி!

அவன் உடம்பெல்லாம் கொதித்தது. என்ன பண்ணுவதென்று தெரியாமல், அந்த வீட்டு முன்னால், அந்தத் தெருவிலே, நாயும் படுத்துறங்கும் அந்தத் திண்ணையிலே கிடந்தான். இந்திரன் கண்களைப்போல் உறுத்தும் தொழும்புப் புண்களின் நமைச்சல். வேள்வித் தீயாய் நிமிர்ந்தெரியும் காமாக்கினி. அவன் நிலை கொள்ளாமல் புரண்டு கிடந்தான்.

அவனை யாரும் அழைக்கவில்லை.

இல்லை. அதோ யாரோ அழைக்கிறார்கள்?......

நிலவொளியில் தூரத்தில் தெரியும் கோபுர கலசத்திலிருந்து கண்டாமணி ஓசை ஒலித்தது; வயல்வெளியை, வான வெளியைத் தாண்டி நீந்தி அலையலையாய் வந்த அந்த ஓசை அவனை 'வா வா' என்று அழைத்தது!

"என் வேகும் உள்ளத்துக்கு அந்தக் கோயிலாவது சாந்தியளிக்குமா? என் உடலைத் தகிக்கும் காம நெருப்பு, அந்த கண்ணுதலின் கருணையால் அணைந்துவிடுமா? இனி எனக்குக் கோயில்தானா கதி? அங்காவது சாந்தி கிடைக்குமா?"

அவன் மனம் அல்லாடியது.

கண்டாமணி ஓசை 'வா வா' வென்று அழைத்தது.

'வருகிறேன், வருகிறேன்' என்று அவன் உள்ளம் கூவியது.

அவன் எழுந்திருந்து வயல் வெளியின் ஊடாக ஓடி ஞன்; காலடியில் நத்தைக் கூடுகள் நொறுங்கின; நீர்ப் பாம்புகள் நசுங்கின; கதிர்த் தாள்கள் காலை யறுத்து ரத்தம் குடித்தன.

அவன் ஓடிஞன்; கண்டாமணி ஓசை ஒலித்துக் கொண்டே இருந்தது!

## 2

இதுதான் கோயில்.

அவன் ஓடிவந்த பெருமூச்சு இரைக்க நின்ருன்; நிமிர்ந்து கோபுரத்தைப் பார்த்தான்: உச்சியிலே விளக் கெரிந்தது. அந்த நிலவொளியின் பகைப்புலத்தில் கோபுரம் மோகினித்தேவு போலத் தோன்றியது.

'சே! இதென்ன கற்பனை! ஆண்டவன் சந்நிதியைத் தேடி வந்த இடத்திலுமா இப்படி—?'

அவன் கோவிலுக்குள் சென்ருன்.

முன் மண்டப முகப்பில் ஒரே கூட்டம். ஒளிமயமான மேடையில், ஜாஜ்வல்யமாக வெட்டி மினுக்கி, மின்னல் தெறிக்கும் பட்டுப் பாவாடை கட்டி ஒரு பெண் நடன மாடிக் கொண்டிருந்தாள். முன்னே திருநீறு நிறைந்த சிவநேசர்கள் அந்த அபிநயத்தில் ஆத்மார்த்தம் கண்டு கொண்டிருந்தார்கள்!

அவன் அவளைப் பார்த்தான்!

'வா வா' என்று அபிநயிக்கும் பிஞ்சு விரல்கள்! செம் பஞ்சு தீட்டிய பாதத்தின் நாக படம் போன்ற நளினம்! கடைந்தெடுத்த திருமங்கிலியச் செப்பைப்போல் திரண்டு குவிந்த கச்சிறுக்கு!

''இதென்ன இது. என் மனம் மீண்டும் அல்லாடுகிறதே! இதென்ன கோயிலா, விபசார மடமா?''

அவன் அங்கிருந்து ஓடினான்.

மேலப் பிரகாரத்தில் பௌராணிகர் கதை படித்தார். 'சிற்றின்ப வேட்கையில் தீயும் மனசுக்கு, அந்தக் கதா காலட்சேபமாவது புண்ணிய வசனமாகக் காதில் விழுந்து சாந்தி தராதா?' என்று அவன் கருதினான்.

ஆனால், அவரோ சிவபெருமான் பார்வதியைக் கலந்து, அதனால் ஏற்பட்ட கொதிப்பை சரவணப் பொய்கையிலே, கார்த்திகைப் பெண்களின் கண்காணிப்பிலே விட்ட கதையை......

''அட, தெய்வமே! சரவணபவா! இதென்ன இது! கோயிலும் சிற்றின்பம்தானா? சிற்றின்பப் பிரசாரம்தானா?''

அவன் மீண்டும் ஓடினான்.

பக்கத்திலே முருகனின் திருக்கோயில் இருந்தது. அவன் அங்கு நுழைந்தான்.

அவன் சென்ற சமயம் புரோகிதர் சிலைகளைக் கழுவி, புத்தாடை புனைந்து கொண்டிருந்தார்.

அவன் கண் முருகனிடம் நிலைக்கவில்லை. பக்கத்திலே குறுஞ்சிரிப்பு குமிழிட, சாயாத கொம்பு இரண்டும் வல்லீட்டியைப் போலக் கண்ணை உறுத்த, ஒடிந்து விழப் போகும் இடையைத் தாங்க, தன்னையறியாமலே கை நீளும்படிச் செய்யும் ஒயில்காட்டி நிற்கும் அந்தக் கானக் குறத்தியிடம், வள்ளியிடம் அவன் பார்வை நிலைத்தது.

''அந்தச் சிலை மட்டும் உயிருள்ள யுவதியாக இருந்தால்?—மீண்டும் அந்த எண்ணம்! அந்த நெருப்பு அவியாதா?''

அவனுக்கு அங்கு நிற்கக் கொள்ளவில்லை வெளியே ஓடிவந்தான்.

எதிரே விநாயகப் பெருமான்—விக்நேஸ்வரர் இருந்தார்! ''ஆண்டவா? என்னைக் காப்பாற்று!'' என்று அவன் உள்ளம் இரங்கிற்று. ஆனால். விநாயகப் பெருமானைச் சுற்றி வரையப்பெற்ற அந்தச் சித்திரங்கள்......

அவை அவன் கண்களை உறுத்தின.

அசுரர்களின் பிறப்பை ஒடுக்க எண்ணி, அரக்கியின் கருவாயிலைத் தன் துதிக்கையால் பந்தம் செய்து கொண்டிருந்தார் அந்த விநாயகர்; அவர்தான் உச்சிட்ட விநாயகர்!

''இதென்ன இது? தம்பியும் அப்படி! அண்ணனும் இப்படியா? இந்தத் தெய்வமா பிரம்மச்சாரி? எந்தத் தெய்வமுமே எனக்குச் சாந்தி தராதா? நான் இப்படியே வெந்து நீருக வேண்டியதுதானு?''

அவன் மீண்டும் ஓடினான்.

ஆனல், கோயிலில் எங்கு திரும்பினாலும் இதே காட்சிகள். இதே சிலைகள். இதே சிற்பங்கள்.

அதோ மன்மதன் கரும்பு வில்லை வளைத்து அம்பு எய்கிறான்; எதிரே ரதி கிளி வாகனத்தில் கச்சை மறைத்த துணி நெகிழ்ந்து சரிய, நெற்றிக்குத் திலகம் இடுகிறாள்!

அதோ இரு காதலர்கள். வரிசை வரிசையாக காதல் காட்சிகள்! ஆலிங்கன வகைகள்! ராஜக்கிரீடை; காம உத்சவம்; காதல் நாடகம்!

''இதென்ன கோலம்? இதுவா கோயில்? இங்கேயா நான் சாந்தியைத் தேடி வந்தேன். இதைவிட, ஒரு தாசியின் மடியில சாந்தி கிடைக்குமே! அட தெய்வமே!''

அவன் ஒன்றும் புரியாமல் கண்ணை மூடிக்கொண்டு மூலஸ்தானத்துக்குள் ஓடினான். ''கடவுளே! என்னைக் காப்பாற்று. என் காமப் பசியைக் கொன்றுவிடு. நீதான் கதி. நீதான் சரண்'' என்று வெறிபிடித்துக் கத்தினான்.

கண்களைத் திறந்து மூல பிதாவை ஏறிட்டுப் பார்த்தான்.

ஆனால், அங்கு மூல பிதாவே லிங்க உருவாய் நின்றார்!
அவன் தலை கிறுகிறுத்தது!

மறுகணம் அவன் கால்கள் அங்கு தரிக்கவில்லை. ஓடியே வந்தான். கோயிலைவிட்டு, மூலஸ்தானத்தைவிட்டு, முருகக் கடவுளைவிட்டு, விநாயகப்பெருமானைவிட்டு ஓடியே வந்துவிட்டான்.

அப்போது கண்டாமணி ஓசை அவனை அழைக்கவில்லை.

3

அவன் வீட்டுக்கு வந்தான்.

கதவு திறந்தே கிடந்தது.

அவன் மனம் கட்டுத்தறி இழந்த காளையைப் போலத் தான் இன்னும் துள்ளியது. அதை அடக்க அவனால் முடியவில்லை.

'நெருப்புத்தான் நெருப்பை அணைக்கும் தனிமையில் வேகும் தன் உடல் நெருப்பை, வான மண்டலத்தின் சுடு நிலாவாவது அணைக்கட்டும்' என்று நிலா முற்றத்துக்குச் சென்றான்.

அங்கு அவன் கண்ட காட்சி—

நிலா முற்றத்தில் மாதவிப் பந்தலின் நிழலிலே துகிலாய், அவள் படுத்திருந்தாள். குங்குமம் தீட்டிய மார்புக் குவடு, சக்கரவாகப் பட்சிபோலத் தெரிந்தது. அவிழ்ந்து தொங்கும் கருமேகக் கூந்தல் நிலவொளியில் அருவிபோல மின்னிற்று. கண் மலர்கள் குவிந்திருந்தன; இதழ்கள் குவிந்திருந்தன. அதில் குறுஞ்சிரிப்பு. ஆனந்தக் கனவோ? அல்லது கடந்த கால அனுபவத்தின் நினைவில் வெடித்த நகையோ?

அவன் அவளையே பார்த்தான்.

அவன் கண்ணுக்குத் தெரிந்ததெல்லாம் ஒரு பெண். ஒரு பெண்ணின் சதைப் பிண்டம். பட்சியை வாவென் றழைக்கும் பழுத்த மாம்பழத்தின் மோகனம்!

அவன் கைகள் விறைத்துத் துறுதுறுத்தன. உடம்பு விண்ணென்று தெறித்தது. கண்களில் ரத்தம் பாய்ந்து, ரேகைகள் துடித்தன; நெற்றிப் பொருத்துகள் புடைத்தன.

அவன் ஓடித்தாவினான்; அங்கு சொகுசாக ஆனந்த சயனம் பண்ணும் அந்தப் பெண்ணை, அந்தப் பெண் உடம்பை அள்ளி யெடுத்தான்; அணைத்தான்; ஆரத் தழுவினான்!

இதழ் ஈரம் பரிவர்த்தனையாயிற்று.

அவள் விழித்துக் கொண்டாள். திடுக்கிட்டு எழுந் தாள்; திகைத்தாள்.

அவள் கண்டத்திலிருந்து ஒரே வார்த்தைதான் வெடித்து விழுந்தது:

''தம்பீ!''

அவன் காதில் அது விழவில்லை. அவன் மனம் அதைக் கேட்கவில்லை; அணைத்தான்! முயங்கித் தழுவினான்!

''தம்பீ!''

அவள் கத்தினாள்

அதோ அவள் அழைக்கிறாள். அவன் காதில் அது விழவில்லை. ஆனால், அந்தக் குரலுக்கு மேலாக எங் கிருந்தோ மீண்டும் நிலவொளியைக் கீறிக்கொண்டு, பனிப் படலத்தின் புகை மூட்டத்தைப் பிளந்துகொண்டு அந்தக் கண்டாமணி ஓசை வந்தது; வந்து அவனை அழைத்தது!

அவன் விழித்துக் கொண்டான்.

''தம்பீ!''

அந்தக் குரலும் இப்போது கேட்டது. கண்டாமணி ஓசையும் கேட்டது.

''தம்பீ! இதென்ன காரியம்?'' என்று அவள் கேட்டாள்; அதே கேள்வியை அவன் மனம் முந்திக் கேட்டு விட்டது.

அவனால் அங்கு நிற்கமுடியவில்லை; கண்டாமணி ஓசையின் அழைப்பை உதற முடியவில்லை. ஓடினான்; பதிலே பேசாமல் ஓடினான்; அவளை ஒரு முறைகூட நிமிர்ந்து பார்க்காமல் ஓடினான்.

நிலவு மேகச் சேற்றில் அமிழ்ந்துவிட்டது. தெருவிலே ஒரே இருள். அவன் மனசிலும் இருள். அந்தக் கண்டா மணிதான் அவனுக்கு வழி சொல்லிற்று. ஓடினான்.

இருளில் எங்கோ ஒரு கழுதை கத்துவதை அவன் கேட்டான்.

அதைத் தொடர்ந்து இரு குரல்கள் எங்கோ வார்த்தைகளை இருளில் தேங்கவிட்டன.

''கிளம்பு. கழுதை கனைக்குது. நல்ல சகுனம்!'' என்றது முதற் குரல்.

''இல்லையடா? அது கத்தி தொலைக்குது!'' என்றது பதிற்குரல்.

அந்தக் கழுதையின் சத்தமும், இந்த மனிதக் குரல்களும் அவனுக்கு ஞானாசிரியனின் தோன்றாத் துணைப் போத வாசகமாக, வேத கோஷமாக ஒலித்தன.

அவன் மணியோசை வந்த திக்கை நோக்கி, கோயிலை நோக்கி ஓடினான்.

4

“முருகா!”

அவன் கத்திக்கொண்டே ஓடினான். அவன் குரல் எதிரொலித்துத் திரும்பி வந்தது.

கோயிலின் முன் கதவு திறந்து கிடந்தது.

“கந்தா!”

குரல் எதிரொலித்தது; இரண்டாம் கதவும் திறந்தே கிடந்தது.

“சண்முகா!”

குரல் எதிரொலித்தது; மூன்றாம் கதவும் திறந்து கிடந்தது.

“வேலவா!”

“சரவணபவா!”

“கார்த்திகேயா!”

எல்லாக் கதவுகளும் திறந்தே கிடந்தன; எல்லாக் குரல்களும் எதிரொலித்தன.

மூலஸ்தானம் நெருங்கிய போது, அவன் ஓடிவந்த வேகத்தில் படிதட்டி விழுந்தான்; அவன் பிரக்ஞை அவனைக் கைவிட்டது.

மயக்கம் தெளிந்து எழுந்த போது அவன் கண்டத்திலிருந்து பின் வரும் நாதம் எழுந்தது:

அளக நிரை குலைய விழி குவியவளை கலகலென
அமுத மொழி பதறியெழ அணியாரம்
அழகொழுகு புளகமுலை குழைய இடை துவளமிக
அமுத நிலை அது பரவ அதிமோகம்
உளமுருக வருகலவி தருமகளிர் கொடுமையெனும்
உறுகபடம் அதனில் மதி அழியாதே......

அவன் பாடினான். அவன் பாடியது திருப்புகழ்; அவன் அருணகிரி!

1950

# மனைவி

## 1

ராமசாமி விறுட்டென்று நடைக்குத் தாவிக் கதவைத் தட்டினான். தெரு விளக்கின் 'இருபத்தஞ்சு பவர்' விளக்கு மட்டும் வீட்டுக் கதவை அடையாளம் காட்டும் புனித சேவையோடு கர்மயோக சாதகம் செய்து கொண்டிருந்தது. ராமசாமியிடம் கைக் கெடிகாரம் இல்லை. எனவே மணி என்ன இருக்கும் என்று நிதானிக்க முடியவில்லை. என்றாலும் டவுனுக்குச் செல்லும் கடைசி பஸ், வரும் வழியில் அவனைக் கடந்து செல்லவில்லை என்ற நிச்சயத்தின் பேரில், மிஞ்சிப் போனால் பத்துப் பத்தரை இருக்கும் என்று நினைத்துக் கொண்டான். அதில் அவனுக்குக் கொஞ்சம் திருப்தி.

மீண்டும் அவன் கதவைத் தட்டினான். கதவு திறக்கப்பட்டது; செல்லம் எதிர்ப்பட்டாள்.

தூக்கத்தின் அழுத்தம் கண்ணிமையை விட்டு இறங்காததனால், அவள் முகம் சோர்ந்து போயிருந்தது. அந்தச் சோர்வை 'காரிகேச்சர்' பண்ணி அழுத்தம் கொடுப்பது போல, தலை மயிர் வரிசை குலைந்து போயிருந்தது. அசேதனப் பொருளான அந்தச் சேலையின் துவட்சியில் கூட, அந்தச் சோர்வின் 'களை' தட்டியது.

ராமசாமி கலாரசிகன் அல்ல. ரசிகனாயிருந்தால் 'திருவனந்தலிலும் முகமலர்ந்தொளிரும்' அந்தக் கடை திறப்பின் களையை அனுபவித்திருப்பான். எனவே சாதாரண வாலிபனுக்கு உரிய உணர்ச்சியோடு, செல்லமாகக் கன்னத்தைத் தீண்டிவிட்டு, ''தூங்கிட்டியா?'' என்றான்.

"ம்" என்ற முனகலிலேயே ஆமோதிப்பதைத் தெரிவித்து விட்டு, சோம்பல் முறித்தாள் செல்லம்.

ராமசாமி குழாயடிக்குச் சென்று கைகால் கழுவி விட்டு வீட்டுக்குள் வந்தான். உடை களைந்து மாற்றிக் கொண்டான். பிறகு செல்லத்திடம் திரும்பி, "அதற்குள்ளாகவா தூக்கம்?" என்ருன்.

அப்போதுதான் தூக்கக் கலக்கம் கலைந்த செல்லம் நாணத்தோடு உள்ளூர நகைத்துக் கொண்டாள்.

'நீ சாப்பிட்டாச்சா?"

"ம்"

"சரி. எனக்குப் பசி தலையெச் சுத்தது. போய்ச் சோத்தை வய்யி" என்ருன் ராமசாமி.

செல்லம் ஒரு கணம் திகைத்தாள். அவள் தூக்கம் அந்தத் திகைப்பில் பறந்து போய்விட்டது.

"சாதமா? தண்ணி விட்டுட்டேனே!" என்று பரிதபித்தாள்.

ராமசாமிக்கு நல்ல பசி; மேலும் நடந்து வந்த களைப்பு. இத்தனைக்கும் மேல் முன்கோபம் அவனுக்குப் பிறவிக் குணம்.

"தண்ணி ஊத்திட்டியா? அதுக்குள்ளே ஏன் ஊத்தினே? கொஞ்சம் பொறுத்திருந்தா என்ன..."

வார்த்தை அதனளவில் வலிமை மிக்கதென்று சொல்ல முடியாது. சொல்லுகின்ற பாவனையில்தான் வலிமை இருக்கிறது. ராமசாமியின் வார்த்தைகளில் கோபம் புதைந்து போயிருந்தது. செல்லத்தையும் கண்டிக்க வேண்டும்; என்ருலும் அவள் சின்னஞ் சிறுசு; புதுசு. அவனுக்கும் நல்ல பசி; அவன் ஆத்திரத்துக்கும் ஒரு நிவர்த்தி வேண்டும். எனவே வார்த்தைகளின் பாவனை ரசக் கலவையை அவனுல்கூட, ஊகிக்க முடியவில்லை.

செல்லம் ராமசாமியோடு குடியும் குடித்தனமுமாய் இருந்து கொஞ்சக் காலந்தான் ஆகிறது. என்றாலும், அந்தக் காலத்துக்குள்ளாகவே அவனது குணத்தை அவள் ஓரளவு அறிந்துதான் வைத்திருந்தாள். எனவே அவளது செல்லக்கோபத்தை உணர்ந்து அவனை அறிவுறுத்த எண்ணி, ''நீங்கதானே சொல்லிட்டுப் போனீங்க, நாழியாச்சின்னு காத்திருக்க வேண்டாம்'ன்னு'' என்றாள்.

''அப்படியென்ன நேரமாச்சு?'' அவன் குரல் கடுத்தது.

''நேரமா? மணி பதினொன்று ஆகப் போறது. சோறு வேர்த்து விறைத்துப் போச்சு. அதுனாலெதான் தண்ணி விட்டேன். வேணுமின்னா புளிஞ்சி வைக்கிறேன்'' என்று சமாதானம் கூறினாள் செல்லம்.

ராமசாமிக்குப் பசிக் கொடுமை. அந்த நேரத்தில் வாதாட நேரமில்லை. இருந்தாலும் அவனுக்கு வெந்நீர்ப் பழையது பிடிக்காது' எனவே எரிச்சல் மூண்டு வந்தது. ''சரி சரி; ஏதாவது வய்யி'' என்று சலித்துப் போய்ச் சொன்னான். 'வய்யி' என்பதற்குப் பதிலாக 'வச்சித் தொலை' என்ற வார்த்தைதான் வாயில் வந்தது; ஆனால் வெளிவர வில்லை.

செல்லம் அடுக்களையுள் சென்று இலையைப் போட்டாள். சாதத்தையும் பிழிந்து வைத்தாள். ராமசாமி ஒன்றும் பேசாமல் சாப்பிட உட்கார்ந்தான். சாப்பாடு, அதிலும் குளிர்ந்து போன சாதமும் குழம்பும், சப்பிட்டுப் போயிருந்தன. பசிதான், ஆனால் அவன் பசி ருசியும் அறியும். சாப்பாடு செல்லவில்லை.

''என்ன? சாப்பிடாமல் பெரிய யோசனை பண்ணுறீங்களே!'' என்றாள் செல்லம்.

ராமசாமிக்கு அப்போது கோபத்தை அடக்கவே முடியவில்லை. ''என்னத்தைச் சாப்பிடறது? உன் காரியத்தை மட்டும் வேளாவேளைக்குப் பாத்துட்டேல்லெ. நீ ஏன் பேசமாட்டே!'' என்று எரிந்து விழுந்தான்.

செல்லம் புடலம்பூப் போன்ற குணம் பொருந்தியவள். அவள் பூப்பதும் தெரியாது, வாடுவதும் தெரியாது. "நான்என்ன பண்ணிட்டேன்?" என்று சொல்ல ஆரம்பித்தாள். அதற்குள் தொண்டை அடைத்தது. கண்ணில் சிவப்பு ரேகைகள் துடித்துத் தெரிந்தன. கண்ணீர் கண்ணைக் கரித்தது. இருந்தாலும் அவள் அதை வெளிக்காட்டிக் கொள்ள விரும்பவில்லை.

ஆனால் ராமசாமிக்குக் கண் குருடா என்ன? "இந்தச் சொரணை அப்போ எங்கே போச்சி? அழுதுட்டியா?" என்றான்.

அவ்வளவுதான். செல்லம் குபீரென்று முகத்தைப் புதைத்துக் கொண்டு அழ ஆரம்பித்து விட்டாள்.

"இனி சாப்பிட்டாற் போலத்தான்" என்று முனகி விட்டு கையைக் கழுவினான் ராமசாமி. ஒன்றும் பேசாமல் படுக்கையில் வந்து விழுந்தான். விளக்கைக்கூட அவன் அணைக்கவில்லை.

செல்லம் சிறிது நேரத்தில் வரக்கூடும் என்று எதிர் பார்த்தான். ஆனால் வரவில்லை, கூடத்து விளக்கை அணைக்கும் ஸ்விட்ச்சின் சப்தம் கேட்டது: 'ஒரு வேளை கூடத்திலேயே படுத்து விட்டாளோ?'

கடிகாரம் மணி பன்னிரண்டு அடித்தது.

ராமசாமிக்கு அப்போதும் தூக்கம் வரவில்லை. புரண்டு புரண்டு படுத்துக்கொண்டிருந்தான்: 'நான் அப்படி என்ன சொல்லி விட்டேன். அவள் ஏன் அழுதாள்?'

அவன் சிந்தனை ஒரு நிலையிலில்லை.

## 2

ராமசாமி படித்த வாலிபன். பி. ஏ. பட்டம் பெற்றதும், இடையில் ஒன்றிரண்டு மாதகாலம்கூட வீட்டில் இராமல், கமர்சியல் டாக்ஸ் ஆபீஸில் குமாஸ்தாவாகச் சேர்ந்துவிட்டான். வீட்டிலும் வசதிகளுக்குக் குறைவில்லை, பையன் சம்பாதித்துப் போட்டுத்தான் வீட்டில் உலை யேற்ற வேண்டும் என்ற நியதி கிடையாது. மேலும், அவன் அப்பா ஒரு சர்க்கார் உத்தியோகஸ்தர். எனவே அவர் தாம் பிடிக்க வேண்டிய சிபாரிசை யெல்லாம் பிடித்து பிள்ளையை வேலையில் அமர்த்தினர். எனவே அவன் வேலையில்லாத் திண்டாட்டத்தினுல் கஷ்டப் படவோ, நாலுபேரின் தயவுக்காகக் கைகட்டி நிற்கவோ செய்யவில்லை. சுருங்கச் சொன்னுல் அவன் வாழ்க்கை அனுபவம் பெருத பள்ளிப் புள்ளி. என்ருலும், கண்டும் கேட்டும் இருந்த வாழ்க்கை அநுபவம் இருந்தது, இருந் தாலும் அவை அவனுக அநுபவியாதவை.

எனவே இந்த மாதிரி வாழ்க்கையில் அவன் லட்சியம் பேசும் நவயுவனுக இருந்ததிலும் ஆச்சரியமில்லை. தான் வாழ்வில் சுதந்திரமாகவே வாழப் போவதாகத் தன் நண்பர்களிடமெல்லாம் சொல்லி வந்தான். அது மட்டு மல்ல, தான் மணக்கப் போகும் மனைவிக்கும் சகலவித சுதந்திரங்களும் கொடுக்கப் போவதாகவும் சொல்லி வந் தான். எனவே அவனுக்கு வீட்டில் கலியாணப் பேச்சை எடுத்தபோது அவன் தனக்குப் பிடித்த பெண்ணைத்தான் கலியாணம் செய்து கொள்வேன் என்று சாதித்தான், அவனுக்குப் பிடித்த பெண் படித்த பெண்ணுக இருக்க வேண்டும். என்ருலும் படித்துவிட்டோம் என்ற கர்வத் தில் மினுக்கித் திரியும் நவநாகரிகக் கொலுப்பொம்மைகளை அவன் விரும்பவில்லை, செல்லம் அவ்வளவு படித்தவளல்ல. என்ருலும் ஹைஸ்கூல் வகுப்பு வரை தொட்டுப் பார்த் திருந்தாள். பிள்ளையின் பிடிவாதத்துக்காக, தகப்பனுர் அவனைக் கூட்டிக்கொண்டு போய் எத்தனையோ பெண்களை

யெல்லாம் காட்டினார். ஆனால், விட்ட குறையோ தொட்ட குறையோ, ராமசாமிக்கு செல்லத்தைப் பார்த்த வுடனேயே பிடித்துப் போயிற்று.

தை மாசம் கலியாணமும் நடந்தது.

கடிகாரத்தின் மணி பன்னிரண்டரை அடித்தது.

ராமசாமி மீண்டும் புரண்டு படுத்தான்: 'செல்லம் ஏன் என்னிடம் அப்படி நடந்து கொள்கிறாள்? நான் அவ ளுக்கு எவ்வளவோ சுதந்திரம் கொடுத்திருந்தும் அவள் ஏன் பணிந்து தணிந்து செல்கிறாள்? பயமா?......' அவ னுக்கு ஒன்றும் புலப்படவில்லை.

......கலியாணம் ஆன புதிதில் அந்தப் புதிய இனிய நாட்கள் அவனுக்கு புளகாங்கிதம் ஊட்டத்தான் செய்தன. அப்போது அவன் உலகத்திலுள்ள மற்றவர்களுடைய குடும்ப வாழ்க்கையையெல்லாம் எண்ணிப் பார்த்தான். 'ஒவ்வொருத்தனும் தன் மனைவியை எப்படி அடிமையாய் நடத்துகிறான்? அவளும் மனுஷிதானே! அவனுக்கு அவள் அடிமையா? பெண் ஆணுக்கு அடிமையல்ல. பின் மனைவியை ஏன் வேலைக்காரியாய் நடத்துகிறார்கள்? அடிக் கிறார்கள்? அதன் பின்னர் வாழ்க்கையிலே ஒற்றுமை இருக்குமா?... ...' ஆனால், அவன் தன் தாய்மாமன் வீட் டில் பார்த்திருக்கிறான். அத்தைக்கும் மாமனுக்கும் ஓயாச் சண்டை, சமயத்தில் அத்தையின் முதுகும் தடித்துப் போய்விடும். இருந்தாலும், அத்தையும் மாமனும் மறு கணமே அன்யோன்யமாகி விடுவார்கள். இருவரும் இது வரை ஒரு நாள்கூட பிரிந்திருந்ததில்லை. அப்படியானால், அவர்கள் இருவருக்கும் அப்படி அறுந்து போகாத பிணைப்பை ஏற்படுத்தியிருக்கும் ஒட்டுறவு எது?...... அது மட்டும் அவனுக்குப் புரியவில்லை. இருந்தாலும், மனைவியை அடிப்பது, அடிமைப் படுத்துவது எல்லாம் காட்டு மிராண்டித்தனம் என்பது அவன் அபிப்பிராயம்.

எனவே செல்லம் காலடிவைத்த நாள் முதலாக அவன் அவளுக்குத் தன் கருத்துக்களை எடுத்துச் சொன்னான்.

மனைவி என்ற காரணத்துக்காக அவளைக் கொடுமைப் படுத்தவோ, அடிமைப்படுத்தவோ செய்யப் போவதில்லை என்றும் உறுதி யளித்தான். பழைய கர்நாடகப் பாங்கின் படி அவள் தன்னிடம் நடந்து கொள்ளவேண்டும் என்றும் அவன் விரும்பவில்லை. தான் சாப்பிட்ட பிறகுதான் அவள் சாப்பிட வேண்டும் என்ற சம்பிரதாயங்களையெல் லாம் செல்லம் மறந்துவிடவேண்டும் என்றும் போதித் தான். மேலும், செல்லத்துக்கு ஏதாவது துணிமணி சாமான் எடுக்கவேண்டு மென்றாலும் அவள் இஷ்டப் படியே எடுத்துக் கொள்ளலாமென்றும், அவளது சுய நிர்ணய உரிமை எதிலும் தான் தலையிடப் போவதில்லை என்றும் அறிவித்தான். செல்லமும் எல்லாவற்றையும் 'ஊங்' போட்டுக் கேட்டுவிட்டு அதன்படியே நடப்ப தென்று தீர்மானித்தாள். 'பதிற்சொற் கடவாத பாவை' தானே அவள்! இந்த ஏற்பாடெல்லாம் குறைந்தது ஆறு மாத காலம் வரையிலும் ஒழுங்காகவே நடந்து வந்தது.

திடீரென்று ஒரு நாள் ராமசாமிக்கு திருச்சினுப் பள்ளிக்கு மாற்றுதலாகி உத்தரவு வந்தது. ராமசாமி குடும்ப சகிதம் சென்று வேலையை ஒப்புக்கொண்டான். திருச்சியிலேயே வீடு பார்த்து குடித்தனமும் பண்ண ஆரம்பித்தான்.

குடித்தனம் ஒழுங்காகவே நடந்து வந்தது. ஆனால் அவன் கொடுத்த சுதந்திரம்தான் சரிவர நடக்கவில்லை. எங்கு போகவேண்டுமென்றாலும், அவன் அனுமதியை மட்டுமின்றி, துணையையும் கோரி நின்றாள், செல்லம்.

ஒரு நாள் இருவரும் துணி எடுக்கச் சென்றார்கள். செல்லத்துக்குத்தான். கடைக்காரன் துணிகளை எடுத்துப் பரப்பினான். நீலம், மஞ்சள், பச்சை -இன்னும் எத் தனையோ வர்ணங்கள்! சிந்தாமணி, மனோன்மணி, ரேடி யோ கலவைப் பெயர்கள்! அவனுக்கு இதெல்லாம் ஒன்றும் புரியவில்லை.

செல்லம் ஒவ்வொரு துணியாகப் பார்த்துப் போட்டாள். பிறகு ஒரு துணியை எடுத்து, ''என்ன, இது உங்களுக்குப் பிடித்திருக்கிறதா?'' என்றாள்.

''நானா கட்டப் போகிறேன்? உனக்குப் பிடித்திருந்தால் சரிதான்'' என்றான் ராமசாமி.

''இதற்குத் தானா கேட்டேன்?'' என்று சலித்துக் கொண்டாள் செல்லம்.

அன்று அவள் துணி எடுக்கவில்லை. செல்லம்தான் அவசரப்படுத்தி, துணி எடுக்கக் கூப்பிட்டாள். பிறகு ஏன் அவள் துணி எடுக்கவில்லை? அவனுக்கு எதுவும் புரியவில்லை. அவள் கட்டக்கூடிய துணி எனக்கும் பிடித்திருந்தால்தான் அவள் எடுப்பாளா? அவனுக்காகவா அவள் உடுத்துகிறாள்? அவளுக்காக இல்லையா?...

கடிகாரம் மணி ஒன்று அடித்தது.

அவனுக்குப் பொய்த் தூக்கம்தான். புரண்டு படுத்தான். 'அவள் ஏன் அழுதாள்? நான் அவளை அடிமைப் படுத்தி வைப்பதுதான் அவளுக்குச் சந்தோஷமா? அல்லது அன்று கிளப்பில் நடந்த பேச்சு வார்த்தை மாதிரி, அவளுக்குத் தன் சுதந்திரத்தைக் காப்பாற்றிக் கொள்ளத் திராணியில்லையா?...'

அவனுக்கு அன்று கிளப்பில் நடந்த சம்வாதம் நினைவுக்கு வந்தது.

'சுதந்திரம் வந்தால் மட்டும் போதுமா? அதைக் காப்பாற்றுவதற்குச் சக்தி வேண்டாமா? என்று அவன் நண்பன் ஒருவன் இந்திய சுதந்திரத்தைப் பற்றிப் பேசினான்.

'சக்தியில்லை என்பதற்காக, சுதந்திரமே வேண்டாம் என்பாயா?' என்றான் ராமசாமி.

'பகீரதன் பெரும் பிரயத்தனப் பட்டுத்தான் கங்கையைக் கொண்டுவந்தான்: ஆனால் அவனுக்கு அதைத் தாங்கச் சக்தி இருந்ததா? பரம சிவன் தானே வர வேண்டி யிருந்தது!'

'புராணக் கதையை ஏன் உதாரணம் இழுக்கிறாய்? நீந்தத் தெரியவேண்டுமென்றால் நீரில் இறங்காமல் இருக்க முடியுமா? சுதந்திரம் வந்தால், தானே அதைக் காப்பாற்றவும் தெரியும். வெறுங் காற்றில் கை வீசுவதனால் சக்தி பிறந்து விடுமா?'

'இப்படியெல்லாம் பேச எனக்கும்தான் தெரியும். எந்தச் சுதந்திரமானாலும் சரி. பெண் விடுதலை, தேச விடுதலை எதுவானாலும் சரி, அதைப் பெறுபவர்கள் வந்த சுதந்திரத்தைக் காப்பாற்றத் தெரியவேண்டும். இல்லையென்றால் வந்த சுதந்திரம் வந்த வழியே போகத்தான் செய்யும்.'

'அதெல்லாமில்லை, நான் என் மனைவிக்குப் பரிபூரண சுதந்திரம் கொடுத்திருக்கிறேன். அவள் அதைக் காப்பாற்றாமலா இருக்கிறாள்?' என்றான் ராமசாமி...

ராமசாமியின் மனம் மீண்டும் செல்லத்திடம் திரும்பியது. 'அப்படியென்றால் செல்லத்துக்கு நான் கொடுத்த சுதந்திரத்தைக் காப்பாற்ற அவளுக்குச் சக்தியில்லையா?' அவனுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை.

மணி ஒன்றரை அடித்தது...

செல்லத்துக்கு மட்டும் தூக்கம் பிடித்ததா என்ன? அவளும் புரண்டு புரண்டுதான் படுத்துக்கொண்டிருந்தாள். கலியாணம் என்றவுடன் அவளுக்கு ஆனந்தம் இருந்தது போல் பயமும் இருக்கத்தான் செய்தது. 'வரப்போகும் புருஷன் எப்படிப்பட்டவரோ? தான் இனிப் பிறந்த வீட்டை மறந்துவிட வேண்டியதுதானா? அவருக்கே அடிமையாகிவிட வேண்டியதுதானா? என்றெல்லாம் அவள் பயந்ததுண்டு. ஆனால், கலியாணமான புதிதில் ராமசாமி கொடுத்த வாக்குறுதிகள் அவளுக்குத் தெம்பை அளித்தன. ஆனாலும் நடைமுறையில் மட்டும் அந்தச் சுதந்திரம் அவளுக்கு ஒத்துவரவில்லை.

அவள் மனம் அலை பாய்ந்தது: 'அவர்தானே தமக்காகக் காத்திருக்க வேண்டாம் என்றார். என் பாட்டை

பார்த்துக் கொண்டதாகச் சலித்துக் கொண்டாரே. அவரில்லாமல் நான் யார்? பின் அவர் ஏன் அப்படிப் பேச வேண்டும்?...

'கணவனும் மனைவிக்கு அடிமையல்ல; மனைவியும் கணவனுக்கு அடிமை யல்ல. ஆனால், சுதந்திரம் என்று சொல்லி இருவரும் ஒருவரையொருவர் அறியாமல் பிரிந்து தான்தோன்றியாகச் சென்றுகொண்டிருப்பதுதான் சுதந்திரமா? நான் பெண், எனக்கு அவர் துணை. அவரின்றி நான் இயங்க முடியாது. அப்படியிருக்கும்போது அவர் என்னைச் சுதந்திரமாய் விட்டுவிட்டேன் என்று சொல்லி என்னை விட்டு விலகிச் சென்றால்...

'அன்று துணிக்கடையில் துணி எடுக்கவே மனம் இல்லை. அவருக்காகத்தானே நான் இருக்கிறேன். என்றாவது என்னை 'அதைக் கட்டு, இதைக் கட்டு' என்று வற்புறுத்தி யிருக்கிறாரா? எல்லாம் நான்தான் பார்த்துக் கொள்ள வேண்டுமாம்! நல்ல சுதந்திரம்! அபிப்பிராயம் கூறுவதால் கூடவா சுதந்திரம் கெட்டுவிடப் போகிறது!

'நான் அவருக்கு அடிமையாக வேண்டாம். ஆனால், அவரது அன்புக்கு நான் அடிமையாகத்தான் வேண்டும். என்னை நான் அவருக்கு அடிமைப் படுத்த எண்ணும் போதெல்லாம் அவர் ஏன் விலகி ஓடுகிறார்?...

'அடிமையாவதில் ஒரு இன்பமா?... இன்பம் இருப்பதாகத்தான் எனக்குத் தெரிகிறது. பக்தர்கள் அடியார்க்கு அடியாராக இருப்பதால்தானே கடவுளுக்குப் பாத்திரமாகிறார்கள். இல்லறத்தில் ஒருவருக்கொருவர் அடிமையானால் தானே ஆனந்தம் பிறக்கும். அந்த அடிமை ஆதிக்கத்தினால் வரக்கூடாது; அன்பினால் வரவேண்டுமா? அன்புக்கு அடிமையா?...அப்படியென்றால் அவருக்காக நானும் எனக்காக அவரும் வாழ்வதுதான் சுதந்திரமா?...

'இப்போது அப்படியா வாழ்கிறோம்? நான் நானாக வாழ முடிய வில்லையே! அவராவது அவராக வாழ்கிறாரா?'

செல்லம் மீண்டும் புரண்டு படுத்தாள். மணி இரண்டு அடித்தது. தூக்கம் பிடிக்கவில்லை.

3

ராமசாமி இரண்டரை மணி அடிக்கும் வரை அப்படியே கிடந்தான். அதற்கு மேலும் அவனால் கிடக்க முடியவில்லை.

'செல்லம் தூங்கியிருப்பாளோ?'

அவள் முனகி முனகிப் புரள்வது அவன் காதில் விழுந்தது. தூங்கவில்லை என்று நிச்சயித்துக் கொண்டான். மெதுவாக எழுந்து கூடத்துக்குச் சென்றான்.

செல்லம் வெளி முற்றத்தில் தலைக்குத் தலையணைகூட இல்லாமல் முந்தானையை விரித்துக் கையை அணைகொடுத்துப் படுத்திருந்தாள். ராமசாமி அவள் பக்கம் சென்று உட்கார்ந்து தலையை மெதுவாகத் தடவிக் கொடுத்தான்.

''செல்லம்!''

அவள் லேசாக முனகினாள்.

''இதற்கெல்லாம் அழுவார்களோ? நான் உன்னை என்ன செஞ்சிட்டேன். அடித்தேனா? இந்த வார்த்தைக்கு இப்படி அழுதால்—'' என்று இழுத்தாற்போல் பேசினான்.

செல்லத்துக்கு என்ன தோன்றியதோ தெரியவில்லை. பொங்கி வந்த அழுகையை அடக்க முடியாமல் ராமசாமியின் மடியில் குப்புறப் படுத்து தலையைப் புதைத்துக் கொண்டு அழ ஆரம்பித்து விட்டாள்.

ராமசாமியின் உடம்பு பதறியது. ''உனக்கு நான் என்ன குறைவு செய்தேன்? சகல சுதந்திர பாக்கியத்துடன்தானே பராமரித்து வருகிறேன்'' என்று மெதுவாகச் சொன்னான்.

''உங்கள் சுதந்திரமே எனக்கு வேண்டாம்.''

‘‘என்ன?’’ என்று விழித்தான் ராமசாமி.

‘‘நான் உங்கள் அடிமை. ஆமாம். உங்களுக்கு நான் அடிமை’’ என்று வெடித்துக்கொண்டு சொன்னாள் செல்லம்.

‘‘அடிமையா?’’

‘‘ஆம். உங்கள் அன்புக்கு நான் அடிமை; உங்கள் லட்சியத்துக்கு அல்ல’’ என்றாள் செல்லம்.

‘‘நீ சொல்வது...’’ என்று இழுத்தான் ராமசாமி.

‘‘என்னை உங்கள் மனைவியாக நடத்துங்கள்!’’ என்று கத்தினாள் செல்லம்.

ராமசாமி ஒரு கணம் திகைத்து உட்கார்ந்திருந்தான். மறுகணம் அவனுக்கு ஏதோ உண்மை புலப்பட்ட மாதிரி இருந்தது:

‘என் லட்சியம் எதிர்காலக் கனவு; செல்லம் கடந்த கால கலாசாரத்தில் ஊறிப்போன பாரதப் பெண். இதுவோ நிகழ்கால நடைமுறை. அப்படியானால், நான் இன்றைய நடைமுறைக்குத் தக்கவாறு இறங்கிவர வேண்டுமா? அப்போதுதான் செல்லம் முன்னேற முடியுமா? முன்னேறி என்னை எட்டிப் பிடிக்க முடியுமா?...’

அன்று முதல் செல்லம் ராமசாமி வரும் வரை சாப்பிடுவதும் இல்லை. ராமசாமியும், ‘செல்லம் இன்னும் சாப்பிடாமல் இருப்பாளே’ என்ற தவிப்போடு நேரத்தோடேயே வீட்டுக்கு வரத் தவறுவதும் இல்லை.

1950

# மாயை

## 1

கொக்கிரகுளம் சப்ஜெயில் சேகண்டி பன்னிரண்டு மணி அடித்தது.

அந்த இடமே பயங்கரமானதுதான். 'பிள்ளையைப் போட்டு பிலாப்பழம் எடுத்த ஓடை'ச் சரிவில் உள்ள அடவிப் பிராந்தியம் அது. அங்கு வானுயர்ந்த பல சாதி மர வர்க்கங்களும் அர்ச்சுனன் வகுத்த சரக்கூடம் போலப் பின்னி நிற்கும். அந்த இடம் பேய் பிசாசுகளுக்குப் பெயர் போனது. அயலூர்க்காரன்கூட அந்த அடவியின் நெருக்கத்தைக் கண்டு அஞ்சுவான். அந்தத் தோப்பின் மேலாக ஓடும் ஐரோட்டுத் திருப்பத்தில் போக்குவரத்து விபத்துக்கள் அதிகமானதால், அங்கு துர்மரணப் பைசாசங்களின் ஆதிக்கம் உண்டு என ஊரிலே பேச்சுப் பிரபலம்.

ஆகவே அவன் மனசிலும் பயம் குடியேறியிருந்ததில் வியப்பில்லை. பயந்து பயந்து அவன் அந்த இடுகாட்டுப் பிராந்தியத்தில் அலைந்து கொண்டிருந்தான். அவன் மனசிலே ஒரே ஒரு எண்ணம்: 'அவள் வந்துவிட்டால்—?'

வான மண்டலம் கலக்கிவிட்ட சேற்று நீரைப் போல, இருண்டு கிடந்தது. மேகக் கூட்டத்துக்கு மேலாக எங்கோ கிணற்று விளக்காகத் தெரியும் சோனி நிலவின் பசப்பொளியில் மேகத் திரளின் கர்ப்போட்டம் அசைவு காட்டியது. வடிகட்டப் பெற்ற சோகை நிலவொளியில் எதுவுமே தெளிவாகத் தெரியவில்லை. தூறல் வேறு பிசு பிசுத்துக் கொண்டிருந்தது.

இடுகாட்டில் சமாதிக் கற்கள் குத்துக் குத்தாக நின்றன. அந்த இருளில், வெள்ளையடிக்கப் பெற்ற அந்தக் கற்கள் உயிர் பெற்று அவனைச் சூழ்ந்து மெது மெதுவாக நடந்து வருவதாக ஒரு பிரமை; அது வெறும் பிரமை என்ற பிரக்ஞை அவனுக்கு இருந்தாலும், பயத்தின் நாடித் துடிப்பை அவனால் சமனப்படுத்த முடியவில்லை. ஆகவே அவை கற்கள்தான் என்று மனப் பிராந்திக்கு சூடு கொடுக்கும் தன்மையில் அவனும் அந்தக் கற்களை நோக்கி நடந்தான். நிலவொளியில் அந்தச் சமாதிக் கல்மீது செதுக்கப்பட்டிருந்த வரிகள் கண்ணில் பட்டன.

## ஸ்ரீமதி கற்பகத்தம்மாள்

### தேக வியோகம்: 1112 தைமீ 4-ம் தேதி

அவனுக்குத் திக்கென்றது. அன்றைக்கும் தை மாதம் நாலாம் தேதியேதான். பெயரும் கூடப் பொருந்தியிருந்தது. ஆனால் இந்தக் கற்பகம் வேறு. அவன் எதிர்பார்த்திருந்த கற்பகமோ மண்ணுள் புதைந்து கிடக்கும் கற்பகம் அல்ல; மணமகள் கற்பகம். அவன் காதலி!

அவன் மனசைத் தேற்றிக்கொண்டு மீண்டும் உலவ ஆரம்பித்தான்.

தூறல் பிசுபிசுத்தது. தவளைகள் முனகின. மருத மரக் கிளையில் ஒரு கோட்டான் சிறகடித்துக் குழறிக் கூவியது. எங்கிருந்தோ ஒரு கரு வண்டு கிர்ரென்று இரைந்து கொண்டு அவன் முகத்தில் மோதியடித்துக் கீழே விழுந்தது.

'சீ' என்று அவன் அதை உதறியடிக்கும்போது, அந்தச் சிரிப்புச் சத்தம் கேட்டது.

அவன் திரும்பினான்.

ஓடையோரமாக ரோட்டுச் சரிவில் பட்டுப் போய் மூளியாய் நின்ற மருத மரக் கிளைகள் குரக்கு வலித்த பைசாசக் கரங்களைச் சுருக்கி நிற்பதுபோலத் தோற்றமளித்தது.

மீண்டும் சிரிப்பு. நரம்புக் குருத்துக்குள் பனிபெய்த மாதிரி ஜுரச் சிலிர்ப்பை யூட்டும் லாகிரிச் சிரிப்பு.

அவள் அந்தக் குத்துக் கல்லின்மீது அட்டணைக்கால் போட்டு உட்கார்ந்து சிரித்துக் கொண்டிருந்தாள்; வெள்ளை வெளேரென்று பாலில் தோய்த்த மாதிரி ஒரு புடவை; மற்றப்படி அவளது முகராசியே போதும். ஆளை உருக்கும் கொள்ளைச் சிரிப்பு; உதட்டில் ரத்தச் சிவப்பு!

''யாரது?...யாரங்கே?''

மீண்டும் அதே சிரிப்பு. அவனுக்கு உள்ளூர பயம். பேயோ பிசாசோ என்று ஒரு அரிப்பு. மீண்டும் கேட்டான்.

''கற்பகமா?''

''நானேதான்.''

அப்போது விழுந்த நிலவுத் துண்டத்தில் அவள் முகம் நன்ருகத் தெரிந்தது. கற்பகம்தான். அவளை நோக்கிக் காலடி எடுத்து வைத்தான். காலடியில் ஏதோ 'கடக்' கென்றது. குனிந்து பார்த்தான். அது ஒரு மண்டை யோடோ, நண்டுக் கூடோ?

அவளும் அதற்குள் ஆற்றங்கரைப் படிகளின் வழியே அவனை நோக்கி நடந்து வந்தாள். மெட்டி ஓசை கலுக் கலுக் கென்றது.

''கற்பகம், நீ எப்போது வந்தாய்?''

''இப்போதுதான்.''

''கிளம்பலாமல்லவா?''

''ம்.''

''சரி, நீ தூங்கவே இல்லையா?''

''எனக்கா—தூக்கமா?''

அவன் அவள் கையை எட்டிப் பிடித்தான்; கை சில்லிட்டது.

''உன் கை ஏன் இப்படிக் குளிர்ந்திருக்கிறது?''

"என் கையா? இல்லையே. உங்கள் கைதான் அப்படி" என்றாள் அவள். சிரித்தாள். அவன் ஏனோ நடுங்கினான்.

ஆற்றுக்கு அப்பாலுள்ள பனங்காட்டுச் சுடலையில் ஒரு பிணம் பஞ்சவர்ணக் கோலமிட்டு புகை திரித்து எரிந்தது. உடல் வெடித்துப் பாயும் நிண நெய் சுடர்விட்டு நின்று எரிந்தது. பிண மூட்டத்தைக் கிளற முடியாமல் சுற்றிச் சுற்றி ஒரு நரி ஊளையிட்டது.

அவன் அவள் கையை இறுகப் பற்றினான்.

சிலுசிலுத்த பனிக்காற்றில் புளியம் பூக்கள் தலைமேல் உதிர்ந்து விழுந்தன.

"நமக்குப் பூமாரி பெய்கிறது, பார்த்தீர்களா?"

"பூமாரியா? புளிய மரத்தில் பிசாசுதானே குடியிருக்கும்" என்றான். பிசாசு என்னும்போதே அவன் விரல்கள் நடுங்கின.

"ஏன்? பிசாசு என்றால் உங்களுக்குப் பயமா?"

"யாருக்குத்தான் பயமில்லை?"

"எல்லாப் பிசாசுகளுமா அப்படி? மோஹினிப் பிசாசுகளும் அப்படியா?"

"சரி சரி, போதுமே ஆராய்ச்சி. இடம், பொருள், ஏவல் தெரியாமல். கிளம்பு, கிளம்பம்மா தாயே."

அவர்கள் புறப்பட்டனர். ஒரு மர நாய்குட்டி அடி வயிற்றுக் குரலில் ஊளையிட்டுக் கொண்டு அவர்களுக்குக் குறுக்கே விழுந்து ஓடியது.

## 2

செல்லப்பாவுக்குச் சொந்த ஊர் அம்பாசமுத்திரத்தை அடுத்த பிரம தேசம். தீர்த்தபதிக் கலாசாலையில் பள்ளிப் படிப்பை முடித்து விட்டு கொக்கிரகுளம் டிஸ்டிரிக் கோர்ட்டில் குமாஸ்தா வேலை பார்த்துக் கொண்டிருந்தான். கொக்கிரகுளத்தில் வேலை; வண்ணார்பேட்டையில் ஜாகை.

வண்ணார்பேட்டையில் அவன் குடியிருந்த இடத்துக்கும் அவனது தாய் மாமன் வீட்டுக்கும் ஒரு பர்லாங் தூரம்கூட இல்லை யென்றாலும், குடும்பப் பகை காரணமாக அவன் ஜாகை தனியாகவே இருந்தது. அவன் வீட்டுக்கும் அவர் வீட்டுக்கும்தான் பகையே ஒழிய, அவனுடைய கொழுந்தி யாளான கற்பகத்துக்கும், அவனுக்கும் பகையே இல்லை. செல்லப்பாவோ கற்பகத்தைத்தான் கலியாணம் பண்ணு வது என்று வைராக்ய சித்தனாயிருந்தான். ஆனால் அது அவன் கைக்குள்ளடங்கிய விஷயம் அல்லவே! எனினும் பேராச்சி யம்மன் கோயில் படித்துறை அந்தக் காதலர்களுக்கு ஒரு சந்தர்ப்பத்தை சிருஷ்டித்துக் கொடுத்தது. கற்பகம் விடியு முன்னரே அங்கு குளிக்க வருவாள். செல்லப்பா தற்காலக் கல்லூரிச் சரக்கேயாயினும், விடியுமுன்னர் ஸ்நானபானக் கடனை முடித்து விடுவான். ஆகவே இருவரும் ஆளரவம் அற்ற குமரியிருட்டில் சந்திப்பதற்கு வசதி கிடைத்தது. சந்தித்தனர்; காதல் வளர்ந்துவிட்டது! ஆனால் காதல் வேறு, கலியாணம் வேறு அல்லவா? ஆகவே, கற்பகத்துக்கு வேறொரு இடத்தில் பேச்சு வார்த்தை நடந்து வெற்றிலை யும் கைமாறிவிட்டது. இன்னும் ஒரு வார காலத்தில் கலியாணம். ஆகவே அவர்கள் இருவருக்கும் ஒரே ஒரு வழி தான் தென்பட்டது.

தை மாதம் நாலாம்தேதி இரவு இருவரும் ஓடிப் போய் விடுவது என்று தீர்மானம். அதன்படியேதான் எல்லாம் நடந்தது.

## 3

கற்பகம் செல்லப்பாவின் திட்டப்படியே ஸ்ரீமதி செல் லப்பா ஆகிவிட்டாள். எனினும் செல்லப்பாவுக்கோ உள்ளூர பயம். ஊரிலே மணப் பெண்ணைக் காணவில்லை என்ற பரபரப்பில் பெண்ணைத் தேடும் வேட்டை நடக்கும்; பத்திரிகையில் செய்தி வரும்; ஒரு வேளை இருவரும் கையும் மெய்யுமாக அகப்படக் கூடும். அப்படி அகப்பட்டால்,

என்ன பண்ணுவது? எப்படியும் கற்பகம் மேஜரான பெண்; அவள் இஷ்டப்படி யாரையும் திருமணம் புரிந்துகொள்ள உரிமை உண்டு. இருந்தாலும் அவளுக்கு மனத்திடம் குறைந்தால் — என்றெல்லாம் செல்லப்பாவுக்குப் பலவாருகச் சிந்தனை ஓடியது.

ஆகவே தினம் தினம் ஏதோ ஒரு ஆபத்தை எதிர் பார்ப்பது போல் அவன் விழித்தெழுவான்; காலைச் சூரிய ஒளியில் ஜன்னல் வழியே விழுந்து கிடக்கும் தினசரிப் பத்திரிகையைப் பரபரவெனப் புரட்டிப் பார்ப்பான். ஆனல், அவன் அதிலோ எந்த விதச் செய்தியையும் காணவில்லை.

கடைசியில் கற்பகத்துக்கு அவளது பெற்ருேர் குறிப் பிட்ட திருமணத் தேதியும் வந்து போயிற்று. திருமணம் நடந்தாலல்லவா செய்தி வரும்? ஒரு வேளை பெண் காணுமற் போன விஷயத்தை கமுக்கமாக மூடி வைத்திருக்கிருர்களோ என்று கருதினுன் செல்லப்பா. இருந்தாலும் முழுப் பூசணிக்காயைச் சோற்றில் அமுக்க முடியுமா? அவன் எதுவுமே புரியாமல் திகைத்துக் கொண்டிருந்தான்.

''என்ன? எப்ப பார்த்தாலும் இப்படி பிரம்மஹத்தி பிடித்த மாதிரியே இருக்கியளே, என்னேடே பேசப் பிடாதா?'' என்று கற்பகம் ஒரு கப் காப்பியை நீட்டிக் கொண்டே அவன் பக்கம் நெருங்கி வந்தாள்.

''இந்தா பாரு, கற்பகம். நம்ம விஷயமா இன்னும் ஒண்ணும் தெரிந்த பாடில்லையே என்றுதான் கவலை'' என்று ஆரம்பித்தான் செல்லப்பா.

''உங்களுக்கேன் அந்தக் கவலை? உங்களுக்கு நான்தானே வேண்டும். நானே வந்தாச்சு'' என்று சொல்லிவிட்டு, சிரித்துக் கொண்டே ''ஒரு வேளை அதே முகூர்த்தத்திலேயே வேறு யாரையாவது பார்த்து திருமணம் நடத்தியிருக்க லாமல்லவா?'' என்ருள் கற்பகம்.

அதைச் சொல்லிவிட்டு கற்பகம் கொல்லென்று சிரித்தாள்.

அவனுக்கு நரம்புக் கால்களெல்லாம் சிலிர்த்தன.

''கற்பகம், ஏன் இப்படிச் சிரிக்கிறே? உன் சிரிப்பு என்னை என்னவோ பண்ணுகிறதே. எங்கிருந்து வந்ததடி, இந்தப் புதிய சிரிப்பு?''

''அப்படியானல் நான் சிரிக்கக் கூடாதா? அழட்டுமா?''

அவள் மீண்டும் சிரித்தாள்.

அவனுக்கு அந்தச் சிரிப்பைத் தாங்க முடியவில்லை. அதில் மோகன லாஹிரி பொங்கியது என்பதை அவனும் உணரத்தான் செய்தான். எனினும், அதில் இருந்த வேதனை!

அவர்கள் இருவரும் இப்படிப் பேசிக்கொண்டிருக்கும் போதே, பத்திரிகைப் பையன் அன்றைய தினசரியை ஜன்னல் வழியே விட்டெறிந்து விட்டுப் போனுன்.

செல்லப்பா பத்திரிகையைப் பாய்ந்து எடுத்து விறுவிறு என்று புரட்டினுன். அவன் மனம் திடுக்கென ஒரு கணம் ஸ்தம்பித்து உலுங்கிற்று. அவன் அந்தச் செய்தியைப் படித்தான்:

செல்வி கற்பகாம்பாளுக்கும், செல்வன் சீனுவாசனுக்கும் வண்ணூர்பேட்டையில் பெண் கிரகத்தில் சகல வைபவங்களுடனும் திருமணம் சிறப்பாக நடந்தேறியது என்று இருந்தது. அது மட்டுமல்ல. மாலை சூடிய தம்பதிகள் இருவரின் புகைப்படமும் பக்கத்திலே காணப்பட்டது!

''கற்பகம்! என்ன இது?'' என்று திகைத்துப்போய்க் கேட்டான்.

அவளும் அதைப் பார்த்துவிட்டுச் சிரித்தாள்.

''சிரிக்காதே. இதற்கு என்ன அர்த்தம்?''

''என்னைக் கேட்டால்?''

''அப்போது இந்தச் செய்தி?''

''பொய்யாயிருக்கலாம்.''

''பொய்யா? நீயா, அவளா?''

''இதோ உங்களெதிரில் கல்மாதிரி நிற்கிறேனே, உங்களை யுகக்கணக்காய் காதலித்துக்கழுத்தையும் கொடுத்து விட்டு நான்தான் பொய்யாகி விட்டேன். அப்படித்தானே!'' என்று கூறிவிட்டு அவள் கேவிக்கேவி அழ ஆரம்பித்தாள்.

அவனுக்கு எதுவுமே புரியவில்லை.

''இந்தா பாரு, கற்பகம், அழாதே. நீ அழுதால் எனக்குப் பைத்தியம் பிடித்துவிடும்'' என்ருன். பிறகு அவளைச் சமாதானப்படுத்த முடியாமல் எழுந்து வாசல் நடைக்கு வந்தான்.

அவன் வாசலுக்கு வரவும், வாசல் நடைக்கு அந்தப் பரதேசிச் சாமியார் வருவதற்கும் சரியாக இருந்தது.

வந்தவன் பும்பூம் எனச் சங்கையும் முழக்கி, சேகண்டியையும் அடித்துக் கொண்டே, ''ஏ, சாமி உன்னை மோகினிமாயை புடிச்சிருக்கு. ஒரு பொண்ணு ஒம்மனசை ஆட்டு ஆட்டுன்னு ஆட்டிவைக்கிரு. அந்த மகாலெச்சுமி...'' என்று ஏதேதோ சொல்ல ஆரம்பித்தான்.

''அட, சரிதாம்ப்பா போ'' என்று எகத்தாளமாய்ச் சொன்ஞன் செல்லப்பா.

''என்னை விரட்டாதப்பா. விரட்ட வேண்டியதை விரட்டு'' என்று கூறிக்கொண்டே, தனது சம்புடத்திலிருந்து கொஞ்சம் சாம்பலை எடுத்து, ''இந்தா இதைப்பிடி. இது சுடுகாட்டு முண்டன் பிரசாதம். உனக்கு எதுவும் வராது'' என்று நீட்டினுன்.

இந்த விவகாரத்திலெல்லாம் நம்பிக்கை யில்லாதவனு யினும் செல்லப்பாவின் கை ஏனே நீண்டது.

விபூதியை வாங்கிக்கொண்டான்.

## 4

கற்பகமும் செல்லப்பாவும் ஒன்ருய்த்தான் வாழ்ந்து வந்தார்கள்...அன்றிரவு செல்லப்பாவுக்கு ஏனே தூக்கம் பிடிக்கவில்லை. வெகு நேரம் புரண்டு கொடுத்து விட்டு

அப்போதுதான் தூங்க ஆரம்பித்தான். நல்ல தூக்கம். திடீரென்று அவன் விலாவில் யாரோ ஓங்கிக் குத்தி வாங்குவதாக ஒரு வலி; ஒரு உணர்ச்சி. திடுக்கிட்டு எழுந்தான்.

''கற்பகம், கற்பகம்!''

அவளை உசுப்பினான்.

அவள் முனகிக் கொண்டே எழுந்திருந்தாள்.

''இந்தா விளக்கைப்போடு.''

விளக்கேற்றப் பட்டதும் அவன் தன் விலாவைத் தொட்டுப் பார்த்தான். கையில் ஈரக்கசிவு தட்டுப்பட்டது. வெளிச்சத்தில் பார்த்தான். அது ஒரு துளி பச்சை ரத்தம்!

''என்ன இது? ரத்தம் ஏது?'' என்று அவனாகவே கேட்டுக் கொண்டான்.

''ஏதாவது கொசு—இல்லை—மூட்டையாக இருக்கும்'' என்றாள் அவள்.

''இருந்தாலும் இந்த வலியா வலிக்கும்?''

''சொப்பனம் கண்டிருப்பீங்க; படுத்துத் தூங்குங்க'' என்று சொல்லிச் சிரித்தாள் கற்பகம்.

அவனுக்கு அந்த இரவில் அந்தச் சிரிப்புத்தான் விலாவில் குத்தி வாங்குவதாகப் பட்டது. அதைக் காணச் சகிக்காதவனாய் உடனே விளக்கை அணைத்தான்.

விளக்கு அணைந்து இருள் கவிந்தவுடன் திறந்து வைத்த ஜன்னல் வழியாக ஏதோ நறுமணம் மிதந்து வந்தது. சண்பகமா, மனோரஞ்சிதமா? பக்கத்தில் எந்தப் பூ மரமும் இல்லையே. ஏது இந்த வாசனை?......

எங்கிருந்தோ ஒரு சுவர்க்கோழி கிரிக்கிரிக் கென்று இரவின் அமைதியைக் குலைத்தது. அறைக்குள் அகப்பட்டுத் திசை தெரியாமல் தவிக்கும் ஒரு வௌவால் சுவரில் மோதி மோதி விழுந்தது.

அவனுக்கு மீண்டும் தூக்கம் பிடிக்கவில்லை. புரண்டு புரண்டு படுத்தான். காலையில் அவன் எழுந்திருக்கும் போது, சூரிய ஒளி அவன் முகத்தில் சுள்ளென்று உறைத்தது.

காபி சாப்பிடலாம் என்று அடுப்பங்கரைப் பக்கமாய்ப் போனான். அங்கு அவன் கண்ட காட்சி!...

அடுப்பில் மதமதவென்று தீ எரிந்தது; சட்டியில் வெந்நீர் கொதித்தது. எனினும் அடுப்பில் விறகு எரியவில்லை. கற்பகம் தன் காலைத்தான் நெருப்பில் தூக்கிப் போட்டு குளிர் காய்ந்து கொண்டிருந்தாள்! அவளது வலது கை நீண்டு வளர்ந்த கேச பாரத்தைச் சிக்கெடுத்துக் கொண்டிருந்தது. அந்தச் சிணுக்கு வலி! அது ஓர் எலும்பு; விலாவெலும்பு!

அவன் பதறிப்போய், "கற்பகம்!" என்று அலறினான். அப்போது அவன் இடுப்பில் லேசாக வலி தோன்றியது.

அவள் சிரித்துக்கொண்டே திரும்பினாள்.

"என்ன இது!" என்றான் அவன்.

"எது?"

"நீ ஏன் அடுப்பில் காலைப் போட்டிருந்தாய்?"

"அடுப்பிலா? தூக்கக் கலக்கத்தில் உங்களுக்கு அப்படித்தான் தோணும். ஒரு கப் காபி சாப்பிட்டுவிட்டு கண்களைத் திறந்து பாருங்கள்" என்று சொல்லிச் சிரித்தாள்.

அந்தச் சிரிப்பு அவன் குடலை மீண்டும் உருவியது.

"சிரிக்காதே, சிரிக்காதேன்னு எத்தனை தரம் சொல்றது?" என்று எரிந்து விழுந்து கொண்டே கூடத்துக்கு விரைந்தான்.

அவனுக்கு எதுவுமே புரியவில்லை. திகைத்தான். இதெல்லாம் வெறும் மனப்பிரமையா அல்லது...

அவனால் எதுவும் வெளியில் சொல்ல முடியவில்லை. மானத்துக்கு ஆபத்து நேர்ந்ததாகக் கனவு கண்ட மங்கையைப்போல் தனிமையில் உள்ளுக்குள் உருகினான். நாளடைவில் அவன் உடம்பு வற்றி மெலிந்து போயிற்று. அவனுக்கு எதிலும் உற்சாகமில்லை. இரவில் திடுக்கிட்டுத் திடுக்கிட்டு விழித்தெழுந்தான்.

எனினும் கற்பகமோ கொஞ்சம் கூடக் கவலையற்று இருந்தாள். முகத்தில் எப்போதும் அந்தக் குறுஞ் சிரிப்பு; ஆளைக் கொல்லும் மோகினிச் சிரிப்பு.

ஒரு நாள் அவனே துணிந்து கேட்டு விட்டான். ''நான் துன்பப்படுவதைப் பார்த்து உனக்கு ஏனோ இந்தச் சிரிப்பு? தயை செய்து சிரிக்காமல் இரேன்!'' என்று கூறிவிட்டு ''நீ யார்? என்னை ஏன் கொல்லுகிறாய்?'' என்று துணிந்து கேட்டான்.

''உங்களுக்குச் சித்தப் பிரமையா என்ன? நானும் மனுஷிதான்!'' என்றாள் அவள்.

அவனுக்கு உண்மையிலேயே சந்தேகம் உண்டாகி விட்டது: 'எனக்குத்தான் ஒரு வேளை பைத்தியம் பிடித்திருக்கிறதோ?'

## 5

அவனுக்கு அந்த ஊரில் இருக்க நிலை கொள்ளவில்லை; ஒருநாள் ''கற்பகம், வாயேன் ஒரு தடவை ஊருக்குப் போய்விட்டு வரலாம்'' என்றான்.

''எந்த ஊருக்கு?''

''பிரம தேசத்துக்குத்தான்''

அவர்கள் இருவரும் மீண்டும் தெற்கு நோக்கிக் கிளம்பி, திருநெல்வேலி வந்து சேர்ந்தார்கள். அன்றிரவு திருநெல்வேலியில் தங்கிவிட்டு, காலை எட்டரை மணி வண்டிக்கு அம்பாசமுத்திரத்துக்கு டிக்கெட் எடுப்பதாகத் தீர்மானித்தார்கள்.

திருநெல்வேலியில் தங்கியிருந்த அன்று, அவனுக்கு தாமிரபருணி யாற்றில் குளிக்கவேண்டும் என்று சபலம் தட்டியது. வழக்கம்போல, காலையில் எழுந்து விடிவதற்கு முன் ஆற்றங் கரைக்குச் செல்ல முனைந்தான். கற்பகமும் உடன் கிளம்பினாள்.

இருவரும் பேராச்சியம்மன் துறைக்கு குமரியிருட்டில் வந்து சேர்ந்தார்கள். சீக்கிரமே குளித்து விட்டால், காப்பி பலகாரம் ஆனதும் ரயில் ஏற வசதியாயிருக்கும் என்ற நினைப்பு.

இருவரும் தாமிரபருணி நீரில் குளித்தார்கள். தேக நிலை காரணமாக, செல்லப்பா விரைவில் கரையேறி விட்டான். கற்பகமோ ''அப்பா! இந்த நீரில் கும்மாளம் போட்டு எத்தனை நாளாகிறது? நீங்கள் கரையிலேயே இருங்கள். நான் கூடக் கொஞ்சநேரம் குளிக்கிறேன்'' என்று சொல்லிக் கொண்டே நீந்தினாள். விராலைப் போலத் துள்ளிப் பாய்ந்தாள்.

அவன் கரையிலிருந்தவாறே அவள் குளிப்பதைக் கவனித்துக் கொண்டிருந்தான்.

கலுக் கலுக்கென்ற மெட்டியோசை கேட்டுத் திரும்பினான். யாரோ வந்து கொண்டிருந்தார்கள். இடுப்பில் ஒரு குடம்; தோளில் துவைப்பதற்காக ஒரு சேலை. அவன் கூர்ந்து பார்த்தான்; அதற்குள் அவளே நெருங்கி வந்து விட்டாள்.

''அத்தான்!''

மங்கிய நிலவொளியில் இருவரும் ஒருவரை ஒருவர் அடையாளம் கண்டு கொண்டனர். அவள் கழுத்தில் தங்கத் தாலி மின்னியது.

''யாரது? கற்பகமா?''

அவனுக்குத் திடுக்கிட்டது; உடம்பு புல்லரித்தது.

இருவரும் ஏதேதோ பேசினார்கள்.

“என்னை வரச் சொல்லிவிட்டு ஏமாற்றி விட்டீர்களே, அத்தான்! நான் வழக்கம் போல் விடியற்காலம்தான் வர முடிந்தது. உங்களைக் காணும். எப்படியோ நமது திட்டம் பொய்த்து விட்டது. அது யார் தண்ணீருக்குள்? அக்காளா?...” என்று அவள் ஏதேதோ சொல்வதற்குள் அவன் கண்கள் இருண்டன. நாக்கு கட்டுவது போலிருந்தது.

“கற்பகம், ஏமாந்து விட்டேனே!” என்று சொல்லிக் கொண்டே அவளை எட்டிப் பிடிக்கப் போனான். அவள் விலகினாள். கால் வழுக்கிக் கீழே விழும்வரை அவனுக்குப் பிரக்ஞை இருந்தது.

கீழே விழும்போது கலுக் கலுக்கென அவள் படியேறி வரும் ஓசை அவன் காதில் கடைசியாகக் கேட்டது!

6

மறுநாள் காலையில் வெளிறிப்போன சவம் ஒன்று ஆற்றங்கரையை அடுத்த அடவியில் காலைக் கடன் கழிக்க வந்தவர்களால் கண்டு பிடிக்கப்பட்டது. வேட்டியிலே ரத்தக்கறை; குரக்கு வலித்த முகம்; பிதுங்கிய கண்கள்: ரத்தத்தை முறுக்கிப் பிழிந்தெடுத்த வெளிறிய சவப் பிண்டம்!

“சின்னஞ் சிறுசுகள் பார்த்து நடமாட வேண்டாம்? மோகினிப் பிசாசு தான் அடிச்சிருக்கும்” என்று கூட்டத்தில் யாரோ சொன்னார்கள்.

அந்தப் பிணத்தைத் துணியால் இழுத்து மூடுவதற்குக் கூட ஒருவனும் துணிந்து முன்வரவில்லை!

1948

# ஆள வந்தான்

**கள்ள மார்க்கெட் ஒழிக!**

**பதுக்கல்காரனைச் சிறையிலடை!**

என்றெல்லாம் தொண்டை கிழியக் கோஷமிட்டுக் கொண்டு சென்றது, ஒரு ஊர்வலம். அன்று ஆகஸ்ட் இருபத்து மூன்றாம் தேதி. சுதந்திரம் வந்து பத்து தினங்கள்கூட ஆக வில்லை. அதற்குள் நெல்லை ஜில்லாவில் பட்டினிப் பட்டாளம் திரண்டுவிட்டது. ஊரிலே பல ரேஷன் கடைகள் திறக்கப்பட வில்லை; ரேஷன் கடைக்காரர்கள் கடையைத் திறந்து வைத்துக்கொண்டு, ஈ விரட்டத் தயாராயில்லை. வயிற்றுக்கு உத்தரவாதம் அளித்த ரேஷன் கார்டுகள் வலியிழந்து விட்டன. பஞ்சம் பல்லிளித்தது! 'பொன் திணிந்த புனல் பெருகும் பொருநை யாற்றங்கரையிலே' பஞ்சம்!......

**கள்ள மார்க்கெட் ஒழிக!**

**பதுக்கல்காரனைச் சிறையிலடை!**

அனவரத விநாயகம் பிள்ளையின் வீட்டுப் பக்கம் வந்ததும் அந்தப் பட்டினிப் பட்டாளத்தின் குரல் உச்ச ஸ்தாயியை அடைந்தது. உரக்கக் கோஷமிட்டுவிட்டு, அவர் வீட்டு நடையில் காறி உமிழ்ந்து விட்டுச் சென்றார்கள், மக்கள்.

உள்வீட்டு முற்றத்திலே, ஈஸிசேரில் சாய்ந்துகொண்டு பக்பக்கென்று மணிலாச் சுருட்டை இழுத்துக் கொண்டிருந்த பிள்ளையவர்களின் காதிலும், அந்தக் கோஷங்கள் விழுந்தன. சுருட்டைக் கவ்வியிருந்த உதட்டுக் கோணத்தில் ஒரு விகார மான புன்னகை விரிந்து வதங்கியது.

''சாவுறதுக்குப் பள்ளிவாசல் இல்லாத பயலுக, நாய்களுக்கு—குலைக்கத்தான் தெரியும்!'' என்று தமக்குள் முனகிக் கொண்டார். அவருடைய எண்ணத்திலே இடி விழுந்தது மாதிரி, வழுக்கை விழுந்த உச்சந்தலையிலே ஒரு சொட்டு மழைத் தண்ணீர் விழுந்தது. இடியும் இடித்தது.

வானத்தை அண்ணாந்து பார்த்தார்.

சூலுற்ற கருமேகங்கள் கூடிக் குமுறிக் கறுத்துக்கொண்டிருந்தன. மழைக்கு ஆரம்பமாக ஒன்றிரண்டு துளிகளும் விழுந்தன.

உடனே முற்றத்தைவிட்டு எழுந்து, தாரிசாவுக்குச் சென்று சாய்ந்து கொண்டார். 'மளெ வார மாதிரியிருக்கே. இன்னம் ராசையா பள்ளிக்கூடத்திலிருந்து வரக் காணமே. இந்த வேலுப் பயலும் எங்கெயோ தொலைஞ்சு பொயிட்டான். இல்லாட்டி, அவனையாவது போயி பார்த்துட்டு வரச்சொல்லலாம்' என்று எண்ணியவாறு, கண்ணை ஏறச் சொருகி, நாக்கில் கூடிநின்ற புகையிலையின் சுவாரசியக் கசப்பை அனுபவித்துக் கொண்டிருந்தார்.

அனவரத விநாயகம் பிள்ளை திருநெல்வேலி சைவ வேளாளப் பிள்ளைமார்களில் செயலும் செல்வமும் மிக்கவர். அனவரதமும் விநாயகப் பெருமானாகவே செழித்து வளரும் ஆரோக்கிய திடகாத்திர முடையவர். வீடு வாசல் முதலிய சொத்துக்கள் போக, அம்பாசமுத்திரம் சரகத்தில் நிறைய நில புலன்களும் உண்டு. கன்னடியன் காலின் முதல் பாசனப் பயிர் ஆனதால், தீய்வு என்பதையே அறியாத வயல்கள் அவை. ஊரிலே உள்ள பெரிய மனிதர்களில் அவரும் ஒருவர்தான் என்றாலும், எல்லா நிலச் சுவான்தார்களையும் போலவே, அவரும் சர்க்காருக்கு டிமிக்கி கொடுத்து நெல்லை ஒதுக்கிக்கொண்டு போனவர்தான். ஒரு காலத்தில் பிராமணத் துவேஷியும், ஜஸ்டிஸ் அனுதாபியுமாயிருந்த பிள்ளையவர்கள், சிறைவாசம், தடியடி முதலிய தண்டனைகள் இனிமேல் கிடையாது என்ற தைரியம் ஏற்பட்டவுடன் தாம் ஒரு காலத்

தில் பழித்த 'வங்காளஞ் சாக்கை'—கதரை, உடுத்த ஆரம்பித்ததோடு, தமது வீட்டிலும் வில் வண்டியிலும் தேசியக் கொடியை ஏற்றி வைத்தார். தூய கதராடை அவருடைய நடவடிக்கைகளுக்குச் சரியான திரையாகப் பயன்பட்டது. சர்க்கார் அதிகாரிகளிடம் ஒரு மணி தானியங்கூட இல்லே என்று கைவிரித்தவர்களில் அவரும் ஒருவர். எனினும், ஊரில் மட்டும் அவர் வீட்டுக்குள் நிலவறை ஒன்று கட்டி, மூட்டை மூட்டைகளாக அடுக்கி வைத்திருக்கிறார் என்பது எல்லோரும் பரிமாறிக்கொள்ளும் பகிரங்க ரகசியம்.

ராசையா அவருடைய செல்லப் பேரன். ஆண் வாரிசு அற்றவராதலால், அவருடைய மகள் கோமதியின் பிள்ளையான ராசையாதான் அவருடைய சொத்தை ஆளப் பிறந்தவனுக இருந்தான். தாயும் தந்தையும் அரியநாயகபுரத்திலே இருந்தாலும், ராசையா தாத்தா வீட்டிலே தான் வளர்ந்து வந்தான். அனவரத விநாயகம் பிள்ளைக்குப் பேரன்மேல் அபார வாஞ்சை; உயிர். ராசையாவும் தாத்தாவிடம் அத்தனை பிரியத்தோடு நடந்து கொள்வான்.

பிள்ளையவர்கள் அவனைத்தான் எதிர்நோக்கியிருந்தார். ஆனல் மழை ராசையாவுக்கும் முந்தி விட்டது. தோல் கிழிந்த கமலையைப்போல், மழை கொட்ட ஆரம்பித்தது. பிள்ளையவர்கள் நிலைகொள்ளாமல் தவித்தார். பேரப்பிள்ளை எங்கே அகப்பட்டுக் கொண்டானே என்ற பயம் ஒரு புறம்; புழக்கடையில் உள்ள நிலவறையில் எங்கே தண்ணீர் பொத்துக்கொண்டு இறங்கிவிடுமோ என்ற பதைப்பு ஒரு புறம்.

எழுந்திருந்து கீழும் மேலும் நடந்தார்.

மழை தணிந்து, தூற்றலாக மாறும் வேளை ராசையா பைக்கூட்டைத் தலைமேல் வைத்துக் கொண்டு, உடம்பெல்லாம் நீர் சொட்டச் சொட்டப் படியேறி வந்தான். மழையிலே நனைந்து வந்தாலும் பயல் வீடு வந்துவிட்டான் என்ற திருப்தியோடு, அவனைப் பார்த்து, ''ஏண்டா

இப்படி நனைஞ்சிக்கிட்டு வாரே? எங்கேயாவது நின்னு வந்தா என்ன?'' என்று கேட்டுக்கொண்டே, அவனுடைய நிக்கரைக் கழற்றினர்.

''நின்னுதான் வந்தேன். ஆனு, நின்ன இடத்திலியும் மளெ கொட்டிச்சி!'' என்றுன் பேரன்.

''சரி சரி, வீட்டுக்குள்ளே ஆச்சி இருக்கா. போயி குடுத்துணி வாங்கிக்கிட்டு வா'' என்று கூறிவிட்டு, அவன் உடம்பு முழுவதையும் நன்ருகத் துவட்டி விட்டார். ராசையா வீட்டுக்குள் போய் சட்டை மாட்டிக் கொண்டு வந்தான்.

வந்தவன் தாத்தாவோடு உற்சாகமாகப் பேச ஆரம்பித்து விட்டான்; ''அப்பலியே வந்திருப்பேன் தாத்தா. ஆனு, சந்திப் பிள்ளையார் கோயில் பக்கம் ஒரு ஊர்கோலம் போச்சி...''

''நீயும் அதோட போனியா?'' என்று செல்லக் கோபத்தோடு அதட்டினர், கிழவர்.

''ஆமா'' என்று தைரியமாக ஆமோதித்துவிட்டு, ''தாத்தா, அந்தச் சனங்களுக்கெல்லாம் சாப்பிட்றதுக்கு அரிசி இல்லியாம். பட்டினி கிடக்காஹளாம். ஊரிலே அரிசி இல்லியாம்...தாத்தா, நிசம்மாவே நம்ம ஊரிலே அரிசி இல்லியா, தாத்தா?'' என்று கேட்டான்.

''ஆமாண்டா கண்ணு! இருந்த அரிசியெல்லாம் காலியாப் போச்சு. அதனலெத்தான் அவனுக எல்லாம் இப்படிப் பட்டினி பட்டினின்னு கத்துரானுக.''

''அப்படின்னு, நாமுங்கூடப் பட்டினி கிடக்கணுமோ, தாத்தா?''

''நாம ஏண்டா பட்டினி கிடக்கணும்? நமக்குத்தான் அரிசி இருக்கே.''

''நமக்கு மாத்திரம் எங்கேருந்து தாத்தா, அரிசி வருது?''

''ராசா, அண்ணைக்கி ஒரு எறும்புக் கதை சொன்னேன், பாரு. ஞாபகமிருக்கா? எறும்பு மழை காலத்துக்குன்னு முன்னமேயே அரிசி, குறுணை எல்லாத்தையும் தன் புத்துக்குள்ளே சேத்து வச்சிக்கும். ஈ இருக்கே—அது முழுச்சோம்பேறி. அது சேத்து வச்சிக்காது. நாமெல்லாம் எறும்பு மாதிரி; அவங்கள்ளாம் ஈ மாதிரி. சும்மா காவாலித்தனமா, சுத்திட்டுத் திரிஞ்சி இப்போ அரிசி இல்லேன்னு கத்துருனுக!'' என்று உபாக்கியான ரீதியில் விளக்கினர் பிள்ளை.

''அப்போ—நீ எந்தப் புத்துலே தாத்தா அரிசி வச்சிருக்கே?''

கிழவருக்குத் தமது நிலவறையின் ஞாபகம் வரவே உடம்பு புல்லரித்தது. இருந்தாலும் சமாளித்துக்கொண்டு ''பிறகு சொல்லுதேன். நீ போயி, ஆச்சி காப்பி போட்டுட்டாளான்னு பாத்துட்டுவா'' என்று அவனை மடியிலிருந்து இறக்கி விட்டார்.

பையன் வீட்டினுள் ஓடினன். பிள்ளை தமது வழுக்கைத் தலையைத் தடவிக் கொண்டு, 'பய வெடிப் பயலா யிருக்கானே. தர்ப்புத்தியாகி, தீர்க்காயுசா பிழைச்சுக் கிடந்தா, வக்கீல் வேலைக்குப் படிக்க வைக்கணும்' என்று சிந்தித்துக் கொண்டார்.

ராசையா தனக்கும் தாத்தாவுக்குமாக, முறுக்கும் காப்பியும் எடுத்துக் கொண்டு வந்து சேர்ந்தான். பேரப் பிள்ளையின் சூட்டிகத் தன்மையை ரசித்துக் கொண்ட தாத்தா, பேரன் முதுகிலே தட்டிக் கொடுத்துவிட்டு, முறுக்கை எடுத்துக் கடித்தார். பேரனும் ஒரு முறுக்கைக் கறும்பினன்.

''முதலாளி!''

யாரோ கூப்பிட்ட குரல்கேட்டு, தலையை வாசல் நடைக்குத் திருப்பினர் கிழவர். வாசல் நடையில் கூப்பிய கையும் குறுகும் உடம்புமாய் ஒருத்தி நின்ருள்.

''யாரது?'' என்று கண்களைத் தீட்டிக்கொண்டு கேட்டார்.

"சந்தணத்தோட மக, முருவாயி'' என்று பணிவாகச் சொன்னாள், வந்தவள்.

''முருகாயியா? ஏட்டி, அங்'னே ஏன் நிக்கே? இப்பிடிக் கிட்ட வா'' என்று கூப்பிட்டார் கிழவர்.

அந்தப் பெண் முற்றத்துக்கு வந்து தூணை ஒட்டி நின்றாள்.

கிழவர் அவளைக் கூர்ந்து நோக்கிக் கொண்டே கேட்டார்: ''ஏட்டி, சந்தணம் சௌக்கியமாயிருக்காளா?'' அவர் உடம்பில் புதுப் பலம் ஊறுவது மாதிரி இருந்தது.

''அவ படுக்கையிலே விழுந்துதான் மாசம் ஒண்ணாகுதே.''

''அப்படியா? சரி. இந்த மனையிலெ வந்திருக்கியே, என்ன விசயம்?''

''வயிறு இருக்குதில்லெ, எசமான். வீட்டிலே ஒரு அரிசி இல்லெ. ஊரிலெ சடையைப் பூட்டிட்டான். ரேசன் ரேசன்னு எங்க வாயிலெ மண்ணைப் போட்டுட்டான் வெறும் ரேசன் கார்டை வச்சிக்கிட்டு நாக்கையா வளிக்கது? வீட்டிலெ உலையேத்த வளியில்லெ. அம்மைக்குத் தெளுவுத் தண்ணி காய்ச்சிக் குடுக்கக் கூட அரிசி இல்லெ.''

"இந்த ரேசன் வந்தவேளை வச்சி,உங்களுக்கும் எங்களுக்கும் சங்கடம். இது ஒளிஞ்சாத்தான்...'' என்று சொன்னார் கிழவர்.

''அரிசி இல்லியா? அப்ப நீ பட்டினியாவா கிடக்கே!'' என்று முருகாயியைப் பார்த்துக் கேட்டான் ராசையா.

''இன்னிக்கு ராத்திரியேனும் உலையேத்தலேன்னா பட்டினிதான்'' என்று பதிலளித்து விட்டு, "அதுக்குத்தான் முதலாளி வீடு தேடி வந்தேன். ஆச்சியம்மாளைக் கண்டு கேட்டேன். எல்லாம் அய்யாட்டெதான் கேக்கணும்ணுட்டாக. அதான்...'' என்று கூறிக் கைகையைப் பிசைந்தாள் முருகாயி.

''இங்கே ஏது புள்ளெ, அரிசி?'' என்று கிழவர் வெடுக்கென்று பதில் கொடுத்தார்.

''என்ன தாத்தா, நீதான் புத்துக்குள்ளே அரிசி வச்சிருக்கேன்னியே!'' என்முன் பேரன்.

"போடா, அது நம்ம சாப்பாட்டுக்கில்ல இருக்கு" என்று மடக்கிவிட்டு, 'விவரம் தெரியாத புள்ளெ!' என்று மனசுக்குள் முனகிக் கொண்டார்.

''நீங்கள்தான் எப்படியாவது வளி பண்ணனும். கையோடே பணமும் கொண்டாந்திருக்கேன். ஒண்ணுக்கு அரைன்னுலும் பாதகமில்லெ!''

கிழவருக்கு நாக்கில் ஜலம் ஊறியது. யோசித்தார்: 'நேற்றுக்கூட, ரூபாய்க்கு முக்கால் படின்னுதான் வித்திருக்கு. இன்னைக்கி—ஒரு நாள் நெருக்கடியில் — ரூபாய்க்கு அரைப் படி வாங்க ஆள் தயாராயிருக்கே — நாளை ரூபாய்க்குக் காலும் வாங்கத் தயாரா யிருப்பாங்களா? நாளாக... நாளாக... அப்படித்தான் இவள் எத்தனை கோட்டை வாங்கப் போகிருள்? ஒன்றிரண்டு படி இருக்கும். மேலகரத்திலிருந்து வந்த புள்ளி கோட்டைக்கு நாற்பத்தஞ்சு வரை ஒத்துக்கிட்டான். அவனிடம் இருநூறு, முந்நூறைத் தள்ளிட்டா—? என்னமோ வீடு வீடாச் சோதனை போடப் போறதாகச் சொல்லிக்கிட்டாங்க. அப்படி ஏதாவது நடந்தா? — நம்ம வீட்டிலே நடையேறுதற்கு எந்தப்பெய துணிஞ்சிறுவான்? — ஏறினுலும் பாத்துக்கலாம் — ஆனு, எளவு இந்தக் கம்யூனிஸ்டுப் பயலுக என்ன அநியாயம் பண்ணுதானுக. அவனுக ஏதாச்சும் இடக்குப் பண்ணுவானுகளோ? — காங்கிரஸ் கொடி வீட்டிலே பறக்கயிலே! — இந்தக் கம்யூனிஸ்டுப் பிசாசுக்கு, காங்கிரஸ் கொடிதானே வேப்பிலே! — ஆனு, ஊரு கிடக்கிற கிடையிலே, இவ குடுக்கிற பணத்தை வச்சி நாம வாழப் போறதில்லெ. ஆனு, மூதி மறைச்சிக்கொண்டு போவத் தெரியாமெ, ஆப்பிட்டுக்கிட்டா? —'

''என்ன முதலாளி யோசிக்கிய? பொழுது சாஞ்சப்புறம் தந்தாலும் போதும். பணம் வேணுமின்னாலும் —''

''சேச்சே. நம்பிக்கை இல்லேன்னு நினைச்சே. அரிசி இருந்தாத் தானே குடுக்க முடியும்? எங்கள்ட்டெ இருந்த நெல்லைத்தான் கசக்கிப் பிளிஞ்சி, கவர்மெண்டுக்காரன் கொண்டு போயிட்டானே. சாப்பாட்டுக்கு அளந்த நெல்லு கூட எங்க தேவைக்குக் காணுமோ, காணாதோ?'' என்று அளக்க ஆரம்பித்தார் பிள்ளை.

முருகாயி விடவில்லை. ''நீங்க மனசு வச்சா —'' என்று அவள் கெஞ்சினாள்.

ராசையா இருவரையும் திருகத் திருகப் பார்த்தான். ''தாத்தா, அவளெப் பாக்கப் பாவமாயிருக்கு. தம்ம அரிசியிலே இத்தினிப் போலக் குடுத்தா என்ன?''என்று கேட்டான்.

கிழவர் பதில் பேசவில்லை. சிறிது நேரம் கழித்து, ''சரி, இப்ப ஒண்ணும் முடியாது. பொழுது சாஞ்சப்புறம் வா. யோசிச்சிச் சொல்றேன்'' என்று விறைப்பாகப் பதிலளித்தார்.

''எசமான் — கை விட்டிறப்பிடாது!'' என்று வேண்டிக் கொண்டே நடை இறங்கினாள் முருகாயி.

கிழவருக்குப் பெரும் ஆபத்திலிருந்து தப்பித்துக் கொண்ட மாதிரி இருந்தது. இரவு பேரனைச் சீக்கிரமே படுக்க வைத்தார். ஆனால், இரவு முழுவதும் சிறுவன் சள் சள்ளென்று இருமினான். காலையில் பையன் மார்பு கொதியாய்க் கொதித்தது.

''ராசையா, இன்னைக்கி நீ பள்ளிக்கூடம் போகவேண்டாம். உடம்பு காயுது'' என்று பேரப்பிள்ளையிடம் சொல்லிவிட்டு, 'நேற்று மழையிலே நனைந்ததுதான் காரணம்' என்று தம்மைச் சமாதானப் படுத்திக் கொண்டார் பிள்ளை.

தாத்தா பள்ளிக்கூடம் போக வேண்டாம் என்று சொல்லியது பேரப்பிள்ளேக்கு அதிகத் தெம்பையும், உற்சாகத்தையும் கொடுத்தது. காலேயில் காப்பி குடித்து முடிந்ததும், அக்கம் பக்கத்து வளேவிலுள்ள பையன்களே யெல்லாம் ஒன்று திரட்டிக் கொண்டு விளேயாட ஆரம்பித்து விட்டான் ராசையா.

கிழவர் வீட்டு முற்றத்தில் ஈஸிசேரில் சாய்ந்தவாறு ஹிந்துப் பத்திரிகையைப் புரட்டிக் கொண்டிருந்தார்.

சிறிது நேரத்தில் ராசையா ஒரு மூங்கில் கழியில், காகிதத்தில் செய்த மூவர்ணக் கொடியைப் பறக்க விட்டுக் கொண்டு, தனது கோஷ்டியுடன் வீட்டு வராந்தாவில் ஊர்வலம் நடத்த ஆரம்பித்து விட்டான்.

**கள்ள மார்க்கெட் ஒழிக!**

**பதுக்கல்காரனேச் சிறையிலடை!**

என்ற கோஷங்கள் பிள்ளேயவர்களின் காதில் விழுந்தன.

'ஹிந்து'வை மார்பின்மேல் போட்டுவிட்டு, பேரப் பிள்ளேயின் திருவிளேயாடலேக் கவனித்தார். "ஜேய் ஹிந்த்! அல்லாஹு அக்பர்! செங்கொடிக்கு ஜே!" என்றெல்லாம் சர்வ கட்சிக் கோஷங்களேயும் கொடுத்துக்கொண்டு ஊர்வலம் நடத்தினன் செல்வச் சிரஞ்சீவி ராசையா.

'கள்ள மார்க்கெட் ஒழிக! பதுக்கல்காரனேச் சிறையிலடை!' என்ற கோஷங்கள் பிள்ளேயவர்களின் மானத்தையும் மனத்தையும் உலுப்பியாட்டின.

"அய்யா, ராசையா!" என்று அருமையாய் அழைத்தார்.

கொடியைத் தோளில் சாத்தியவாறு கம்பீரமாக நடந்து தாத்தாவிடம் சென்ருன் ராசையா.

"இந்த மாதிரியெல்லாம் விளேயாடக் கூடாதின்னு, அன்னேக்கிச் சொன்னேனு இல்லியா?" என்று செல்லமாய்க் கேட்டார்.

“நீ மட்டும் சுதந்திர தினத்தன்னைக்கி சந்திப்பிள்ளை யார் கோயில் கூட்டத்திலே, காந்தித் தொப்பி காந்திச் சட்டைல்லாம் போட்டுக்கிட்டுப் போயிருந்தியே!” என்று திருப்பி யடித்தான் ராசையா.

“அது அன்னைக்கி மட்டுந்தாண்டா, கண்ணு. இனிமே, இந்த மாதிரியெல்லாம் நீ செஞ்சேன்ன உன்னெ போலீஸ் காரன் புடிச்சிட்டுப் போயிருவான்” என்று பயமுறுத்தினர் கிழவர்.

“ஙக்கே! என்னையா புடிப்பான்? உன்னைத்தான் புடிச்சிட்டுப் போவான்!” என்றான் ராசையா.

கிழவருக்குத் திடுக்கென்றது; எதிரே இருந்த ஜன்னல் கம்பிகள் திடீரென்று வளர்ந்து தன்னை வழி மறைப்பதாக, சிறை செய்வதாகத் தோன்றியது.

“சீ படுக்காளிப் பயலே!” என்று கிழவர் அதட்ட வாயெடுத்தார். குரலில் வேகமில்லை. “சரி சரி, காய்ச்சல் அடிக்குதின்னு வீட்டிலெ இருக்கச் சொன்ன, இப்படியா விளையாடுறது?” என்று கூறிக்கொண்டே அவன் கையி லிருந்த கொடியைப் பிடுங்கினர். ஆனல் ராசையா அதற் குள் கண்ணைக் கசக்கத் தயாராய் விட்டான்.

“எப்படியும் போ” என்று சலித்துக் கொண்டு கொடியை அவன் கையில் கொடுத்தார்; மீண்டும் ஹிந்துப் பத்திரிகையில் தலையைப் புதைத்துக் கொண்டார், பிள்ளை.

ராசையாவின் ஊர்வலம் ‘கள்ள மார்க்கெட் ஒழிக!’ என்று கோஷமிட்டுக் கொண்டு, வீட்டைவிட்டு இறங்கி, சந்திப் பிள்ளையார் கோயிலைப் பார்க்கத் திரும்பியது!...

ராசையா விளையாடிவிட்டு வீடு திரும்பியதும் அனவரத விநாயகம் பிள்ளை நெஞ்சில் கைவைத்துப் பார்த்தார். நெஞ்சு அனலாய்க் கொதித்தது. ‘சொன்னக் கேட்டாத் தானே!’ என்று சலித்துவிட்டு, அவனைப் படுக்கையில் கொண்டுபோய்ப் படுக்க வைத்தார்.

ஆனால் ராசையா படுக்கையில் படுத்தவன்தான். சாயந்திரத்துக்குள் ஜுரம் விறுவிறென்று ஏறியது. மார்பு கொதிப்பேறிக் கனன்றது; கண்கள் சிவந்து, கண்ணீர் கசிந்தது; அனல் மூச்சு வாங்கியது...

டாக்டர் வந்து பார்த்தார்.

ஒருநாள்...மறுநாள்...இரண்டுநாள்...மூன்றுநாள்.

ஜுர வேகம் தணியவில்லை. நாலாம் நாள் இரவு பையன் கண்ணையே திறக்கவில்லை. எட்டு மணிக்கு டாக்டர் வந்து பார்த்தார். ஏதோ மருந்தெழுதிக் கொடுத்து, உடனே வாங்கிக் கொடுக்கும்படி சொன்னார். இருக்கும் ஜுர வேகத்தில் இரவில் நிலைமை மோசமாகக்கூடும் என்றும், அந்த மருந்தைக் கொடுத்த பின்னர்தான், காலையில் எதுவும் நிச்சயம் சொல்ல முடியும் என்றும் சொல்லிப் போய்விட்டார்.

உடனே வண்டிக்கார வேலுவை அழைத்து, பணத்தையும் சீட்டையும் கொடுத்து விரட்டினார் கிழவர். வேலு கடைகடையாய் ஏறி இறங்கினான். மருந்து கிடைக்கவில்லை. வெள்ளை மார்க்கெட்டும், கள்ள மார்க்கெட்டும் கை விரித்தன. பதில் கூறச் சிலர் தயங்கினர்; பிகு பண்ணினர்; மறுத்தனர்.

மணி எட்டு, எட்டரை, ஒன்பது, ஒன்பதரை...

ஜங்ஷன்—டவுன்—பாளையங்கோட்டை மூன்றையும் வேலு சுற்றி வந்துவிட்டான். மருந்து கிடையாது.

இரவு பத்து மணிக்கு வெறுங் கையோடு திரும்பினான் வேலு. கிழவருக்கு ஆத்திரமும் கவலையும் பெருகின. தானே சென்று வரலாமென எண்ணினார். ஆனால் மணி பத்தரை. மருந்துக் கடைகள் பூட்டியிருக்கும். மேலும் தனக்கும் கடைக்காரர்கள் அதே ‘பேப்பே’ பாடந்தானே ஒப்புவிப்பார்கள் என்ற எண்ணம் அவர் மனசைக் கொந்திற்று.

பிள்ளையவர்கள் தலையில் கைவைத்தவாறு, இடிந்து போய் உட்கார்ந்தார். மனம் நிலை கொள்ளாமல் தள்ளா

டியது. தமது அருமைப் பேரன், சொத்தை ஆளப் பிறந்தவன், குலம் தழைக்க வந்த கொழுந்து, தம் ராசையா—அவன் படுக்கையில் கிடப்பதைக் கண்டு அவர் மனம் வெந்தது: நொந்தது.

பதினொன்று மணி வாக்கில் பிள்ளையவர்களின் செல்ல மகள் கோமதி ஓடோடியும் வந்து ''அப்பா, ராசா என்னமில்லாமோ புலம்புதான். கண் முளியெல்லாம் ஏறச் சொருகுது'' என்று பரிதபித்தாள்.

கிழவர் எழுந்திருந்து படுக்கைப் பக்கம் போனார். ராசையா கண்களை மூடியவாறே புலம்பிக் கொண்டிருந்தான். வார்த்தைகள் முதலில் தெளிவாகக் கேட்கவில்லை.

''ராசாக்கண்ணு. இந்தா பாரு. தாத்தால்'லெ'' என்று குரல் கொடுத்துத் தம்மை அறிமுகப்படுத்தி, ஜன்னியை உணர முயன்றார். குரல் தொண்டைக் குழியில் விக்கியது.

ராசையா புலம்பினான்: ''நீ எந்தப் புத்திலே தாத்தா, அரிசி வச்சிருக்கே!''

கிழவர் கண்ணில் நீர் ததும்ப, ''நம்ம வீட்டிலெ தாண்டா கண்ணு!'' என்று சொன்னார்.

அவனுடைய புலப்பம் அதிகரித்தது.

''கள்ள மார்க்கெட்''—சிறுவன் கத்தினான்.

''ஏலே ரெட்டை மண்டை! ஒழிகன்னு சொல்லுடா!'' என்று தனக்குத்தானே சத்தமிட்டான்.

''ராசா என்னடா சொல்லுதே? இந்தா, அம்மா வந்திருக்கேன். கண்ணெத் திற'' என்று அங்கலாய்த்தாள் கோமதி.

ராசையா புலம்பினான்: ''கள்ள மார்க்கட்—''

கிழவர் அவனுடைய புலப்பத்தை அவன் வழியிலேயே விட்டுத் திருப்ப எண்ணினார்; ''ஒழிக'' என்றார்.

"கள்ள மார்க்கெட்" என்றான் சிறுவன்.

"ஒழிக" என்றார் கிழவர்.

"பதுக்கல்காரனை" என்றான் பேரன்.

"சிறையிலடை" என்றார் தாத்தா.

"செங்கொடிக்கு" என்றான் ராசையா.

"ஜே!" என்றார் அனவரத விநாயகம்பிள்ளை.

எனினும், ராசையாவின் ஜன்னி வேகம் குறையவில்லை. புலப்பம் தெளிவு குலைந்து, வார்த்தைகள் உள்வாங்கின. பிறகு வெறும் முனகல். கிழவர் பையனைப் பார்த்துக் கொண்டே இருந்தார். புலப்பம் நின்றது; மூச்சு மட்டும் திக்கித் திணறி வந்தது; பிறகு அதுவும் ஊசிமாதிரி இழைய ஆரம்பித்தது.......

இரவு பன்னிரண்டு மணிக்கு—

மகனைப் பறிகொடுத்த கோமதியின் கதறல் பிள்ளையவர்கள் வீட்டை உலுக்கியது; ஆளப்பிறந்த ராசையாவின் சில்லிட்ட உடலின்மேல், பிள்ளையவர்களின் கண்ணிலிருந்து இரண்டு சொட்டு வெந்நீர் விழுந்து தெறித்தது.

1947

# பிழைப்பு

## 1

ஆபீஸ் வேலை முடிந்ததும் எழுந்து வெளியே வந்தேன். அன்று வீட்டுக்குச் செல்வதைத் தவிர வேறு யோசனை கிடையாது. பீச்சுக்குச் சென்று நல்ல பாம்பு மாதிரி 'காத்துக் குடித்துவிட்டு' வரவோ, பழைய புத்தகக் கடையில் பரிவர்த்தனை பண்ணவோ அல்லது மறுநாள் பாட்டுக்கு யாரிடமேனும் 'அஞ்சு பத்து' கைமாத்து வாங்கவோ, வரவேண்டிய கதைக்கு முன்பணமாக தவணை அச்சாரம் வாங்கவோ மனசும் இல்லை; வழியும் இல்லை. 'கொக்குக்கு ஒன்றே மதி' என்ற மாதிரி எனக்கு வேண்டியதெல்லாம் ஒரு கப் காப்பிதான். ஆனால், பாக்கெட்டில் அதற்கு வழி உண்டா என்றால், அது இனிமேல்தான் தெளிவுபட வேண்டிய விஷயம். என் பையில் ரூபாய்க் கலத்தில் காசு புரளும்வரை எனக்குக் கணக்கும் தெரியாது; கண்ணும் தெரியாது. கரன்ஸிச் செலாவணி என்ற நிலை பிறழ்ந்து காசுச் செலாவணியில் வரும்போதுதான் நான் கையைக் கொஞ்சம் இறுக்கிப் பிடிப்பேன். ஆனால் தும்பைவிட்டு, வாலைப் பிடித்தால் முடியுமா?

பஸ் ஸ்டாண்டுக்கு வருமுன்னர் பையில் பஸ்ஸுக்கேனும் காசு இருக்கிறதா என்று துழாவினேன். ஒண்ணே காலணாவுக்கு மேல், ஒரு துரும்புகூட இல்லை. காப்பிக்குக் காசு இல்லை. ஆகவே இன்று வீட்டுக் காப்பிதான். ஆனால், அந்த 'மூணே முக்கால் துட்டு'க்குச் செலவு வேண்டுமே!

ஆபீசிலிருந்து என் வீடு அதிக தூரமில்லை. குறுக்குப் பாதையாக நடந்து சென்றால், முக்கால் மைல் இருக்கும்.

பஸ்ஸில் சென்றால், ஒரு அணுக் காசுதான். லஸ்ஸில் இறங்கி நடந்துவிடலாம்.

பஸ்ஸில் சென்றால் ஒரு அணு; கால் அணு மிஞ்சும். ஆனால், இந்தக் காலத்தில் காலணு மிஞ்சுவதும் ஒன்றுதான்; மிஞ்சாமல் போவதும் ஒன்றுதான். பஸ்ஸில் செல்லாமல் பக்கத்து நாயர் கடையில் இரண்டு வில்ஸ் சிகரெட் வாங்கினால் அந்தக் காலணுவும் பயனுள்ளதாகப் போய்விடும். பையைத் துப்புரவாகத் துடைத்துவிட்டு சிகரெட்டைப் புகைத்தவாறே நடந்துவிடலாம். இந்தப் பணப் பெருக்கக் காலத்தில் காலணு என்ற நாணயம் வேறு எதனோடாவது ஒட்டிப் பிழைத்தால்தான் மதிப்புப் பெறமுடியும். காலணு மட்டும் தனித்தியங்க முடியாது. அப்போது அது செல்லாக் காசாக மாறிவிடும். ஆகவே அந்தக் காலணுவை வைத்து தர்மம் செய்யலாம்; அல்லது யானை வாயில் ஒதுக்கிவைத்த சுண்ணாம்புத் தேங்காய் மாதிரி சமயத்தை எதிர் நோக்கி, பர்சில் போட்டும் வைக்கலாம்......

இப்படியாக நான் சுய தர்ம விசாரணையில் மனம் கலங்கி சர்ச்சை செய்துகொண்டிருக்கும்போதுதான் என் காதில் அந்தப் பர தர்மம் விழையும் பரிதாபக் குரல் விழுந்தது.

திரும்பினேன்.

பஸ் ஸ்டாப்புக்கு அருகிலுள்ள பூவரச மர நிழலில் அந்தக் கிழவி ஓடியோடிக் கத்திக் கொண்டிருந்தாள்.

''அய்யாமாரே, அனாதைப்புணமுங்க; தூக்கிப் புதைக்கிறதுக்குக்கூட நாதியில்லைங்க. மவராசா, ஒரு காலணு தருமம் பண்ணுங்க'' என்று பதறிப் பதறிக் கத்துவதும், அங்கு கிடத்தப்பட்டிருந்த பிணத்தின்மீது தலைவிரி கோலமாய் விழுந்து மாரடித்துக் கதறுவதுமாக இருந்தாள்.

நான் பார்த்தேன்.

மரத்தடியில் அந்தப் பையனின் பிரேதம் கிடந்தது. உடம்பு நீட்டி நிமிர்த்திக் கிடத்தப்பட்டிருந்தது. பெரு விரல்கள் இரண்டும் சடம்புக் கயிற்றால் கட்டப்பட்டிருந்தன.

வாயின் கடையோரத்தில் உமிழ்நீர் வழிந்தோடியிருந்தது. கண்ணில் சந்தனம் அப்பப்பட்டிருந்தது. நெற்றியிலே ஈரம் கலையாத விபூதிப் பூச்சு!

அதைப் பார்க்கவே பரிதாபமாய்த்தானிருந்தது. மத்தியானம் நான் டீ குடிக்க வெளியில் வந்தபோது, அந்தப் பையனும்தான் பிச்சை எடுத்துக் கொண்டிருந்தான்! அதற்குள்ளாகவா இந்த மரணம்? வேளாவேளைக்கு வயிற்றுக்கு உணவில்லாமல் அணு அணுவாய்ச் செத்து வருபவனுக்கு சாவு என்பது திடீரென்று கொதிநிலை அடைந்த தண்ணீரைப் போலத்தான் இருக்குமா? சே! என்ன அநித்யமான வாழ்வு? இந்தக் கிழவியும் மத்தியானம் தனக்கு வருகிற ஒன்றிரண்டு காசையும் அந்தப் பையனுக்கே தத்தம் செய்து விட்டாளே! அதற்குள்ளாகவா இந்த அவச்சாவு?...'

பஸ் ஸ்டாண்டில் நின்றவர்கள் தரும சிந்தையோடு காலணா அரையணா போட்டார்கள். பிணத்தின்முன் விரித்திருந்த துண்டில் காசு சேர்ந்தது.

என்னாலும் தருமம் பண்ண முடியாமல் இருக்க முடியவில்லை. பர்சிலிருந்து காலணாவை எடுத்து விட்டெறிந்தேன். 'கடைசிக் காசை ராஜாவைப்போல் செலவழி' என்று சொன்ன இங்கர்ஸாலின் பொன்னுரை ஞாபகத்துக்கு வராவிட்டாலும், அடுத்தபடியாக நான் செய்த காரியம் காரில் ஏறியதுதான். ஆகவே, அந்த ஒண்ணே காலணாவை எப்படிச் செலவழிப்பது என்ற யோசனையும் தானே தீர்ந்து போய் விட்டது.

காரில் சென்றபோதும், லஸ்ஸில் இறங்கி நடந்தபோதும் என் மனசில் ஒரே ஒரு சிந்தனைதான் மிஞ்சி நின்றது.

'அவளுக்கும் அந்தப் பையனுக்கும் எந்தவித ரத்த பந்தமும் இல்லை; என்றாலும் அவள் ஏன் அந்தப் பிணத்துக்காக விழுந்து விழுந்து கதறவேண்டும்? மனித குணத்தின் நல்லுணர்ச்சியாலா? அதெல்லாமிருக்க முடியாது. மற்றவர்கள் இதயத்திலுள்ள கருணை, அன்பு, அனுதாபம் போன்ற

நல்லுணர்ச்சிகளைச் சூறையிட்டு, அதன் மூலம் தனது வயிற்றைக் கழுவிக்கொள்ளவே அந்தக் கிழவி வழி பார்க்கிருள். நானும்தான் என்ன செய்கிறேன்? எழுத்தாளன் என்ற சாக்கில் மனித உள்ளத்தில் கிடந்து தூங்கும் கருணையுணர்ச்சிகளைத் தூண்டி, சமூகத்தின் கண்ணீரை வரவழைத்து, காசு வாங்குகிறேன்! ஆனல், இந்தக் கிழவி இதற்கு முன்னெல்லாம் தனக்குக் கிடைக்கும் தர்மக் காசை இந்தப் பையன் இடையில் விழுந்து தட்டிக் கொண்டு போய்விடுகிருன் என்பதற்காக, அந்த இடத்திலிருந்து அவனை விரட்டியடித்து, அந்த 'வியாபார ஸ்தலத்தை, தனக்கே ஏகபோக உரிமையாக்கிக்கொள்ள நினைத்தாளே. ஆனல் இப்போதோ——?'

''தருமப் பிரபுக்களே, பெத்த வயிறு எரியுதய்யா! எம்புள்ளையைப் பார்க்க முடியலையே. ராசா! நீ போயிட்டியடா கண்ணு! உன்னை இப்படி அறைதைப் புணமாய் பார்ப்பதற்கா பெத்துப் போட்டேன். ஐயா, ஒரு காலணு கொடுங்க'' என்று கதறினள் கிழவி.

—பெற்ற வயிரு?

'நிச்சயமாய் இருக்கமுடியாது. அவளையும், அந்தப் பையனையும் நான் எவ்வளவோ காலமாக அறிவேன். அவர்கள் இருவரும் தாயும் பிள்ளையும் அல்ல. அவன் வேறு; அவள் வேறு. அதுமட்டும் நிச்சயம். இருந்தாலும் அவளும் பெண்பிள்ளைதானே. ஆயிரம்தான் தொழில் முறையில் விரோதங்கள் இருந்தாலும், அவளுக்கும் இருதயம் என்று ஒன்று இருக்கத்தானே செய்யும்? அவளும் மனுஷிதானே. தன் கண் முன்னே செத்து விழுந்த பையனைக் காணும்போது அவளுக்கு நெஞ்சம் கலங்காதா? அப்படியானல் பெற்ற வயிறு என்று சொல்லி ஏமாற்றுவதன் காரணம்?—

'எத்தனையோ 'தருமப் பிரபுக்களின்' மனசுக்குள் உறுத்தும் உணர்ச்சிகளைக் கிண்டிவிட்டு அல்லது திருப்திப்

படுத்தி என் எழுத்தின் மூலம் எனது பசியைத் தணித்துக் கொள்ள வழி பார்க்கிறேனே, அதுபோலவேதான் அவளும் பிழைப்பு நடத்துகிறாளா? அந்தப் பையனின் மரணத்தில் தான் அவளது ஜீவனம் நடக்க வேண்டுமா? ஏன், ஊராரின் சவத்தின்மீதுதான் உலகத்தின் பிழைப்பே நடக்கிறதா? ஒருவன் பிழைக்க வேண்டுமென்றால், இன்னொருவன் செத்து ஆகவேண்டுமா? அல்லது சாவதுதான் பிழைக்கிற வழியா?...

'இல்லை, யாருமே சாகவேண்டியதில்லை; சாவதற்குக் காரணமாயுள்ள சமுதாய அமைப்புத்தான் சாகவேண்டும்! ஒருவனைச் சாகடித்து மற்றவன் வாழ விரும்பினால், முதலில் அவன்தான் சாகவேண்டும்!...'

என் மனம் என்னென்னவோ அழிவு கோட்டைகள் கட்டி அலைக்கழிந்து கொண்டிருந்தது.

அன்றைக்குக் காப்பி சுகப்படவே இல்லை; கஷாயம் மாதிரிக் கசந்தது.

2

இரவு படுக்கைக்குப் போன பின்னும் அந்தச் சிறுவனின் பிரேத உருவமே என் கண்முன் நின்றுகொண்டிருந்தது. 'சாமி நேத்துக் காலையிலே நான் பிச்சை கேட்டப்போ, தரமாட்டேன்னியே. இப்போ நான்செத்துப் போயிட்டேன். இனிமே உன் பிச்சையும் வேணாம். நீயும் வேணாம்' என்று அவன் சொல்வது போல இருந்தது.

எனக்குத் தூக்கமே பிடிக்கவில்லை.

அந்தக் கிழவியையும், பையனையும் நான் கொஞ்ச காலமாக அறிவேன். எங்கள் ஆபீசுக்கு முன்னுள்ள பஸ் ஸ்டாண்டுதான் அவர்கள் வீடு, வாசல், குடியிருப்பு எல்லாம்.

கிழவிக்கு கிட்டத்தட்ட அறுபது வயதிருக்கலாம். எனினும் தலையெல்லாம் பறட்டையாகி, சூம்பிப் போட்ட பனங்கொட்டை மாதிரி திரிதிரியாய் இருக்கும். முழு நரை; எண்ணெய் அறியாததால், அதில் பளபளப்புக்கு இடமில்லை. சொத்தையாடித் தெறித்துப்போன இரண்டு குறைப் பற்களைத்தவிர வேறு பல் கிடையாது. முகம் சுருக்கு விழுந்த ஈரத் துணி மாதிரி வதங்கிக் கிடக்கும். இடையில் கந்தல் கந்தலான ஒரு சேலை தனது நிஷ்காம்ய சேவை பங்கப் பட்டுவிடக் கூடாதே என்று ஒட்டி ஒடுங்கிக் கிடக்கும்.

அவள் தினம் தினம் பிச்சை யெடுப்பாள். காரில் ஏற வரும் ஆத்மாக்கள் யாரேனும் தாராளமாய் மடியவிழ்த்தால் உண்டு. ஆனல், ஒவ்வொரு பஸ்ஸாக இடமில்லாமல் தவறவிட்டுத் தவிக்கும் நபர்களுக்கு தரும சிந்தனைக்கு இடமிராதுதான். எனினும் சிலர் அவர்களுக்குத் தருமம் செய்ததன் புண்ணியமாகவாவது, அடுத்த பஸ்ஸில் இடம் கிடைத்துவிடாதா என்ற நம்பிக்கையில் காலணு அரையணு விட்டெறிவதும் உண்டு. ஆனல், அரசமரத்தைச் சுற்றி விட்டு, அடிவயிற்றைத் தொட்டுப் பார்ப்பதில் எவ்வளவு அர்த்தம் உண்டோ அவ்வளவுதான் இதிலும் உண்டு.

அந்தப் பையனும் அப்படித்தான். 'சாமி! தாயில்லாப் பிள்ளை, சாமி' என்று சொல்லிப் பிச்சை யெடுப்பான்.

அவர்கள் இருவரும் பிச்சை யெடுப்பதை நான் எவ்வளவோ காலமாகப் பார்த்து வந்திருக்கிறேன்; என் பையில் கடைசியாக மிஞ்சும் காலணுவையும் அவர்களுக்கு விட்டெறிந்து சித்ரகுப்தனின் தருமச் சிட்டையில் நானும் இடம் பெற முயன்றிருக்கிறேன். சமயங்களில், 'சரி தாண்டா, போடா. நீ கைநீட்டிபிச்சை எடுக்கிறே; நான் அதைச் செய்யலே' என்று முப்பது முப்பத்தோராம் தேதிகளில் எறிந்தும் விழுந்திருக்கிறேன்.

அவர்கள் பிழைப்பு அந்தப் பிச்சையிலேதான் நடந்து வந்தது. பிச்சையெடுக்கும் அவர்களால் சேர்த்து வைக்க

முடியாது. 'நாலணு சேர்ந்தது; பக்கத்து ரிக்ஷா ஸ்டாண்டுக் கூடைக்காரியிடம் ஒரு கவளம் சோற்றை வாங்கித் தின்ருேம்' என்றும் கிடையாது. ஓரணு சேர்ந்ததுமே பக்கத்து நாயர் ஹோட்டல் அவர்களை வெற்றிலை பாக்கு வைத்து அழைக்கும். உடனடிப் பிரச்னையாக தோன்றித் தோன்றி வரும் பசியை, தற்காலிகமாகத் தணிக்கவெண்ணி நாயர் ஹோட்டலில் 'டீ சிங்கிள்' சாப்பிடுவார்கள்; அதன் மூலம் பசியைத் தணித்துக் கொள்ள முடியாவிட்டாலும் பசியைக் கொன்று விடுவார்கள்.

சமயங்களில் அவர்கள் இருவருக்கும் சண்டையும் மூண்டு விடுவதுண்டு.

'பிசாசே! நீயேன் இங்'னெ வந்து பிச்சை யெடுக்கே? உனக்குப் பேதி வராதா? போயேன், அந்த இஸ்டாண்டுக்கு. இங்'னே வந்து என் புயைப்பிலே ஏன் மண்ணைப் போடுதே?' என்று சீறுவாள் கிழவி.

'நீதான் போயேன்!' என்று பையன் துணிந்து ஒரு வார்த்தை சொல்லிவிட்டு, மீண்டும் கை நீட்ட ஆரம்பித்து விடுவான்.

இருவரும் தொழில் முறையில் அநேகமாக எதிரிகளாகவே பழகி வந்தார்கள்! எனினும் அந்தப் பையனின் திடீர் மரணம்?

'என்ன இருந்தாலும் அவளும் ஒரு பிள்ளையையாவது பெற்று, கொஞ்சிக் குலாவியிருக்கமாட்டாளா? அவளுக்கும் இதயம் கிடையாதா? பாவம்........அந்தப் பையன் செத்ததால், தனக்கு இனி தொழில் வட்டாரத்தில் ஏக போக ஆதிபத்யம் கிடைக்கும் என்று தெரிந்தபோதிலும், அவள் ஏன் கண்ணீர் விடுகிருள்? அவளும் மனுஷி! அவளும் கருணை உணர்ச்சியுள்ள கட்டை!

'அப்படித்தானு?......'

நான் எப்போது தூங்கினேனே, எனக்குத் தெரியாது.

3

மறு நாள் காலையில் நான் சாப்பாட்டை முடித்து விட்டு, ஆபீசுக்குக் கிளம்புமுன் டிராயரைத் துழாவினேன்; அதில் அரையணாக்கூட இல்லை. 'சரி. போனால் போகுது' என்று பொடி நடையாக வண்டியைத் தட்டிவிட்டேன். வரும் வழியெல்லாம் அந்தக் கிழவியும் பையனுமே என் மனசில் வட்டமிட்டுக் கொண்டிருந்தார்கள்.

'இன்று அந்தக் கிழவி தனியாகத்தான் பிச்சை யெடுத்துக் கொண்டிருப்பாள். அந்தப் பையனின் உடம்பும் இதற்குள் புதை பட்டுப் போயிருக்கும். இன்று அவளைப் பார்க்க வேண்டும். எதிரி தொலைந்துவிட்டான் என்ற மகிழ்ச்சியோடிருப்பாளா அல்லது தனது தொழில் முறைச் சகாவும், பேச்சுத் துணையுமாயிருந்தவன் போய்விட்டானே என்ற வருத்தத்தோடு இருப்பாளா?' — என்றெல்லாம் யோசித்துக்கொண்டே நடந்தேன். நடக்கும்போது யோசிக்க ஏதாவது வேண்டுமே!

ஆபீசை நெருங்கியதும் என் பார்வை பக்கத்துச் சந்தில் திரும்பியது.

அங்கு நான் கண்ட காட்சி—

சந்துக்குள் அந்தக் கிழவியும், அந்தப் பையனும் சிரித்துப் பேசிக்கொண்டிருந்தார்கள். கிழவி சந்தனத்தை அவனுடைய மூடிய கண்களில் அப்பிக் கொண்டிருந்தாள்; பையன் தன் இரு பெருவிரல்களையும் சடம்புக் கயிற்றால் கட்டிக் கொண்டிருந்தான்.

''ஏ, கெய்வி! கண்ணுலே மெதுவா அப்பு. ஒரே யடியாக் கரிக்குது'' என்றான் பையன். அதுவும் என் காதில் விழத்தான் செய்தது. ஆம். அந்தப் பையன் சாகவில்லை!

எனக்கு மண்டையில் ஓங்கியடித்த மாதிரி இருந்தது.

'அப்படியானால் நேற்று நடந்ததெல்லாம் ஒரே மாய்மாலம் தானா? அந்தப் பையன் செத்துப்போன மாதிரி நடிப்பதும், அவள் பெற்றுப்போட்ட தாய்மாதிரி அலறுவதும் அவர்களுக்குள் நடந்து கொண்ட வியாபார ஒப்பந்தம்தானா? எப்படி மதகுரு ஏசுவின் சிலுவைப் புண்களைக் காட்டிக் காசு பறிக்கிறானோ, எப்படி வயிற்றில் சேலையைப் பொதிந்து கட்டிக்கொண்டு பிள்ளைத்தாச்சி என்று கூறி, சில பெண்கள் பிச்சை எடுக்கிறார்களோ, எப்படி உடம்பிலும் நாக்கிலும் வேல் ஊசிகளைக் குத்திக் கொண்டு முருகன் பேர் சொல்லி சிலர் பிச்சையெடுக்கிறார்களோ, எப்படி எழுத்தாளன் சோகக் கதைகளை எழுதி, பிழைப்பு நடத்துகிறானோ — அப்படித்தான் இவர்களும் பிழைக்கிறார்கள். உலகில் நல்லபடியாய் பிழைக்க முடியாதா? மனிதனின் நல்லுணர்ச்சிகளைச் சுரண்டித்தான் பிழைக்க முடியுமா?'

எதுவும் புரியாமல் ஆபீசுக்குள் சென்றேன். அங்கு யாரோ, யாரிடமோ ''இது என்னங்க, வெறும் செத்த பிழைப்பு!'' என்று கூறுவது காதில் விழுந்தது.

'அப்படியா? இந்தச் சமுதாய வாழ்க்கையே வெறும் செத்த பிழைப்புத்தானா? இல்லை. இல்லவே இல்லை. பிழைப்பு வேறு; வாழ்க்கை வேறு. நாம் நம் வயிற்றைக் கழுவ நினைப்பது பிழைப்பு. சமுதாய முழுமைக்கும் வயிற்றைக் கழுவ வழி காண்பது வாழ்க்கை. நாம் வாழ்வதற்காகவே பிழைக்கவேண்டும்; பிழைப்பதற்காக வாழக் கூடாது! இந்த எண்ணம், எனக்கு, உங்களுக்கு, அந்தக் கிழவிக்கு, அந்தப் பையனுக்கு எல்லோருக்கும் ஏற்பட்டு விட்டால், நாம் செத்துச் செத்துப் பிழைக்க வேண்டியதில்லை; நன்றாக, பரிபூரணமாக வாழ்ந்த திருப்தியோடேயே சாகலாம்...'

அன்றைய மாலைக் காப்பி கசக்கத்தான் செய்தது, என்றாலும் அந்தக் கசப்பில் நல்ல ருசியும் இருந்தது.

1948

# ஞானமணிப் பதிப்பகம்

## 1

ரிப்பன் பில்டிங்ஸ் கடிகாரத்தையும், உத்தரவாத காலத்தையுங் கடந்து வைராக்கியத்துடன் உழைத்து வரும் தமது கைக் கடிகாரத்தையும் ஒத்துப் பார்த்துக் கொண்ட குருசாமி, ட்ராமை விட்டிறங்கி, கையில் புகைந்து கொண்டிருந்த சிகரெட்டைச் சாவதானமாகப் புகைத்தெறிந்துவிட்டு, ஞானமணிப் பதிப்பகத்தின் இரும்புக் கிராதிக் கேட்டைக் கடந்து உள்ளே சென்றார்.

ஆபீஸ் மணி பதினொன்று காட்டியது; அன்று குருசாமி அரை மணி நேரம் லேட்.

ஆபீசுக்குள் சென்றதும் நேரே ஆஜர் சிட்டையில் கையெழுத்திடச் சென்றார்; தமக்கு முன்பாகவே பதிப்பாசிரியர் தாத்தாச்சாரியார் அதில் கையெழுத்திட்டிருப்பதையும் குருசாமி கண்டார்; கண்டவுடன் வழக்கம் போல் பக்கத்திலிருந்த புரூப் ரீடர் சிங்காரவேலுவிடம் கேட்டார்:

"என்ன வே, கிழவர் அப்பவே வந்திட்டாரா?"

"அவருதான் எட்டரை மணிக்கே வந்திட்டாரே. வெளியிலே போயிருக்கார்; காபி ஸ்டால் பக்கம் போயிருந்தாலும் போயிருப்பார்" என்று பதிலளித்தார் சிங்காரவேலு.

"அம்மாவும் வந்திருந்தாஹளோ?"

"ஆமா. ரெண்டு பேருந்தான். காலங் காத்தாலியே வந்திட்டாங்க. வீட்டுலே சௌகரியக் குறைச்சலோ

என்னமோ?... இத்தினி நாழி இருந்திட்டு இப்பத்தான் வெளியே போறாங்க.''

''சர்த்தான். அம்மா பக்கத்திலே இல்லேன்னுத்தான் ஐயாவுக்குப் பேனுவிலே மை இறங்காதே. கிழடு! வயசு இத்தனை ஆகியும் சபலம் விட்டுதா, பாருங்க!''

''அது அவருக்கில்லெ சார், தெரியணும்.''

''என்னத்தைத் தெரியறது? எடிட்டர் ரூமா, காரிய மாக் காணோம். பக்கத்திலெ ஒரு வங்கிழடை வச்சிக்கிட்டு, அவரு இந்த அநியாயம் பண்ணினு, நமக்கு எப்படி சார் வேலை ஓடும்? இனி அந்த ரூமிலே புண்ணியாவசனம் பண்ணினுத்தான் நமக்கும் நாலு எழுத்து உருப்படியா எழுத வரும்.''

சிங்காரவேலு சிரித்தார்: ''ஏன்? நீங்களும் எவளை யாவது கூட்டிக்கிட்டு வாரது தானே!''

''அது ஒண்ணுதான் பாக்கி'' என்று சிரித்துக்கொண்டே கூறிவிட்டு, வில்ஸ் சிகரெட் ஒன்றைப் பற்ற வைத்தார் குருசாமி. சிகரெட் தீய்ந்து முடிந்ததும் தமது யதாஸ் தானத்தை நாடிச் சென்றார்.

ஆசிரியரின் அறை மிகவும் குறுகிய அறை. அறைக்குள்ளே சூரிய ஒளி தப்பித் தவறிக் கூட வருவதற்கு நியாயமில் லாததால், எப்போதும் அங்கு மின்சார விளக்கு எரிந்து கொண்டே இருக்கும். தலைக்குமேலே இரண்டு கட்டைச் சுதியில் ராகம் பாடியவாறே சுற்றிக்கொண்டிருக்கும் மின் சார விசிறி, காற்றை வீசாவிட்டாலும், அறையின் சவ அமைதியைக் கெடுத்து, சகித்துக் கொள்ளக்கூடிய ஒரு சூழ்நிலையை ஏற்படுத்திக்கொண்டிருக்கும். மேஜைமீது டெலிபோன்; பக்கத்திலே புத்தகங்கள் அடுக்கிய பீரோ; மூலையிலே தண்ணீர்க் கூஜா, பழம் பத்திரிகைக் குப்பை; குப்பைக் கூடை — இது சுற்றுச் சூழ்நிலை.

குருசாமி தமது இடத்தில் அமர்ந்தார். மேலே விசிறி சுழன்றது. மேஜைமீது ஈரங் காயாத 'காலி புருபுகள்'

காய்ந்து கொண்டிருந்தன. அன்றையத் தபாலில் வந்த கடிதங்கள் மேஜையின்மீது இருந்தன.

புரூப் காயும் வரையிலும் குருசாமி கடிதங்களில் கவனம் செலுத்தினர். காதலியிடமிருந்து வரும் கடிதங்களைவிட, இளம் எழுத்தாளர்கள் தங்களை சரோயன்களாகவும், ஜாய்ஸ்களாகவும், மாப்பஸான்களாகவும் பாவித்துக்கொண்டு, தங்கள் சிருஷ்டிகளின் அருமை பெருமைகளைத் தாங்களாகவே அளந்து கொட்டும் கடிதங்கள் ரசமானதாயும் ஹாஸ்யமானதாயும் இருக்குமாதலால், குருசாமிக்கு அவற்றைப் படிப்பதில் ஒரு தனி ஆனந்தம். அந்த ஆனந்தம் அவருக்குத் தமது கதைகளைப் படிக்கும்போது கூட ஏற்படுவதில்லை.

ஆகவே ஆர அமர படித்து முடித்து விட்டுக் காய்ந்து போன 'காலி'களை எடுத்துப் பார்க்க ஆரம்பித்தார்.

அப்போது போர்மேன் கிருஷ்ணசாமி உள்ளே வந்தார். ''சார், பன்னிரண்டாவது பாரம் ஸ்ட்ரைக் ஆர்டர் கொடுக்கணும். மிஷின் காத்துக்கிட்டிருக்கு. இந்தப் புரூபுகளையும் பார்த்துக் குடுத்துட்டா மதியமே பாரம் செட்டப் பண்ணிக்கலாம்'' என்றார்.

''ஸ்ட்ரைக் ஆர்டர் கிழவர் வந்து குடுப்பாரு. இத்தெ இன்னும் அரைமணி நேரத்திலே தந்திருதேன். வந்து வாங்கிக்கிடும்'' என்று பதில் கூறிவிட்டு, புரூபுக்குள் கண்ணை ஓட்டினர் குருசாமி.

அதற்குள், ''ராசா, என்ன வேலை நடக்கு?'' என்ற குரல் கேட்டுத் திரும்பினர்.

அறைக்குள் சுயேச்சை எழுத்தாளர் சொக்கலிங்கம் வந்துகொண்டிருந்தார்; குருசாமி புரூபை மேஜைமீது வைத்துவிட்டு அவரை வரவேற்றார்.

சுயேச்சை எழுத்தாளர் சொக்கலிங்கம் தமிழ் நாட்டில் தமக்கென்று ஒரு இலக்கிய ஸ்தானத்தைச் சம்பாதித்துக் கொண்டு, அதையே மூலதனமாகக் கொண்டு பிழைப்பு

நடத்தி வருபவர். தமிழ் நாட்டு இலக்கிய தர்ம கர்த்தாக்கள் 'அள்ளிக் கொடுக்கும்' அன்பளிப்பிலேயே வைராக்கியத்தோடு வாழ்ந்து வந்ததன் பலனாக, கூடு விட்டுப் போன உடம்பும், குழிவிழுந்த கண்களும், நரையோடிய தலைமயிருமா யிருப்பார் சொக்கலிங்கம்; அதற்கேற்றாற் போல் திடீர் திடீரென வெடிக்கும் அவரது திரிபுரச் சிரிப்பும் சேர்ந்துவிட்டால், அவருடைய பேய்க் கதைகளை நாஸ்திகவாதிகள் கூட நம்பும்படி நேரும். சுயேச்சை எழுத்தாளர் சொக்கலிங்கமும் குருசாமியும் நண்பர்கள்.

"என்ன அண்ணே, ஏது இந்தப் பக்கமா?"

"சும்மாத்தான்; சரி, என்ன புரூப் பாத்துக்கிட்டிருக்கே?"

"அவன்தான் அந்த அண்ணாமலைப் பயல் புத்தகந்தான்...ம்...சரி. உங்க பண்பாடெல்லாம் கைவசம் இருக்கா? இல்லே, வாங்கிட்டு வரச்சொல்லணுமா?"

'பண்பாடு' என்பது அவர்களின் பரிபாஷை.

"எல்லாம் இருக்கு. சீவல் மட்டும் கொஞ்சம் வாங்கிக்கிட்டு வரணும்."

மணி அடித்ததும் பையன் வந்தான்; போய் சொக்கலிங்கத்துக்குப் பிடித்த ரோஜாப்பூச் சீவல் வாங்கி வந்தான். சீவல் வந்ததும், சொக்கலிங்கம் நாற்காலியில் சம்மணம் கூட்டியிருந்துகொண்டு, கும்பகோணம் வெற்றிலையை முனை கிள்ளி, பதமாகச் சுண்ணம் தடவிப் போட்டார்; சிரமமாக ஒரு குத்துத் தூள் புகையிலையையும் வாய்க்குள் செலுத்திக் கொண்டார்.

"என்ன ராசா, கிழவர் இன்னம் வரலியா?"

"வந்துட்டாரு. காப்பி சாப்பிடப் போயிருக்கார்."

"ஜூலியட் கூடவா?"

"ஆமா."

"சரி, அண்ணாமலைப் பயல் என்ன உளறி இருக்கான்?"

''உளர்றது என்ன? மறுமலர்ச்சிக் காரங்களை யெல்லாம் ஒரு மூச்சுக்குத் திட்டியிருக்கான்.''

''உங்க கிழவருக்குப் பிடிச்ச விஷயமாச்சே, அது.''

''அதையெல்லாம்விட பெரிய விஷயம். நம்ம தாத்தாச்சாரியாரையும் விட்டு வைக்கலே. நாருக்காய் வேட்டு வச்சிருக்கான்.''

''ஊஹும்! அப்படியா? அவருக்குத் தெரியுமா. தெரியாதா?''

''அவரு எந்தப் புஸ்தகத்தையாவது அச்சுக்குக் குடுக்கிறதுக்கு முன்னாலே படிச்சிப் பாத்தால்லே தெரியறதுக்கு?''

''ராசா, நான் சொல்றபடி செய். பாரம் ஸ்ட்ரைக் ஆகிறவரையிலும் விஷயத்தைக் கமுக்கமா வச்சிக்க. கொஞ்சம் மூளையோடே வேலை செஞ்சமனு, அண்ணாமலைப் பயலை மட்டுமல்ல—கிழவரையும் ஒரு கை பாத்துப்பிடலாம். ரெண்டு பெருச்சாளிகளும் ஒரே சாக்குக்குள்ளே தானு வந்து விழறதைத் தடுக்கப் பிடாது. அது தரும விரோதம், தெரிஞ்சிதா?''

''அதுக்கென்ன? செஞ்சிருவம்'' என்று பதில் அளித்தார் குருசாமி: சரி, காப்பி சாப்பிடுவமா?''

''அப்பா, இங்கெயா காப்பி சாப்பிடறது? இங்கே காப்பி கழனித் தண்ணி மாதிரியில்லெ இருக்கும். வா, காப்பி ஸ்டாலுக்குப் போவோம்.''

குருசாமிக்கு காப்பி என்றால் போதும்; ஆகவே புரூபையும் சுற்றி மடக்கி எடுத்துக்கொண்டு சொக்கலிங்கத்துடன் கிளம்பினர். ஆபீஸ்நடை இறங்கியதும் எதிரே தாத்தாச்சாரியாரும் சாலாட்சியும் வந்தார்கள்.

''யாரு? சோனவா? எங்கே போறேள்?''

''இப்படி காப்பி ஸ்டால் வரை போறேன். அது தான் குருசாமியையும் நான் சோடி சேத்துக்கிட்டேன்.''

தாத்தாச்சாரியாரால் அந்தச் சொல்லின் 'பொடி'யை உணர முடியவில்லை.

''சரி, போயிட்டு வாருங்க'' என்றார்.

2

மெசர்ஸ் ஞானமணி லிமிடெட் கம்பெனியார் ஞானமணிப் பதிப்பகத்தைத் தொடங்கி வைத்தது, தமிழ் இலக்கியப் பிரசுர உலகில் தாங்கள் ஒரு 'பாட்லி ஹெட்'டாகவோ, 'ஹாடர் அண் ஸ்டாட்ட'னகவோ விளங்கி, தமிழ் இலக்கியத்தை உத்தாரணம் செய்யவேண்டும் என்ற எண்ணத்தோடோ, அல்லது தமிழ் நாட்டில் பட்டினியும் பசியுமாய்க் கிடந்து 'இலக்கிய சேவை' செய்துவரும் சிருஷ்டிகர்த்தாக்களுக்குத் தாங்கள் ஒரு வெண்ணெய்நல்லூர் வள்ளலாக விளங்க வேண்டும் என்ற காரணத்தோடோ அல்ல; தங்கள் அச்சகத்து மூலையில் வேலையற்றுக் கிடக்கும் மெஷினுக்கு ஒரு வேலை கொடுக்கவும், பெருவாரியான உற்பத்திப் பெருக்கத்தில் கழிவு விழும் பொருள்களிலிருந்து உபரிச் சரக்கு உண்டாக்குவதுபோல், தங்கள் பத்திரிகாலயத்துக்குச் செலவழிந்தது போக, மீதமுள்ள துண்டுப் பத்திரிகைக் காகிதங்களை மூலையிலே வெறுங் குப்பையாகக் கிடக்கவிடாமல் தமிழரின் தலையில் அச்சடித்த 'குப்பை'யாக்கிக் கொட்டவும், அப்படிக் கொட்டுவதன் மூலம் தமது பாங்குக் கணக்கில் ஒன்றிரண்டு 'சைபர்கள் கூடுதலாகச் சேர்க்கவும் செய்த வியாபார தந்திரமே தவிர வேறல்ல. ஆகவேதான் தமது பத்திரிகாலயத்தின் மூலையில் குப்பை கூளங்கள் போட்டு வைப்பதற்காக ஒதுக்கி வைத்திருந்த அறையைச் சுத்தி செய்து. அதை ஞானமணிப் பதிப்பகத்தின் காரியாலயமாக மாற்றிவிட்டார்கள்.

ஞானமணிக் கம்பெனி டைரக்டர்களுக்குத் தமிழில் எந்தவிதப் பரிச்சயமோ அபிமானமோ இல்லாவிட்டாலும், பொருள் வருவாயையும் புகழையும் முன்னிட்டு, 'தேச

பக்தி' 'காந்தீயம்' போன்ற சர்வஜன ரஞ்சக லேபிள் களோடு பத்திரிகைத் தொழிலில் இறங்கினர். மேலும், கம்பெனி மானேஜிங் டைரக்டர் ஒரு தற்குறிப் பேர்வழி. ஆகவே, கம்பெனி டைரக்டர்களுக்கு ஸ்டாக் எக்ஸ்சேஞ் சில் பங்கு பிடிப்பதிலிருந்து, கிண்டி குதிரைப் பந்தயத்தில் எந்தக் குதிரையின் வாலில் பணத்தைக் கட்டுவது என்பது வரை ஆலோசகராயிருந்து வந்த ஸ்ரீமான் பஞ்சநதத்தின் ஆட்சியே கம்பெனியில் செல்லுபடி ஆயிற்று. பஞ்சநதம் மாதம் ஐந்நூறு ரூபாய் சம்பளம் பெறும் மானேஜரே யாயினும், மஹிராவணனின் உயிர்த் தலத்தைத் தன்னுள் கொண்டிருந்த கிளியைப்போல், கம்பெனியின் பீஜ கேந்திர மாக வாழ்ந்து வந்தார். ஆகவே, அவருடைய அக்கிரம வழிப் பற்றையோ, சுரண்டலையோ கம்பெனியார் அறிய நேர்ந் தாலும், தமது சொந்த நலனை உத்தேசித்து, 'வாங்குங் கவளத்து ஒரு சிறிது வாய் தப்பின் தூங்கும் களிறோ துயருறு' என்ற சொல்லுக்கு இலக்கியமாய், தம்மையாக்கிக் கொண்டிருந்தார்கள். எனினும் ஞானமணிப் பதிப்பகம் மட்டும் என்ன காரணத்தாலோ மானேஜிங் டைரக்டரின் சொந்த மேற்பார்வையிலேயே நடந்து வந்தது. ஷை பதிப் பகம் தமது சுரண்டலுக்கும் பராமரிப்புக்கும் விலகிப் போனதானது, பஞ்சநதத்துக்குத் தமது சுய மரியாதையை யும் கவுரவத்தையும் பறி கொடுத்தது போலிருந்தது. ஆகவே ஞானமணிப் பதிப்பகம் எந்த வகையிலும் லாபம் தராத கிளை என்பதை மானேஜ்மெண்டாருக்கு நிரூபித்துக் காட்டி, அதைக் கவிழ்ப்பதற்காகப் பல சூழ்ச்சிகள் பண்ணி ஞர். ஏஜெண்டுகளைத் தமது கைக்குள் போட்டுக்கொண்டு, புத்தக விற்பனையை மந்தப் படுத்தவும், புத்தகங்களை அவர்கள் திருப்பி அனுப்பவும் வேண்டிய வேலைகள் செய் தார்; அதற்காகும் நஷ்ட ஈட்டையும் தாமே ஏஜெண்டு களுக்குக் கொடுத்து உதவினர். ஆனல், இந்தக் காரியங் களால் எல்லாம் ஞானமணிப் பதிப்பகம் ஒரு சிறிதும் அசைந்து கொடுக்கவில்லை. ஆகவே, ஞானமணிப் பதிப் பகத்தின்மீது சர்வ ஜன வெறுப்பையும் திரட்டுவதற்கு, அவர் ஒரு குயுக்தி செய்தார். அந்தக் குயுக்தியின் விளைவே

தமது நண்பர் அண்ணுமலை எழுதிய 'தமிழ் இலக்கிய விமரிசனம்' என்ற நூல் மேற்படிப் பதிப்பகத்தில் அச்சடிக்கப்பட்டுக் கொண்டிருந்ததற்குக் காரணம்.

இந்த அழகில் ஸ்ரீமதி சாலாட்சியம்மையாருக்குக் கம்பெனியாரிடமிருந்த செல்வாக்கின் காரணமாக, அம்மையவர்களின் சிபாரிசின் பேரில், ஸ்ரீமான் தாத்தாச்சாரியார் பதிப்பகத்தின் ஆசிரியப் பதவியை மாதம் முன்னூறு ரூபாய் சம்பளத்தில் ஏற்றுக்கொண்டார். தாத்தாச்சாரியார் இளமைக் காலத்தில் ஆவி உலக ஆராய்ச்சியிலும் பிர்ம ஞான சங்கத்திலும் ஈடுபட்டிருந்தார்; பின்னுல் பிர்ம ஞான சங்கம் அடையாறு ஜிகைந் துப்பட்டாக்களுக்கே கட்டுப்படியாகும் என்பதை உணர்ந்து, தொழில் முறையை உத்தேசித்து நூல் போட்டுப் பார்க்கவும் ஹரிகதை பண்ணவும் உபயோகப்பட்டு வந்த கம்ப ராமாயணத்தை, சாறு பிழிந்து சக்கையாக்கித் தமிழ் மக்களுக்கு அமுது படைக்க வந்தார்; 'கம்பனி'லே பல பாடல்கள் மனப்பாடமாய் இருந்ததாலும், பிழைக்கும் வழியை உத்தேசித்துப் பிறருடைய கருத்துக்களை மான வெட்கமின்றிக் கூசாமல் தமதாக்கிக் கொள்ளும் துணிச்சலும் வலிமையும் பெற்றிருந்ததாலும், இலக்கிய உலகில் அவர் பெயரும் அச்செழுத்துக்களில் அடிபடலாயிற்று. மேலும், இன்றைய நவநாகரிக உலகின் பெரிய மனுஷ தத்துவமான காசம், க்ஷயம், விரைவாதம், நீரிழிவு முதலிய பெருமை மிக்க வியாதிகளில் ஒன்றுக்கு ஆளானவராதலாலும், அவருக்குப் பொருள் வருவாயிலும் புகழ் வருவாயிலும் ஏற்றங் கண்டு வந்தது.

எனினும், சந்தர்ப்ப பேதங்கள் காரணமாக, தாத்தாச்சாரியார் தமது பழைய இலக்கிய கோஷ்டியிலிருந்து விலக்கப்பட்டும் கவனிப்பற்றும் கிடந்தார். இன்றைய தமிழ் நாட்டில் தனி மனிதக் கொள்கை எடுபடாது என்பதனுல், எல்லோரும் தமக்கென்று நாலு சிஷ்யப்பிள்ளைகளைச் சேர்த்துக்கொள்ளவோ, அல்லது பிறர் கொள்கைக்குத் தம்மைச் சிஷ்யனுகவோ செய்வதையும் தாத்தாச்சாரியார் உணர்ந்தே

இருந்தார். ஆகவே செத்துவரும் பழம் பரம்பரையைத் தமது தலைமையில் புதுப்பிக்க எண்ணுவதை விட, வளர்ந்து வரும் மறுமலர்ச்சிப் பரம்பரையில் தமக்கு ஒரு இடம் கிடைத்தால் போதும் என்று தவித்துக்கொண்டிருந்தார். எனவே ஒரு காலத்தில் மறுமலர்ச்சியைக் கேலி செய்து, 'ஹிஹிஹி' என்று சொல்லிவந்த தாத்தாச்சாரியார் இன்று அதே மறுமலர்ச்சியைப் புகழ்ந்து புகழ்ந்து கட்டுரைகள் எழுத ஆரம்பித்தார். மறுமலர்ச்சியாளர்களோ இந்தப் பழம் பெருச்சாளியின் மாய்மாலத்தைக் கண்டுகொண்டு, அவரைச் சமயம் பார்த்துக் குழியில் இறக்கக் காத்துக் கொண்டிருந்தார்கள்.

ஆகவே, பஸரட் இட்டிலி, வசன கவிதை, வெஜிடபிள் பிரியாணி, தேசிய முஸ்லிம் என்பன போன்ற இரண்டுங் கெட்டான் வாழ்வில், தாத்தாச்சாரியார் இரவும் பகலும் கூடுகின்ற இரணிய நேரம் போல, எதிலும் கூட்டு இல்லாது வாழ்ந்து வந்தார். அதனால், ஆங்கிலேயரும் ஒப்புக்கொள்ளாத, இந்தியர்களும் வரவேற்காத ஆங்கிலோ இந்தியர்களைப் போல் ஸ்ரீமான் தாத்தாச்சாரியாருடைய சிருஷ்டிகளும் திரிசங்கு நிலையிலேயே திரிந்து வந்தன. எனினும், வாலிவத நியாயத்திலிருந்து வைட்டமின் 'இ' வரை அநேகத்தைக் கரைகண்டவர் மாதிரி, அவர் ஞானமணிப் பதிப்பகத்தின் மூலம் 'ஆயகலைகள் அறுபத்து நான்கினையும்' பதிப்பித்து வந்தார்.

ஸ்ரீமான் தாத்தாச்சாரியாருக்குப் பக்கத்திலே ஒரு பெண் பிறவி இருந்தால்தான் ஒன்றிரண்டு எழுத்துக்களாவது எழுத ஓடும். அப்படி அவர் பக்கத்திலே இருக்கும் ஐம்பது வயசுப் பேரிளம் பெண், அவரது வாயில் சுருள் மடித்துக் கொடுக்காவிட்டாலும், சொகுசுக் கதை பேசி, ஸ்பரிச சுகமாவது காட்டவேண்டும். அந்த ஸ்பரிச சுகத்திலே தாத்தாச்சாரியார் மெய்ம்மறந்துபோய் எந்த பாரத்துக்கு ஸ்ட்ரைக் ஆர்டர் கொடுக்கிறோம் என்பதையே

உணராமல், கையெழுத்தைப் போட்டு விடுவார். இந்த பலவீனத்தைக் கண்டறிந்தவர் ஸ்ரீமான் பஞ்சநதம் மட்டுமல்ல; தாத்தாச்சாரியாருக்கு உதவியாசிரியராக வேலை பார்த்து வந்த குருசாமியும் கூடத்தான்.

குருசாமி மறுமலர்ச்சிப் பரம்பரையில் வந்த கடைக்குட்டி வாரிசு. இளமையும் அனுபவமின்மையும் அவரை இலக்கிய உலகில் பயமிறந்த நசிகேதப் பிறவியாக்கி விட்டிருந்தன. எனினும் வயிற்றுப் பிழைப்பு, வாழ்க்கை லட்சியம் என்ற இருவேறு முரண்பட்ட தத்துவங்களையும் பிரத்தியட்ச உலகில் ஒருமிக்க நிறைவேற்ற இயலாது என்பதைத் தெரிந்துகொள்ளாத முறையில், ஞானமணிப் பதிப்பகத்தில் மாசம் அறுபது ரூபாய்ச் சம்பளத்தில் உதவி ஆசிரியராக அமர்ந்து வேலை செய்தார் குருசாமி. இன்றைக்குள்ள சென்னை வாழ்க்கையில் அறுபது ரூபாயை வைத்துக்கொண்டு காற்றைத்தான் புசித்து வாழலாம் என்றாலும், காப்பியையும் வில்ஸ் சிகரெட்டையுமே நம்பி அவர் உயிர் வாழ்ந்து வந்தார். எனினும், தாது கெடாத அவருடைய உடல் நலம் ஒரு வேளை புசிக்கும் இந்த யோகீச வாழ்வால் உலைந்து போய் விடவில்லை; அவ்வப்போது ஒன்றிரண்டு பத்திரிகைகளுக்கு எழுதி, அதிலிருந்து வரும் 'அஞ்சு பத்து' ரூபாய்கள், துண்டு விழும் அவருடைய கடன் பட்ஜெட்டை அடைக்க உதவும் சங்கநிதி பதுமநிதிகளாக விளங்கும்.

பத்திரிகாசிரியத் தொழில் என்பது தேவேந்திரன் சபையிலே பிரஹஸ்பதி வீற்றிருப்பது போலிருக்கும் என்று நம்பாத அளவுக்கு குருசாமி ஞானஸ்தராயிருந்தாலும், அறுபது ரூபாய்ச் சம்பளமும் பத்திரிகை ஆபீஸ் சூழல்களும் அவர் மனந்தாழத்தில் கிடந்த நேர்மையுணர்ச்சியைப் பலப்படுத்தி வந்தன. ஆகவே இளம்பிள்ளைத் துணிச்சலோடு, தமக்குப் பிடிக்காத காரியத்தை எதிர்த்துப் போராடவும் அவருக்குத் தைரியம் பிறந்திருந்தது. மேலும், தமது தலைமை ஆசிரியர் தாத்தாச்சாரியாருடைய மட்டமான இலக்கிய அறிவும், அதற்கு எதிர்மறையாக அவர்

பெறும் ஊதியமும் குருசாமியைக் கிளறிவிட்டன. ஆகவே ஸ்ரீமான் தாத்தாச்சாரியார் போன்ற இலக்கியப் புல்லுருவி களையும் களைந்தெறிய வேண்டும் என்று அவர் கருதிய தோடு, ஷேக்ஸ்பியரின் சோக நாடக தத்துவங்களைப் பற்றி பிராட்லி எழுதியதைத் திருப்பித் திருப்பிப் படித்ததனுலோ என்னவோ, தாத்தாச்சாரியாரைக் கவிழ்ப்பதற்கு அவரு டைய பிரஸ்தாப பலவீனத்தைப் பயன்படுத்திக் கொள்ள வும் நினைத்தார் குருசாமி.

இதற்கெல்லாம் பாதை வகுத்துக் கொடுத்த மாதிரி, ஸ்ரீமான் அண்ணுமலைப் பிள்ளையின் 'தமிழ் இலக்கிய விமரி சனம்' ஸ்ரீமான் பஞ்சநதத்தின் சிபாரிசின்பேரில் ஞான மணிப் பதிப்பகத்துக்குள் வந்துசேர்ந்தது. அண்ணுமலைப் பிள்ளையும், தாத்தாச்சாரியும் ஆரம்ப காலத்தில் மூனிச் சில் உடன்படிக்கை செய்து கொண்ட சேம்பர்லேன்-ஹிட்லர் மாதிரி இருந்து வந்தார்கள்; எனினும், பின்னுல் காலப் போக்கில், யுத்தப் பிரகடனம் செய்த சர்ச்சில்-ஹிட்லராக மாறிவிட்டனர். எனினும், இருவரது நோக்கமும் மறு மலர்ச்சியைக் கண்டிப்பதுதான்; ஆனுல், பிள்ளையவர்களின் 'இலக்கிய விமரிசனம்' மறுமலர்ச்சியாளர்களை நையாண்டி செய்வதோடு மட்டுமல்லாமல், ஸ்ரீமான் தாத்தாச்சாரி யார் தலையிலேயும் கை வைக்கப் பார்த்தது. இம்மாதிரி யெல்லாம் ஏதாவது நேரும் என்பதை முன்கூட்டியே தெரிந்துவைத்தவர் மாதிரி, பஞ்சநதம் அந்த நூலை அவசர அவசரமாக அச்சேற்றும்படி தாத்தாச்சாரியாரிடம் சொல்லி வந்தார். தாத்தாச்சாரியாரும் வழக்கம்போலவே, அந்த நூலின் மூலப்பிரதியை வாசிக்காமலே, 'எல்லாம் புரூபில் பார்த்துக் கொள்ளலாம்' என்ற மனத் தெம்போடு, அதை அச்சுக்குக் கொடுத்து விட்டார்.

இந்தச் சூழ்நிலையைப் பயன்படுத்திக் கொண்டுதான் குருசாமி தமது நண்பர் 'சுயேச்சை' சொக்கலிங்கம் சொல்லிக் கொடுத்த மாதிரி, தாத்தாச்சாரியாரை வச மாய் மடக்கி வேட்டுவைக்கத் திட்டமிட்டார்.

3

தென்காசி

. . . . . . . . . . . . . .

அன்புள்ள நண்பர் பஞ்சநதத்துக்கு,

நமஸ்காரம்.

'தமிழ் இலக்கிய விமரிசனத்தின்' முதல் பத்து பாரங்களும் வந்து சேர்ந்தன. மகிழ்ச்சி. புத்தகம் வெளி வரட்டும். அப்புறம் பாருங்கள். தமிழ் நாட்டையே அது ஒரு கலக்குக் கலக்கிவிடும். இந்த மாதிரியெல்லாம் துணிந்து இறங்கினால்தான் இந்தப் பயல்களுக்கும் புத்தி வரும்.

இதையெல்லாம் விட ரசமான விஷயம். உங்கள் பதிப்பாசிரியர் தாத்தாச்சாரியாருக்கும் நான் உள்ளே திரி வைத்திருக்கிறேன். கிழட்டுப் பிணத்துக்கு அதைத் தெரிந்து கொள்ள அத்தனை ஞானம் ஏது?

அன்புள்ள
அண்ணாமலை.

4

அன்று ஸ்ரீமான் தாத்தாச்சாரியார் ஸ்ரீமதி சாலாட்சிக்கு 'குத்துவிளக்கெரிய கோட்டுக் கால் கட்டில்மேல்' என்ற ஆண்டாள் பாசுரத்துக்கு பாஷ்யமுரைத்துக் கொண்டிருக்கும் சமயம் பார்த்து, குருசாமி பதின்மூன்றும் பாரத்துக்கு ஸ்ட்ரைக் ஆர்டர் வாங்கி அச்சுக்குக் கொடுத்து விட்டார்.

பதின்மூன்றும் பாரம் — தாத்தாச்சாரிக்கு அண்ணாமலை திரி வைத்திருக்கும் பகுதி—இரண்டாயிரம் பிரதிகள் மெஷினில் ஏறி இறங்கி விட்டன. அச்சடித்த பாரம் மேஜைமீது இருந்தது.

குருசாமி அந்த பாரத்தைத் தம்முள் படித்து, லேசாகச் சிரித்துக்கொண்டார்.

"என்ன குருசாமி? என்ன பார்க்கிறேள்?" என்று மூக்குக்கண்ணாடி மூக்குக்கே கண்ணாடியாய் இலங்க, தலையைக் கவிழ்த்துக் கொண்டு கேட்டார் தாத்தாச்சாரியார்.

"எல்லாம் அண்ணாமலை புஸ்தகம்தான், சார். மறுமலர்ச்சிக்காரர்களையெல்லாம் வேணுமின்னே கண்ணுவச்சித் திட்டியிருக்கார், சார்."

"வாஸ்தவந்தானே. இன்னிக்குள்ள மறுமலர்ச்சியாளர்கள்லெ எத்தனை பேர் முறையா தமிழ் படிச்சிருக்கா? இலக்கண இலக்கியமோ அவாள் வச்சது வரிசையாயிருந்தா?"

"அப்படி ஒரே அடியா 'டாம்' பண்ணிற முடியாது நம்ம சோணாவை அப்படிச் சொல்ல முடியுமா? அதே மாதிரி எத்தினியோ பேர். இன்னைக்குள்ள பத்திரிகை வளர்ச்சிக்கே காரணம், மறுமலர்ச்சிக்காரங்கள்தான், சார்" என்று தமது பரம்பரையின் பவிசை அளந்து கொட்டினார் குருசாமி.

"ஒண்ணு ரெண்டு பேர் இருக்கத்தான் செய்யறா. ஆனா, அவாள்ளாம் தங்களை விட்டா, வேறே ஆளே தலைதூக்க முடியாதுன்னு எண்ணம். பாருங்கோ, நான் பழைய கோஷ்டியைச் சேர்ந்தவன்தான். ஆனா அதை விட்டு விலகி, புதுப் பரம்பரைக்கு வந்தாலும் அவாள் அதை உணர்றதும் இல்லே; ஒப்புக் கொள்றதும் இல்லெ" என்று சமயம் பார்த்துத் தமது தவிப்பைப் புலப்படுத்திக் கொண்டார் தாத்தாச்சாரியார்

இந்தக் கேள்விக்கு முகஸ்துதியாகவேனும் பதில் கூறித் தமது நேர்மையைப் பங்கப்படுத்த வேண்டாதவராக, குருசாமி தலையை ஆட்டிக் கொண்டே, புருபில் கண்ணைத் திருப்பினார்.

தாத்தாச்சாரியார் ஒரு நிமிஷம் கண்ணாடிக்கு மேலாகப் பார்த்து விட்டு, சாலாட்சியிடம் திரும்பினார். திரும்பி, 'கைத்தலம் அடித்தலம் வைத்தலுமே' என்ற

கலிங்கத்துப்பரணி கடை திறப்புப் பாடலுக்கு விசே டார்த்தங்கள் கண்டு கூறிக் கொண்டிருந்தார்.

திடீரென, குருசாமி ஆசிரியர் பக்கம் திரும்பி, ''சார், இந்தப் 'பாசேஜை'ப் படிச்சிப் பாருங்க. உங்களையும் அண்ணுமலையார் விட்டு வைக்கலெ போலிருக்கே'' என்று சிரித்துக் கொண்டே, கையிலிருந்த பாரத்தை ஆசிரியரிடம் நீட்டினுர்.

''என்னது?'' என்று கேட்டுவிட்டு, அந்த பாரத்தை வாங்கிப் படித்தார் ஆசிரியர்.

''ஆமா, குருசாமி. வாஸ்தவந்தான். என்னையுந்தான் கிண்டல் பண்ணியிருக்கார்'' என்று கண்டறியாதன கண்டு விட்டதுபோல் அசடு வழியச் சொன்னுர். பஞ்சடைந்த கிழட்டுக் கண்களில் ஏக்கமும் ஏமாற்றமும் தெறித்தன. சாலாட்சியின் மடிமேல் கிடந்த கரம் பாரத்துக்குத் திரும்பியது.

''என்ன குருசாமி, இந்த பாரம் ஸ்ட்ரைக் ஆயிடுத்தா?''

''நேத்து நீங்கதானே ஸ்ட்ரைக் ஆர்டர் கொடுத்தீங்க. பாரம் ஸ்ட்ரைக் ஆகி முடிஞ்சிட்டுது.''

ஆசிரியர் யோசித்தார்.

''என்ன குருசாமி, இத்தனை பாரத்தையும் 'டெஸ்ட்ராய்' பண்ணிட்டா என்ன?''

''அது முடியாது சார். ஏற்கனவே பஞ்சநதத்துக்கும் நமக்கும் கீர்பூருன்னு இருக்கு. இரண்டாயிரம் பாரங்களை மூலையிலெ போடறதுன்னு மானேஜ்மெண்டுக்குப் பதில் சொல்லி ஆகணும். மேலும், அண்ணுமலையாருக்கும் அந்த அடிச்ச பாரம் போயிருக்கு''

தாத்தாச்சாரியாருக்கு, தம் தலையிலே தாமே மண்ணை வாரிப்போட்டுக் கொண்டது போலிருந்தது. விழித்தார்.

''அப்ப என்ன பண்றது?'' என்று அங்கலாய்த்தார்.

"இப்ப என்ன பண்ண முடியும்? மானுஸ்கிரிப்டை அச்சுக்குக் கொடுக்கிறப்பவே கவனிச்சிருக்கனும். ம்..... நீங்கள்தான் என்ன பண்ணுவிங்க. அவசரத்திலே குடுத் தாச்சி. உங்க கண்ணுலேயே அகப்படலேன்னு, எனக்கு அவ் வளவு லேசிலெ அகப்படுமா?" என்று நக்கல் பண்ணினார் குருசாமி.

"சரி. இப்ப நாம் இதுக்கு என்ன பண்ண முடியும்?"

"பரவாயில்லே, சார். நீங்க மட்டும் காரசாரமா ஒரு முன்னுரை எழுதிப் பிடுங்க. மறுமலர்ச்சிக்காரங்களே இப் படியும் திட்டுராங்க என்பதைக் காட்டுற மாதிரி, ரொம்ப வன்மையா கண்டித்து ஒரு முன்னுரை எழுதிட்டா, உங்க எண்ணமும் நிறைவேறினாப்லெ இருக்கும்; அண்ணாமலே மூஞ்சியிலேயும் கரியைப் பூசினாப்லெ இருக்கும்" என்று மந் திராலோசனை கூறினார் குருசாமி.

"சரி, நாளையே எழுதிப்பிடுவம்" என்று கூறிக் கொண் டார் ஆசிரியர்.

சுயேச்சை எழுத்தாளர் சொக்கலிங்கம் சொல்லிய மாதிரி, இரண்டு பெருச்சாளிகளும் ஒரே இடத்தில் மாட்டிக் கொள்ளப் போகின்றன என்ற உற்சாகத்தில் தன்னுள் நகைத்துக் கொண்டார் குருசாமி. மேலும், புற்றுக்குள் ஊரான் கையை விட்டுப் பார்ப்பதுபோல், அண்ணாமலையைக் கொல்ல தாத்தாச்சாரியாரையே கைக் கருவியாக உபயோ கிக்க முடிந்த சௌகரிய சந்தர்ப்பமானது, அவருக்கு வெள் ளையரசாங்கத்தின் ராஜதந்திரத்தை நினைவூட்டியது.

5

டெலிபோன் மணி அடித்தது.

"ஹலோ——

"...ம்...யாரு? டைரக்டரா கேட்டாரு — —

"ஆமா, தாத்தாச்சாரியார்தான் பேசறேன்——

''அண்ணாமலை புஸ்தகமா? அநேகமா முடியிற தரு வாயிலெதான் இருக்கு......ம்......அவரு கடிதம் எழுதியிருக் காரா?——

''பொங்கலுக்குள்ளயா? அதுக்கென்ன, முடிச்சிறலாம். ஒரு 'போர்வேர்ட்' எழுதணும். அதை முடிச்சிட்டா, வேலை முடிஞ்ச மாதிரிதான்—

''சரி, பாரங்கள் அவருக்குப் போயிக்கிட்டிருக்கு—

''ஹலோ—

''ஹலோ.''

ரிஸீவரைக் கீழே வைத்தார் ஆசிரியர்.

## 6

முன்னுரையை எப்படியோ எழுதி முடித்தார் தாத்தாச் சாரியார்.

அண்ணாமலையாரைக் கடிந்து கொள்வதற்கு தாத்தாச்சாரி யாருக்கு நிறைய விஷயங்கள் இருந்த போதிலும், தம் மையும் சேர்த்து அவர் திட்டிய காரணத்தால் சொல்லில் நிதானமும் நடு நிலைமையும் தவறி, கழைக் கூத்தாட்டம் போட்டிருந்தார். குருசாமி அந்த முன்னுரையைப் பற்றி வானளாவப் புகழ்ந்துவிட்டு உடனடியாய் அச்சுக்குக் கொடுத்துவிட்டார். புத்தகம் உருவாகி பைண்டு செய் யப்பட்டு, மேஜைமீது வந்து இருந்தது.

பசை ஈரம் காயாத அந் நூலைத் திருப்பி அது விளை விக்கப் போகும் குருக்ஷேத்திர பயங்கரத்தை குருசாமி ஒருகணம் சிந்தித்துப் பார்த்தார்.

தாத்தாச்சாரியாரும் தமது முன்னுரையைத் திருப்பித் திருப்பிப் படித்துக் கொண்டிருந்தார்.

இந்த வேளையில், சுயேச்சை எழுத்தாளர் சொக்க லிங்கம் தமது ஜிப்பாக் கைகளைத் திரைத்துச் சுருட்டிய

வாறே கையில் வெற்றிலைப் பெட்டி சகிதம் உள்ளே வந்தார்.

தமது மெலிந்த கரங்களை ஒன்று சேர்த்து நமஸ்கரித்து விட்டு, "என்ன சார், என்ன வேலை நடக்கு?" என்று கேட்டுக்கொண்டே நாற்காலியில் அமர்ந்தார்.

தாத்தாச்சாரியார் 'வில்லு வைக்க' புது ஆள் கிடைத்து விட்ட தைரியத்தில், தமது முன்னுரையைப் படிப்பதற்காக, பீடிகை போட்டார்.

"நம்ப அண்ணாமலை புஸ்தகம் எழுதியிருக்கிற அழகைப் பார்த்தேளா?"

"ஆமா ஆமா, ராசா கூடச் சொன்னான். பயலை நசுக்கினாத்தான் சரியா வருவான்" என்று அழுத்தத்தோடு வக்காலத்து வாங்கினார் சோணு.

"சரி, வாசிக்கிறேன், சேளுங்க" என்று கூறிவிட்டு, தமது முன்னுரையை வாசித்துக் காட்டினார். இடையிடையே குருசாமியும் சொக்கலிங்கமும் சிரித்துக் கொண்டதற்கு அர்த்தம், தாத்தாச்சாரியார் தாமாக முதுகைக் குனிந்து கொடுக்கும் இடங்களில் 'வாடா மகனே!' என்று மனசுக்குள் வஞ்சம் கூறிக் கொள்வதின் விளைவேயாகும்.

தாத்தாச்சாரியார் வாசித்து முடித்தார்: "என்ன சோணு? இது போருமா?"

"பேஷா, பய செத்துப் போகமாட்டான் செத்து!"

"இனிமே நம்மெ ஒண்ணும் குத்தம் சொல்ல முடியாது, பாருங்க" என்றார் தாத்தாச்சாரியார்.

"அது சரிதான். ஆனா, நீங்க நான் சொல்றபடி செய்யணும். எஸ். பி. யைத் திட்டிருக்கான். வேறெ யாரு? ரா. ஸ்ரீ. யைத் திட்டிருக்கான். நீங்க இவங்களை யெல்லாம் தேடிப்போயி, விஷயத்தை நேரிலே எடுத்துச் சொல்லி, அண்ணாமலை மேலே எதிர்ப்பைக் கிளப்பி விடணும். நீங்

களா முந்திக் கிட்டியன்னு, உங்க பாடு ஐயந்தான். எஸ். பி., ரா. ஸ்ரீ. இவங்களை யெல்லாம் கண்டு, அண்ணாமலை தம்மை இழிவு படுத்தியதுக்காக, 'டிபமேஷன்' 'கிளெய்ம்' பண்ணச் சொல்லுங்க.''

''சரி. நல்ல யோசனைதான். இன்னிக்கே பண்ணிடு றேன்'' என்று தெரியாத்தனமாய்ச் சொன்னார் தாத்தாச் சாரியார்.

''அது மட்டும் போருது. புத்தகத்தை உடனடியா ரிலீஸ் பண்ணிடணும். ஒரு காப்பி கூட, ஆபீசுக்குள்ளே இருக்கக் கூடாது. எல்லாப் பத்திரிகைகளுக்கும் மதிப்புரைப் பிரதி போயாகணும். மதிப்புரைக்கும், சேல்சுக்கும் பிரதி கள் போனப்புறந்தான் அண்ணாமலைக்கே புத்தகம் போயிச் சேரணும். இல்லென்னா மானேஜ்மெண்டார் தயவினாலே புத்தகமே வெளியே போகாமல் நின்னிரும்'' என்று மேலும் யோசனை கூறினார், குருசாமி.

தாத்தாச்சாரியாருக்கு இருவர் யோசனையும் சரியாகவே பட்டது. அப்படியே செய்வதாகவும் வாக்குறுதி கொடுத் தார். அவருடைய கண்மறைவில் நடந்து வரும் சதியை அவரால் உணரக் கூடவில்லை.

இப்படி மூவரும் பேசிக் கொண்டிருக்கும் வேளையில் சாலாட்சி யம்மாள் உள்ளே வந்தாள். சோணுவின் முன் னிலையில் தாத்தாச்சாரியார் தமது 'ஜூலியட்' டுடன் இருக்க மாட்டாராதலால், ''என்ன சோணு? இருங்க. இப்ப வந்திடுறேன்'' என்று கூறிவிட்டு வெளியே போய் விட்டார்.

தாத்தாச்சாரியார் போன பின்பு குருசாமியும், சொக்கலிங்கமும் தமது சதியைத் தொடங்கினார்கள்.

''ராசா எப்படி, பாத்தியா? கிழடுக்குக் கொஞ்சங் கூட தலையிலெ கிடையாது'' என்று தலையைக் கொட்டிக் காட்டினார் சோணு.

குருசாமி சிரித்தார்.

''இதோ பாரு. நம்ம வேலே இனிமேத்தான் இருக்கு. பத்திரிகைக் காரர்களுக்கோ இந்தப் புஸ்தகம் எப்பண்டா வெளியே வரும்னு இருக்கு. வெளியே வந்தவுடனேயே வயித்தெரிச்சல் தீர, இதை நச்சிப் பிடுவான் நச்சி!''

''ஆமா, இந்தத் தடவை ரெவ்யூவுக்கு அனுப்பாத பத்திரிகைக்குக் கூட, நாங்க அனுப்பப் போறோம். கூட நாலு உதை விழட்டுமே!''

''வாஸ்தவந்தான். ஆனு எவனும் கிழவரையும் விட்டு வைக்க மாட்டான். மறுமலர்ச்சிக்காரனுக்கு இதைப் போல வேறெ சந்தர்ப்பம் கிடையாது. சக்கரவ்யூகத்துக் குள்ளே அகப்பட்ட அபிமன்பு கதைதான். ஆனு, இதுக்கு மேலே நாம ஒரு காரியம் செய்யணும். இன்னிக்குச் சாயங் காலமே எஸ். பி, ரா.ஸ்ரீ. இவர்களை யெல்லாம் கண்டு, தாத்தாச்சாரியாரையும் சேத்து மாட்டும்படியாத் தூண்டி விட்டுட்டம்னு, நம்ம காரியம் முடிஞ்சிரும். அப்புறம் மருந்து தானு வேலே செய்ய ஆரம்பிச்சிரும்'' என்று தமது சதியின் நியாய தீர்க்கங்களை விளக்கினுர் சொக்க லிங்கம்.

குருசாமி தலையை ஆட்டி விட்டு, மானேஜரைக் கூப் பிட்டார். கூப்பிட்டு, அன்று மாலேயே புத்தகம் வெளி யிடப்பட வேண்டுமென்றும், ஏஜெண்டுகளுக்கும், பத்தி ரிகைகளுக்கும் உடனே புத்தகங்கள் போயாக வேண்டும் என்றும், காரியார்த்தமாக, அண்ணுமலேக்கு இரண்டு நாள் சுணங்கியே புத்தகம் போய்ச் சேரவேண்டும் என்றும் ஆலோசனே கூறினுர்.

பிறகு சொக்கலிங்கமும், குருசாமியும் காப்பி ஸ்டா லுக்குச் சென்றனர்.

## 7

''அண்ணுமலேயின் 'தமிழ் இலக்கிய விமரிசனம்' ஒரு சல்லித்தனமான முயற்சி.''
—கு. ர.



"இந்த நூலுக்கு மதிப்புரையே தேவையில்லை; வெறும் குப்பை." —உண்மை விளம்பி.



"அண்ணாமலையார் மட்டுமல்ல; ஸ்ரீ தாத்தாச்சாரியாரும் சேர்ந்து திருட்டுக் களவாணித்தனம் செய்ததின் விளைவாகவே இந்நூல் வெளிவந்திருக்கிறது." —ஜெயமணி.



அண்ணாமலை யுன்னை
அடுப்பில் முறிச்சி வச்சிக்
கொன்றாலும் எம்மனசின்
கோபங்கள் தீராது!



—ஒரு கவி.

ஞானமணி—சென்னை.
முன்னுரையை நீக்கவும். வருந்துகிறேன்.



—அண்ணாமலை.
(தந்தி)

ஞானமணிப் பதிப்பகம்—சென்னை.

தாங்கள் வெளியிட்டுள்ள 'இலக்கிய விமரிசனம்' புத்தகத்தில் என்னை இழிவு படுத்திக் கூறுவதற்கு, ஏன் தங்கள் மீது நடவடிக்கை எடுக்கக் கூடாது? எஸ். பி.



தாத்தாச்சாரியார்,
ஞானமணி · சென்னை.

ஐயா,
என்னுடைய கட்சிக்காரர் ரா. ஸ்ரீ., நீர் 'தமிழ் இலக்கிய விமரிசனம்' என்ற நூலை வெளியிட்டதன் மூலம், தமக்கு மான நஷ்டம் ஏற்படுவதாகப் புகார் செய்கிறார். ஆகவே, உம்மீது ஏன் சட்ட பூர்வமான நடவடிக்கைகள் எடுக்கக் கூடாதென்பதற்குத் தகுந்த காரணம் காட்டவும்.



—ராஜையா
(அட்வகேட்)

அண்ணுமலே,
தென்காசி.

நமஸ்காரம். இத்துடன் எங்களுக்கு வந்துள்ள வக்கீல் நோட்டீஸ் முதலியவற்றை அனுப்பி யிருக்கிறோம். உங்களுடைய பதிலே உடனே எதிர்பார்க்கிறோம்.

தங்கள் தந்தி வந்தது. புத்தகங்கள் விற்று விட்டன. எதுவும் செய்ய முடியாது.

இப்படிக்கு,
சங்கரன்.
(ஞானமணி நிர்வாகிக்காக)

## 8

பஞ்சநதம் ரிசீவரை எடுத்தார்.

"ஹலோ—

"பஞ்சநதந்தான் பேசறேன். டைரக்டர் இருக்காரா?—

"நான் பேசணுமின்னு சொல்லு—

"ஆமா, நான்தான் பேசறேன். பாத்தியளா, அந்தப் புஸ்தகத்துக்கு எப்படி 'ரிஸெப்ஷன்' இருக்குன்னு?—

"இந்த மாதிரி ஏதாச்சும் நடக்குமின்னு எனக்குத் தெரியும் சார். தாத்தாச்சாரியார் சாலாட்சிக்கு வேண்டியவராயிருந்தாலும்—

"கூட ஒரு சின்னவன், குருசாமி இருக்கானே, அவன் ஒரு வெடிசுட்டி—

"என்ன பண்றதாவது? இத்தனைக்கும் பெறவும் அதைக் 'கண்டினியூ' பண்றதுன்ற —

"ம்...சரி. ஆடிட்டரை வரச் சொல்லிருதேன். நாளைக்கே கணக்குப் பாத்துப்பிடுவம்—

"ம். சரி"

பஞ்சநதம் ரிசீவரைக் கீழே வைத்தார்.

## 9

**முடிவில்:**

ஸ்ரீமான் தாத்தாச்சாரியார் கம்ப ராமாயணமும் ஸ்ரீமதி சாலாட்சியுமே துணையாக, யாரும் ஏற்றுக் கொள்ளாத தனிமனிதனாக, ஞானமணிப் பதிப்பகத்தை விட்டு வெளியேறினார்.

ஸ்ரீமான் அண்ணாமலை தலை நிமிர முடியாமல் தமிழ் விமர்சகப்புலிகள் ஒங்கியறைந்து விட்டதாலோ என்னவோ, தாம் கூற வந்ததைக் கூறிவிட்டோம் என்ற திருப்தியோடு இலக்கியத்துக்கும் தமக்கும் இனித் தொடர்பே வேண்டாம் என்ற சுவானுபூதியோடு ஒரு குருகுலத்தில் ஐக்கியமாகி விட்டார்.

உதவியாசிரியர் குருசாமி தாம் நினைத்த காரியத்தைத் திருப்திகரமாகச் செய்து, இலக்கிய உலகின் இரண்டு புல்லுருவிகளை வேட்டு வைத்து விட்டோம் என்ற மனத் திண்மை கொண்டிருந்தாலும், தருமத்தை நிலை நாட்ட வந்த இளைஞன் ஹாம்லெத் வாழ்க்கைச் சூதில் தன்னையும் பணயமாக்கிக் கொண்டது போல், ஞானமணிப் பதிப்பகத்திலிருந்து சீட்டுக் கொடுக்கப்பட்டார்.

ஞானமணிப் பதிப்பக ஆசிரியர் அறையில் மீண்டும் கழிவுக் காகிதங்களும் குப்பைக் கூளங்களும் நூலாம்படையும் அடைய ஆரம்பித்தன.

1947

# ஐந்து கதைகள்

## 1

**கோ**ர்ட் கூடியது.

முதலில் ஒரு பாங்கி மோசடி வழக்கு. ஒரு பணக்காரன் லட்சக் கணக்கில் பணத்தைக் கையாடி விட்டான். ஜாமீனில் விடப்பட்ட அவன் கோர்ட் வாசலில், ரோல்ஸ் ராய்ஸ் காரில் வந்திறங்கினுன். வழக்கு நடந்தது: குற்றம் ருஜுவாயிற்று.

நீதிபதி குற்றவாளியின் குடும்ப அந்தஸ்து, வருஷ வருமானம் எல்லாம் விசாரித்தார். பிறகு, ''ஒரு வருஷம் சிறை, 'ஏ' வகுப்பு'' எனத் தீர்ப்பளித்தார்.

அடுத்து ஒரு வழக்கு. ரிமாண்டிலிருந்த கைதி விலங்கோடு ஆஜர் படுத்தப்பட்டான். அவன் மீது திருட்டுக் குற்றம்.

''ஏன் திருடினுய்?''

''பிழைப்பில்லை. பசித்தது. திருடினேன்.''

''நீதிபதி அவனை ஏற இறங்கப் பார்த்தார். பிறகு தீர்ப்புச் சொன்னுர்: ''இரண்டு வருஷக் கடுங்காவல்; 'சி' வகுப்பு!''

## 2

**ஊ**ரில் அரிசி இல்லை!

மக்கள் பட்டினியால் வாடினர். ரேஷன் கடைகள் சாத்தப்பட்டன. ஏன் இந்தப் பஞ்சம்?......

ஊரில் அரிசி இருந்தது!

கள்ள மார்க்கெட். ரூபாய்க்கு அரைப்படி; முக்கால் படி. இந்த அரிசி ஏது?...

சென்ற வருஷம் மகசூல் குறையவில்லை; நல்ல மேனி. என்றாலும் உழுதவன் வீட்டில் உணவில்லை; பண்ணையார் வீட்டில் மகளுக்கு நாலு நாள் கல்யாணம்.

ஏன்? எப்படி?...

அப்படியானால், அரிசி எங்கே?—இது வாடும் மக்களின் கேள்வி; பொது நலச் சங்கங்களின் கேள்வி. அரிசி இருக்கும் இடத்தை மக்கள் அறிந்துவிட்டால்—?

பண்ணையார் பார்த்தார். "தெய்வ குற்றம். மழை யில்லை. வெள்ளாமை இல்லை. அம்மனுக்குப் படைப்பு போடவேண்டும்; கொடை நடத்த வேண்டும்" என்றார்.

கொடை நடந்தது; கொடும்பாவி கட்டி இழுத்தார் கள். இந்தப் பஞ்சத்திலும் வீட்டுக்கு உழக்கு அரிசியும், ஒரு பணமும் செலவு. "மாரியம்மா, கண்ணைத்திற" என்றார்கள் மக்கள்.

அந்த ஊர் திராவிடத் தலைவர் ஒருவர் இந்தக் கூத்தைப் பார்த்தார். "சாமியாவது? சாத்தானாவது? எல்லாம் பொய். முதலில் சாமியைக் கொல்லுங்கள்" என்றார்.

பண்ணையாரையும் அரிசியையும் ஜனங்கள் மறந்து விட்டார்கள். ஊரில், கடவுள் உண்டா இல்லையா என்ற வாக்குவாதம் பலப்பட்டுவிட்டது.

3

ரேஷன் கடை முன் க்யூ வரிசை.

புழுத்த அரிசியை வாங்கப் போராட்டம்; அதுவும் பற்றாக் குறை. மீதி நாள் பாடு அப்படி அப்படித்தான். கள்ள மார்க்கெட் இருக்கவே இருக்கிறது என்ற நம்பிக்கை.

ஒரு கூடைக்காரி வருகிறாள். கூடையில் அருமையான சீரகச் சம்பா அரிசி. விலை, பட்டணம் படி ரூபாய் நாலணா.

வெள்ளை மார்க்கட்டில் கறுப்பு அரிசி.

கள்ள மார்க்கட்டில் வெள்ளை அரிசி.

ஜனங்கள் கூடைக்காரியிடம் பேரம் பேசுகிறார்கள். ஒரு ரேஷன் இன்ஸ்பெக்டர் வருகிறார். கூடைக்காரியைக் 'கையும் மெய்யுமாக'ப் பிடித்து விட்டார்.

''வா, ஆபீசுக்கு. உனக்கு இந்த அரிசி ஏது?''

''சாமி, எனக்கு அரை கால் கிடைக்கறதை, மண்ணடிச்சிப் புடாதே. வேணுமின்னா உனக்கும் அரை கால்...''

''வா என்றால்?''

அவர் அவள் கையைப் பிடித்து இழுத்தார். ''இவள் இப்படியெல்லாம் விற்கப் போய்த்தானே உங்களுக்கு நல்ல அரிசி கிடைக்கவில்லை!'' என்று ஜனங்களைப் பார்த்துப் பேசினார், இன்ஸ்பெக்டர்.

கூட்டத்திலிருந்து ஒரு முரட்டுக் குரல் பேசிற்று:

''அட சர்த்தான் போய்யா. இந்த அரிசி மட்டும் மரத்திலா காய்க்குது? இது எங்கேருந்து வருதுன்னு உன்னாலே கண்டு பிடிக்கத் திறனில்லே. அதைப் பிடுங்க மட்டும் வந்துட்டியே! நீயா எங்களுக்குப் படியளக்கிறே? இவ தான் எங்க அன்னபூரணி! விடய்யா அவளை!''

கூட்டம் கூச்சலிடுகிறது. கூட்டத்தின் எதிர்ப்பைக் கண்டு இன்ஸ்பெக்டர் அவளை விட்டு விட்டு தப்பித்துச் செல்கிறார்.

4

கல்யாணமான பெண்.

அவள் கணவன் இரண்டாம் தாரம் கொள்ளப் போவதாக அறிந்தாள். இருதாரம் கொள்வது தப்பு என்று கணவன்மீது கோர்ட்டில் வழக்குத் தொடுத்தாள்.

வழக்கு தள்ளுபடியாயிற்று. கணவன் மீது குற்றமும் இல்லை; ருஜுவும் இல்லை. இருதாரம் கொண்டால் ஒழிய, புருஷனை ஒன்றும் செய்ய முடியாது என்றார்கள் கோர்ட்டார்.

கணவன் மறுதாரம் கல்யாணம் பண்ணிக்கொண்டான்.

இப்போது கோர்ட் அவன்மீது வழக்குத் தொடுத்தது. குற்றம் ருஜுவாயிற்று. கணவனுக்குத் தண்டனை விதிக்கப் பட்டது. சிறைவாசம்; அபராதம்.

கணவன் அபராதத்தையும் கட்டி, சிறைக்குப் போனான்.

புது மனைவியும் முதல் மனைவியும் வெளியே இருந்தனர்.

5

யுத்த காலம்; 1944 அல்லது 45.

மவுண்ட் ரோடு ரவுண் டாணு; எல்பின்ஸ்டன் கொட்ட கைக்கு எதிரில், நடை மேடையில்......

நீக்ரோ சிப்பாய் ஒருவன் நின்றுகொண்டிருந்தான்.

தசரா அல்லது முஹரம் பண்டிகை. கரிவேஷம் போட் டுக்கொண்டு ஒருவன் தப்பட்டை மேள சகிதம் ஆடிப்பாடி வந்தான். நீக்ரோ சிப்பாயைக் கண்டான். அவன் எதிரே சென்று குதித்துக் குதித்து ஆடினான்.

நீக்ரோவனுக்குக் கோபம் பொங்கிற்று; கரிவேஷக்கார னைக் கன்னத்தில் ஓங்கி அறைந்தான்.

கலவரமாகி விட்டது.

நடை மேடையில் கன்னங்கறுத்த ஓர் ஆங்கிலோ இந்தி யப் பெண் அமெரிக்க 'டாமி'யோடு கைகோத்து உலாச் சென்றாள். இருவரும் அந்தக் காட்சியைப் பார்த்தனர்.

அவள் தன் இரவல் நாயகனை ஏதோ அர்த்த புஷ்டி யோடு பார்த்தாள்; புன்னகை புரிந்தாள்.

1950



